தஞ்சை சரஸ்வதி மகால் வெளியீடு எண்: 238

# சித்திர புத்திரர் அம்மானை

பேராசிரியர் கி. கோதண்டபாணி, M.A.B.O.L.
சிறப்புக் கேண்மை பதிப்பாசிரியர்,
தலைமைத் தமிழ்ப் பேராசிரியர் (ஓய்வு),
அ. வீரையா வாண்டையார் நினைவு,
திரு புட்பம் கல்லூரி, பூண்டி, தஞ்சை மாவட்டம்.



தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்
சரசுவதி மகால் நூல் நிலையம்
தஞ்சாவூர்.

1986. விலை

# PREFACE

"When a great ancient sage, a seer or a prophet of old, who came face to face with the truth, says something, these modern men stand up to say, Oh! he was a fool! But just use another name. 'Huxley says it or Tyndall', than it must be true and they take it for granted...", says Swami Vivekananda.

This is what is happening now to the Ancient Indian thought. People, not knowing the real import of it, simply neglect the sayings of the great lores. The theory of birth and re-birth sins and ultimate punishments for them, here, in this world or elsewhere or merits and enjoyment of the fruits in the form of boons - all these have been ridiculed at, by the present generation. when a fact is proved, it becomes science and when it could be understood as truth. without being proved scientifically, it is Philosophy. In other words, Philosophy is a Science based on faith.

Man has controlled his own actions by codifying rules. If he trespasses them, it is sin. If he follows them, he escapes from the punishment. If he is desirous of merits, he performs praiseworthy acts and is rewarded accordingly. The same principle when applied to one's spiritual life, is classified as Papa, Karma and Kamya.

The Indian Mythology has personified these principles. Just as in an office, where a decision is taken with the help of the case-reports, so also in the other world - let it be heaven or hell, man's merits and demerits are weighed and adjudged.

Citragupta, is such a person, responsible for the records in the Yama's court of Law. He maintains the accounts of each and every being born on earth. The Sanskrit etymological dictionary derives the world *Citragupta* thus - *Citranam, Jivakrta-papa-punyadivici -tranam, guptam, gopanam. - raksanam yasmat.* (He who protects the *dharma* from the merits and demerits performed by the beings.)

The lores dealing with the stories describing the punishments obtained by the sinners and fame attained by the meritorious, instruct didactically the path one has to choose.

This volume, an edition of *Cittiraputtirar Ammanai* which is brougnt to light as the T.M.S.S.M Series No. 238, and Seventh of the *Ammanai* type of literature released from our Library is edited by the erudite scholar Prof. K. Kothandapani.

In the introductory pages, Prof. K. Kothandapani states that this work is more or less similar to the *Naciketa-Yama* dialogue occuring in *Kathopanisad.* Knowing fully well that the pleasures of the mortal world is impermanent, *Naciketas* requests *Yama* to instruct him the knowledge of the supreme, though the latter offers profound wealth, longevity of life, sons, daughters, wives, the mastery over the earth and what not!

The author also alludes upon the celebration of *Citrapurnima* festival to propitiate *Citragupta.*

I heartily thank prof. K. Kothandapani for having taken pains to publish this manuscript in our collection. My thanks are due to Thiru A. Panchanathan, M. A., B. Lib., Sc., for the encouragement he extends to the Guest Editors. I am grateful to the Government of Tamilnadu for their financial assistance. I am also thankful to Messrs. Ram Printers, Thanjavur, for their neat execution.

*T. R. RAMASWAMY,* I.A.S.,
District Collector and Director,
TMSSM Library.

Thanjavur,
28 - 6 - 1986

# INTRODUCTION

Death is certain for all the being born on this mortal world. The Hindu Mythology has designated a God to take care of death, viz., 'Lord *'Yama'*. of the beings, every human being born on earth knows pretty well that some day it is going to perish. But the date of its decease from the earth, is the known only to that Lord of Death *(Yama)* through his keeper of accounts of every life, '*Chittiraputtira*' who is called accountant assisting '*Yama*'.

The folk-lore of Tamil call him "*'Chittiraputtira*''. It is believed that deeds-good and bad comited by every one are recorded by *Chitragupta* and that good deeds are rewarded while for bad deeds, the soul concerned is punished. The intensity of the punishment varies from throwing into the fiery-river to setting fire on the head The Ammanat literature is one among the 96 Prabandha-s of brief length; *Cittiroputtirar Ammanai* is a rare piece in Tamil, following the Upanisadic and Puranic thoughts in Sanskrit. The author of the presen work, is not known. The manuscripts have been preserved in the T. M. S. S. M. Library, Thanjavur.

I am greatly indebted to Thiru **T. R. Ramaswamy**, I. A. S., District Collector and Director, T. M. S. S. M. Library and Thirn **A. Panchanathan**, M.A., B.Lib.Sc., Administrative

Officer i/c, for offering me the Guest-Editorship for editing this work. I thank Thiru **K. Thulasia Vandayar**, Secretary of our College for having permitted me to edit this work.

*K. KOTHANDAPANI*

Retd., Professor of Tamil
Sri Pushpam **College**
POONDI.

# வேண்டுகோள்

கருணையுள்ளங்கொண்ட நம் முன்னோர்கள் அரிய பெரிய இலக்கியங்களையும், பிறவற்றையும், பனையோலைகளில் எழுதிச் சுவடிகளாக நமக்குத் தந்தனர். அவைகள், பல்வேறு இடங்களில் உள்ளன. சுவடிகள் பழுதடைவதற்கு முன் எம்மிடம் அன்பளிப்பாகக் கொடுத்துதவினால், அவைகள் மக்களுக்குப் பயன்படும்.

எம்மிடம் கொடுப்பதன் மூலம், சுவடி தந்தவர்களும், சுவடி எழுதியோரும் அழியாப் புகழை எமது சரசுவதி மகால் உள்ளளவும் பெறுவர். அவை பதிப்பாகி வருமாயின், சுவடி தந்தார் பெயரும் இடம் பெறுவதோடு, அப்பதிப்பில் 5 பிரதிகளும் பெறுவர்.

எனவே, ''நாம் பெற்ற பேறு பெறுக இவ் வையகம்'' என்ற எண்ணமுடைய நற்பண்பாளர்கள் தம்மிடமுள்ள சுவடிகளை, எமது மகாலுக்குத் தந்துதவ வேண்டுகிறோம்.

இங்ஙனம்,

T. R. இராமசாமி, I. A. S.,
மாவட்ட ஆட்சியர் & இயக்குநர்,
சரசுவதி மகால் நூலகம்.

தஞ்சாவூர்,
28-6-86

# பதிப்பாசிரியர் முன்னுரை

## அறநூல் தோற்றம்

உலகில் தோன்றிய உயிரினங்கள் தோற்றம் எய்துவதைப் போலவே மறைவு எய்துவதும் படைப்பின் இரகசியமாகும் உலக உயிரினங்களைப் படைத்த இறைவனுக்கு ஓரறிவு உயிர் முதல் ஆறறிவுடைய உயிர் வரை அனைத்தும் சமமேயாகும். தோற்றம் எய்தும் அனைத்தும் இறப்பினை எய்துவது இயற்கை என அறிந்திருந்தும் அதனை உணராது வாழும் அஃறிணையுயிர்ப் படைப்புக்களும், உயர்திணை உயிரினங்களும் உலகில் உலவுவதனைக் கண்கூடாக இன்றும் காண்கின்றோம். ஆகவே மரணத்தின் பின் மக்கள் - மாக்களது நிலை என்ன என்பதனையும் வாழும்போதே யாரும் சிந்திப்பது இல்லை. அவ்வாறே சிந்திப்பார்களேயானால் சிந்திப்போர் வாழ்வு சிதைவுறாது. மற்றவர்கட்கும் தீங்கு நல்காத செம்மை வாழ்வாக அமைந்துவிடும். இதனை வலியுறுத்தி இம்மை வாழ்வில் நல்லன செய்யவும், அல்லன கடியவும் அறம் ஓம்பவும், மறம் நீக்கவும், பல அறநூல்கள், நீதி நூல்கள், இதிகாச புராணங்கள் நம் பாரத நாட்டிலும் சிறப்பாகத் தமிழகத்திலும் தோன்றின. இம்மை வாழ்வில் அறம் இயற்றியோர் மறுமை வாழ்வில் மறுவின்றி வீடுபேறு எய்துவர் என்று திறனறிந்து நம் நீதி நூல்கள் அறமுரைத்தன. இம்மையில் பிறர்க்கு இன்னல் செய்து மறமுனுற்றி அல்ல செய்தொழுகும் அறமிலிகள் மறுமையில் இறைவனால் - இயமனால், அவனது பரிவாரங்களால் சிறப்பாகச் சித்திர புத்திரன் அவனது பணியாளர்களாகிய கிங்கிலியர்களால் தண்டிக்கப்பட்டு நரக வேதனையில் உயக்கப்படுவர் என்றும் அறம் கூறுகின்றது. பிறந்தோர் கணக்கினை உறுதிப்படுத்தி ஏட்டைப் புரட்டு

பவன் இயமன் என்பதனை "*நனி பேதையே! நயனில் கூற்றம், விரகின்மையின் வித்தட்டுண்டனை" என்று புறநானூறு கூறுவதனை உணர்கின்றோம். இலக்கியங்கள் இவனை, சமன் செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்து நடுநிலையோடு பணி செய்வதால் 'இயமதர்மன்' எனவும், காலம் உணந்து கடிதின் எய்தி உயிர்களைக் கவர்வதால் 'காலன்' எனவும், கண்ணோட்டமின்றி இளையோரையும், காளையரையும், கடமையாற்ற வேண்டியவர்களையும் கவர்வதால் 'கண்ணிலி' என்றும் உயிர் வாழும் நாட்களைக் கூறுபடுத்துவதால் 'கூற்றுவன்' எனவும் கூற்றம் என்றும் நம்மவர்க்கெல்லாம் உடைமையானவனாகலின் 'நமன்' எனவும் அழைக்கின்றன. அக் கூற்றுவனுக்குக் கணக்கராய் அமர்ந்து ஒவ்வொரு படைப்பின் கால்க்கெடுவினையும் குறித்து வைத்தும் அவைகள் வாழ்நாளில் ஆற்றிய நல்லன, தீயன கருதி குறித்துப் போந்த கோமகனே இயமனின் அந்தரங்க அலுவலர் சித்திரபுத்திரன் என்றும் இலக்கியம் கூறுகிறது. இதனை பெரிய திருமொழியில் ஐந்தாம் பதிகத்தில் "அரவணையாழியான் காப்பாற் பிணி போக்கல்' என்ற தலைப்பில் பெரியாழ்வார்,

**வைணவக் கருத்து**

"சித்திரகுத்தன் எழுத்தால் தென்புலக்கோன் பொறி யொற்றி
வைத்த இலச்சினை மாற்றித் தூதுவர் ஓடி யொளித்தார்
முத்துத்திரைக்கடல் சேர்ப்பன் மூதறிவாளர் முதல்வன்
பத்தர்க் கமுதன் அடியேன் பண்டன்றுபட்டினம்காப்பே"

---

*புறநானூறு 227ம் பாடல்.

என்ற பாடற்குறிப்பால் சுட்டுகின்ருர். மேற்கண்ட உண்மை இலக்கிய - சமய ஆசிரியர்களால் ஏற்றுக் கொண்டிருந்த உண்மை என்பது புலனுகின்றது. மேலும் ஆழ்வார் திருவாய் மொழியில் *"பொலிக! பொலிக! பொலிக! போயிற்றுவல்லுயிர்ச்சாபம்

நலியும் நரகமும் நைந்த நமனுக்கிங்கியா
தொன்றுமில்லை
கலியும் கெடும் கண்டுகொண்மின் கடல் வண்ணான்
பூதங்கள்மண்மேல்
மலியப்புகுந்து இசைபாடியாடி உழிதரக் கண்டோம்.

என்ற பாசுரத்தில் அறிதுயிலமரும் அண்ணல் ஸ்ரீமந் நாரணன் அருளால் நமனுக்கும் இங்கு வேலை இல்லை. நரகிலும் இடரில்லை ஆகவே உயிரினங்களே! அவன் இணையடி பற்றி ஈறில் இன்பத்துள்மூழ்குங்கள் என்று வேதம் தமிழ்ச்சொன்ன வித்தகர் நம்மாழ்வார் கூறு கின்ருர். அடுத்து 'குன்றெடுத்து' என்ற பாசுரத்தில் 'நன்றும் கொடிய நமன்தமர்கள் நலிந்து வலிந்தென்னைப் பற்றும் போது அன்றங்கு நீ என்னைக் காக்க வேண்டும்' எனப்பெரியாழ்வார் தன் திருமொழியில் அரங்கனை மன்ருடி வேண்டுகின்ருர். கி பி. 7ம்நூற்ருண்டில் வாழ்ந்த நாவரசப் பெருந்தகையும் "நாமார்க்கும் குடியல்லோம் நமனையஞ்சோம் நரகத்தில் இடர்ப்படோம் நடலை இல்லோம்" என்று இறைவன் அருளால் இயமபயமும் நரக வேதனையும் இல்லையென்று எடுத்துக்கூறுகின்ருர். மேலும் திருஞானசம்பந்தர் 'திருநெடுங்களப்பதிகத்தில்' நின்னடியே வழிபடுவான் நிமலா நினைக்கருத என்னடியான் உயிரை வவ்வேல் என்று அடல் கூற்று உதைத்த

*நாலாயிரத் திவ்யபிரபந்தம் - 3128ம் பாசுரம் - நம்மாழ்வார் திருவாய்மொழி

பொன்னடி என்ற பாடலும் மேற்கண்ட கருத்தினை வலியுறுத்து கிறது.

## திருவிளையாடற் செய்தி

அடுத்து, அழல்நிறக்கடவுளாம் ஆலவாய் அண்ணலாகிய மதுரைச்சோமேசர்நிகழ்த்திய அறுபத்துநான்கு திருவிளையாடல்களை விளக்கிக் கூறும் திருவிளையாடற் புராணத்தில் 'பழியஞ்சிய படலம்' என்ற பகுதியில் வரும் செய்தி இக்கருத்தினுக்கு அரணாக அமைகிறது. மதுரைக்கு அண்மையில் அமைந்துள்ள 'திருப்புத்தூர்' என்னும் செழும் பதியில் தோன்றிய ஓர் அந்தணன் தன் கருவுற்ற மனையாளை அழைத்துக் கொண்டு மாமனார் இல்லத்தையடைய மதுரைக்குச் செல்கின்றான். அவ் வமயம் பார்ப்பனி சோர்வுற்றுத் தளர்ந்து ஒரு ஆலமரத் தின் நிழலில் அமர்ந்து வெப்பம் போக்கி, நீர் வேட்கையால் தண்ணீர் பருகத் தன் கணவனை நீர் கொணருமாறு வேண்டுகின்றாள். கடுங்கதிர் வெப்பத்தால் சோர்ந்து வந்த பார்ப்பன நங்கை மரநிழலின் தண்மையில் தன்னை மறந்து உறக்கம் கொண்டு விட்டாள். நீர் கொணரச் சென்ற பார்ப்பன நம்பி சற்று நேரத்தில் விரைந்து வந்து உறங்கும் தன் மனையாளை எழுப்பி நீர் அளிக்கும் போது அவளது சூல் கொண்ட வயிற்றில் அம்பு பாய்ந்து இறந்திருப்பது கண்டு அலமந்து துடித்து அலறுகின்றான். ஆலமரநிழலின் பிறிதோர் புறத்தே மிருகங்களின் இயக்கங்களை உற்று நோக்கியவாறு அம்பும் வில்லும் கையிலேந்தி நிற்கும் வேடனொருவனை அந்தணச் சிறுவன் கண்டு அவனே தன் மனையாளைக் கொன்றிருக்க வேண்டுமென்று முடிவுசெய்து அவன் மீது கொலைக்குற்றம் சாட்டி அவனை அழைத்துக்கொண்டு இறந்த, தன் மனைவியைத் தோளில் சுமந்து கொண்டு பாண்டியன் முறை செய்யும் மதுரை மாநகர் சென்று பாண்டிய மன்னன் முன் வழக்

றுரைக்கிறன். கொலைக் குற்றம் சாட்டப்பட்ட வேடனே தனக்கு இக்கொலையில் எவ்விதச் சம்பந்தமுமில்லை என்று கூறி மறுத்து விடுகின்றன். மேலும் அவன் செயலும், சொல்லும், நிலையும் அவனை நிரபராதி என நிரூபித்தது. மிகவும் இக்கட்டான சூழ்நிலையில் நீதிவழங்க இயலாத மன்னன், முறை செய்து காப்பாற்ற வேண்டிய மன்னன் வழக்கின் நுண்மையை உணரக்கருதி உடனே பார்ப் பனனுக்குச் சிறுதொகையளித்துப் பார்ப்பனியின் கரும காரியங்களைக் கவனித்துவர அனுப்பிவிட்டு வேடனைச் சிறையிலிடுமாறு ஆணையிட்டான். இச்சிக்கலான வழக் கிற்குத் தீர்வு கூற வல்லான் சிவபிரானேயன்றி வேறு யாருமிலர் என எண்ணி அன்றிரவே ஆலவாய் அண்ணல் அடிக்கமலம் பற்றிப் பாடுகிடக்கத்தலைப்பட்டான். பாதம் பற்றி பரமனைத்தீர்வு அளிக்கவும் வேண்டினன். இறைவன் பாண்டி மன்னன் கனவில் தோன்றி மறுநாள் நிகழ விருக்கும் வணிகன் வீட்டுத் திருமணத்திற்கு மாறு வேடத்தில் நீங்களிருவீரும் சென்றீர்களானல் உண்மை உணர்வீர்கள் என்றுகூறி மறைந்து விட்டார். அசரீரியின் கூற்றின் வழியே அந்தணனும் அரசனும் மாறுவேடத்தில் மறுநாள் வணிகன் வீட்டுத் திருமணத்திற்கு வைகறையில் சென்றனர். அவ்வமயம் காலதூதர்கள் மணமகனது உயிர்குடிக்க வந்துள்ளனர். திருமணக் கோலத்தில் உள்ள மணமகனுக்கு ஆயுள் அன்ருேடு முடிகிறது. எவ்வாறு இவன் உயிர் கவர்வது என்று அவர்கள் உரை யாடுவது இவர்கட்கு மட்டுமே புலனகின்றது. இது என்ன பெரிய காரியம் நேற்று இளம் பார்ப்பனியின் உயிரைக் கவரவில்லையா? முன்னரே ஆலமரக்கிளையில் பாய்ந் திருந்த அம்பினைச் சிறு காற்றுல் உலுப்பி அவள் அடி வயிற்றில் பாயச்செய்து கொல்லவில்லையா? அதுபோல இம்மணமகனையும் ஊர்வலஞ் செல்லும்போது ஒரு கொல் லேறு (பாய்ச்சல்காளை) மருண்டு வந்து தன் நீண்ட கோட்டால் குத்திக்குடல் தள்ளுமாறு செய்து கொன்று

விடுவோம் என்றனர். உடனே உண்மை நிலை சிறிது நேரத்தில் இருவருக்குமே விளங்குமாறு வெளிப்பட்டு விட்டது. பின்னர் இருவரும் தெளிவு எய்தினர் இறைவன் திருக்கருணையால். இவ்வாறு காலம் அறிந்து கண்ணோட்டமின்றி கவரும்காலன் இயமதர்மன் என்றும் கண்ணிலிஎன்றும் இலக்கியங்களால் அழைக்கப் படுவ தனை அறியலாம்.

**சித்திரபுத்திரர் அம்மானை**

**நரசிகேது புராணம்**

இவ்வாறு இலக்கியங்கள் பேசுகின்ற இயமனைப் பற்றியும், அவனது தலைக்கணக்கராய் அமர்ந்து உலக உயிரினங்களின் வாழ்நாட் கணக்குகளையும், அவைகள் இயற்றும் பாவ புண்ணியங்களையும் கணக்கிட்டு ஏட்டில் பதிந்து பின்னர் கூடுவிட்டு ஆவிபோனவுடனே அவை கட்கு என்னென்ன நியாயங்கள் விதிக்கப்பட வேண்டும் நரகத்திற்கு அனுப்பி நலிவுறுத்த வேண்டுமா அல்லது மோட்சத்திற்கு அனுப்பிச் சிறப்பு அளித்து வாழ்விக்க வேண்டுமா என்று விதிக்குஞ் சித்திர புத்திரரைப் பற்றியும் இந்நூல் அம்மானை என்னும் இலக்கிய உருவில் அமைந்து சித்தரித்துக் காட்டுகிறது. அம்மானை தொண்ணூற்ருறு வகை தமிழில் வழங்குஞ் சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்ருகும். சித்திரகுத்தன் அத்திபுரத்தின் அரசனுகவும், பசு ஈன்ற நிலமன்னராயும், இந்திரன் மைந்தராயும் விளங்கி சிறந்து வாழ்ந்தவராக இந்நூல் விளக்குகின்றது. இந்நூலைக் கற்றவரும், கேட்டவரும் அடையும் பயனை இந்நூலாசிரியர் இனிமையாக விளக்கு கின்ருர். சித்திரை மாதம் சித்திரை நட்சத்திரம் கூடிய முழுமதி நாளாம் பௌர்ணமியன்று சித்திர குத்தவிரதம் மேற்கொள்ளுவார்கள். பொன், வெள்ளி இவைகளா லான பதுமைகளில் சித்திரகுத்தனை இருத்தி நியமப்படி

வழிபாடு செய்வார்கள் வெண்பொங்கல் அடிசில் வெல்லம் கலந்த எள், பால், நெய் முதலியன படைத்து வழிபடுவார்கள். முடிவில் பாயசம் நிறைந்த வெண்கலப் பாத்திரத்தினை தானமாகக் கொடுப்பது வழக்கம். இவ் வழிபாட்டின்பின் ஓமம், தானம், அந்தணர்க்குணவு படைத்தல் முதலியன செய்வது நியமமாகும். அன்று எல்லாப் பலன்களையும் கொடுக்க வல்ல 'இந்திர வழிபாடு' செய்தல் வழக்கம் எனத் தேவி புராணம் செப்புகின்றது.

இந்நூலாசிரியர் பெயர் அறிய இயலவில்லை. இவர் சைவ சமயச்சார்பினர் என்பது பல சான்றுகளால் விளக்க முறுகின்றது. உலக நடையினைத் தழுவி இக்காவியம் 'அம்மானை' வடிவில் எளிய இனிய நடையில் யாக்கப் பட்டுள்ளது. சுருக்கமாக இந்நூல் 'நாட்டுப் பாடல்' முறையில் எழுந்து அம்மானையாக உருப்பெற்று வழி வழியாக இந்நாட்டினரால் படித்தும் கேட்டும் பாரம்பரிய மாக வந்துள்ளது என அறியலாம்.

## நாசிகேது புராணம்

இச் சித்திரகுத்தன் அம்மானை பெரிதும் நாசிகேது புராணச் செய்தியினை ஒத்து விளங்குவதனை உணரலாம். இந் நாசிகேதுவின் வரலாறு மகாபாரதத்திலும் உபநிட தங்களுள் ஒன்ருகிய 'கடோபநிஷத்திலும் விளச்கமாக உரைக்கப்பட்டுள்ளது. வாழ்வினை நன்னிலைப்படுத்தி மனத்தினை தூய்மையாக்கி மெய்ப்பொருளில் ஆர்வம் செலுத்துவோர்க்கு இத்தகு உபநிடதங்களைப் போல் உதவும் நூல்கள் உலகில் வேறொன்றுமில்லை என்று கூறலாம்.

இங்கு குறிப்பிடும் நாசிகேது என்பவன் இயமனது உலகிற்கே சென்று அவனோடு ஆன்ம விசாரணையிலீடு

பட்டுவந்த வரலாறு கூறுகின்றது. அறஞ் செய்தோர் அடையும் மோட்ச இன்பமும், பாவஞ் செய்தோர் அடையும் நரகத் துன்பமும் இதில் விளக்கமாகக் கூறப் பட்டுள்ளது இந்நூலில் கூறப்படும் எமஉலகச் செய்திகள் மரணத்திற்குப்பின் ஆன்மாக்கள் அதாவது உயிரினங்கள் அடையும் பதவிகள், தண்டனைகள் முதலியனவாகும். மரணத்திற்குப்பின், இயமதர்மன் உயிரினங்கட்கு அவை யவை செய்த பாவ புண்ணியங்கட்கு ஏற்ப தீர்ப்பு வழங்கு கின்றான். ஆக ஒவ்வொருவரது பாவ புண்ணியக் கணக்குகளும் ஏட்டில் எழுதி பொத்தகமாகச் சித்திர குத்தனால் எமனது திருவோலகத்தில் காத்து வைக்கப் பட்டுள்ளன எனக் கூறுகின்றது இவ்வம்மானை நூல்.

**பாவபுண்ணியப் பலன்கள்**

திருக்கோயில் எடுத்தாரும், திருமடம் சமைத்தாரும் திருவிளக்கிட்டாரும். திருநந்தவனம் அமைத்தாரும் திருமாலைபுனைந்தாரும் திருஅலகிட்டாரும் கூவல்தொட் டாரும், குளம் அமைத்தாரும், உண்கலம் அளித்தாரும் உணவு உடை அளித்தாரும். சான்றோரைப் போற்றி யோரும், தருமப்பணி நடத்தியோரும், பிறர்மனை, பிறர்பொருள் விழையாதாரும் கற்பொழுக்கம் குன்றாத வரும், கடமையினைப் போற்றியோரும், குருவினைவழி பட்டோரும் சிவபூஜை செய்தோரும், மாதா பிதாக்களை மதித்தோரும் ஆகிய இத்தகு நல்லோர் நல்ல ஆத்து மாக்கள் சாந்தும் - சந்தனமும் புனைந்து முத்துப்பந்தர்க் கீழ் - சிங்காதனத்தில் வீற்றிருக்கும் தகுதி பெற்றவர் என இந்நூல் விளக்குகின்றது.

இனிப் பாவம் ஆற்றிய ஆன்மாக்கள்படும் சித்திர வதையினையும் செப்பும் திறனை நோக்குவோம். முன்னோர் நிறுவிய அறங்களை அழித்தவர்களும், நஞ்சிட்

டுக் கொன்ருரும், குருக்களைக் கொன்றவர்களும் குடிகேடு செய்தவர்களும், மன்றில் ஓரஞ்சொன்னுரும், திருக் கோயிலில் செருப்பணிந்து சென்ருளும் வஞ்சனைக் கொலை ஒரும், வழிப்பறி செய்தோரும், பெண் கொலை புரிந்தோரும், அறவோரை வதைத்தோரும்,அந்தணரைக் கொன்ரேரும், அழிவழக்குரைத்தோரும் பணிகொண்டு கூலி கொடாதாரும், மண்ணும், பதரும் கலந்து கூலமளந் தோரும், இருதாரங்கொண்டு ஒருதலையாய் நடந்தோரும் தாய் தந்தையரை வருத்தியோரும், சிவனை வழிபடா தோரும், சிவனடியார்த் தூற்றியோரும், கோள் உரைத் துப்புறங் கூறிஞேரும் இறைவனுக்குச் சாத்த ஏந்திய மலர்மாலையினை நுகர்ந்து பார்த்த தீயரும், கட்டிய மனைவியை விடுத்துப் பிறர்தாரம் விரும்பிய பேதை யினையும் கணவனை வஞ்சித்த காரிகைகளையும் நந்தனம், அழித்தாரும் அம்பலம் அழித்தாரும் நம்பியோரைக் கெடுத்தவரும் கற்புறு மங்கையினைக் கொன்ரேரும், சரணடைந்தோரைத் தண்டித்தோரும், ஈயாது உண்ட வரும், பசுக்களை வதைத்தாரும், இறைவடிவைச் சிதைத் தோரும், கொடுத்த கடன் கொடாதவரும், காட்டில் உறையும் மிருகங்களையும், வானில் பறக்கும் பறவை களையும் கூட்டில் அடைத்தவரும் வழிநிழல் தருவினை வெட்டிச்சாய்த்தோரும், அடையும் தண்டனைகளை விளக்கமாக இந்நூல் விரித்துரைக்கின்றது.

## பாவஞ் செய்தோர் நரகில் படும் வேதனை

காய்ச்சிய இரும்பூசிகளைக் கண்ணிலே செலுத்த அலறித் துடிப்பார் சிலர். தலைகளைக் கொத்தி அதில் விளக்கெரிக்கும் போது துள்ளித் துடிப்பார் சிலர். இரும்பு நாராசங்களைக் காய்ச்சி காதிலே செலுத்த அலறி விழுவார் சிலர். நெருப்பெழச் செய்த இரும்பு தூண்களை இறுகத் தழுவலால் இளைந்து விழுவார் சிலர். பற்றி

எரியும் அனலில் பற்றி வீழ்வார் சிலர். காய்ச்சிய எண்ணெய்க் கொப்பரையில் கதறி விழுவார் பலர். கையிலே கிட்டியிடக் கதறித் துடிப்பார் சிலர். பலவகைப் புழுக்களும், முதலைகளும் உலவித் திரியும் நூறு யோசனை ஆழமும், அகலமும் உடைய நரகில் பட்டுழல்வோர் பலர். இவ்வாறு பலவகையான பாவ ஆன்மாக்களும் எய்தும் சித்திரவதையினை இந்நூல் செம்மையாக விளக்குகிறது. மேலும் இவ்வுலகில் சித்திர குத்தருக்குச் சித்திரைப் பௌர்ணமியில் நோன்பு நோற்று விரதம் மேற் கொள்ளாத ஆடவர், பெண்டிர் எய்தும் அவதிகளையும் துன்பங்களையும் மிகுதியாக இந்நூல் விரித்துரைக்கிறது. மாறாக சித்திரபுத்திரர் நாளாகிய சித்திராபௌர்ணமியில் பாற் பொங்கலிட்டுப் பாயசம் செய்து எள்ளுருண்டை கருப்பஞ்சாறு முதலியன படைத்து வழிபட்டார் எய்தும் சிறப்பினையும் இந்நூல் நன்கு விளக்குகின்றது. சுருக்க மாக, இந்நூல் ஆன்மாவினைப் பற்றி விசனப்படாது எதனையும் செய்யலாமென்று மறுமையினைச் சிந்தியாது 'கண்டதே காட்சி, கொண்டதே கோலம்' என்று வாழும் குறிக்கோள் இலாது வாழும் மாந்தர்கட்கு இடிப்புரை கூறி மறுமையில் 'செல்லுந் தேயத்திற்கு உறுதுணை, தேடுமாறு அறிவுரைகூறும் ஆன்ம நூலாகவும்' இரட்சண்யப் பாதுகாவலாகவும் விளங்குகின்றது.

**நிறைவுரை**

நிறைவாக அறம் சிதறி முறை தவறி, பாழ்பட்டு நிற்கின்ற இன்றையப் பாருலக மக்கட்கு இந்நூல் ஒரு கைவிளக்குப் போல் பயன்படும் கருவிநூலாகும். இந் நூலைக் கற்போர் கற்றவாறு நிற்கத் தலைப்பட்டால் இந்நாடு நலம் பொங்கி அறமலிந்து வாழும் பேறு பெற்றோங்கும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

**நன்றியுரை**

இத்தகைய சிறப்புறுநூல் இந்நூலகத்தில் M No 400 என்ற எண்ணுள்ள தமிழ்ச் சுவடியாகச் சிதைந்தும் சிதலரித்தும் விளங்கின. படியெடுக்கப்பட்டுமிருந்தது. இதனை நன்முறையில் பதிப்பித்து வெளியிட என்னை அழைத்த மேதகு தஞ்சை மாவட்ட ஆட்சியரும், இந் நூலக இயக்குநருமாகிய திரு T. R. **இராமசாமி** I. A. S. இவர்கட்கு என் உளம் நிறைந்த நன்றியினை உரித் தாக்குகிறேன் இந்நூலிற்கு நல்ல முன்னுரை, விளக்கக் குறிப்பு. அறிமுகம் முதலியன ஆங்கிலம் தீந்தமிழ் ஆகிய இருமொழிகளிலும் எழுதியளிக்க வேண்டிய நூலகப் பொறுப்பு அதிகாரி திரு. **பஞ்சநதன்** M.A., B. Lib.,Sc. அவர்கட்கும், என்னை இப்பணியை ஏற்க அனுமதித்த எங்கள் கல்லூரி ஆட்சிக்குழுச்செயலர், தாளாளர், கல்விக் காவலர், தத்துவ நெறியாளர் மேதகு. உயர்திரு. **கி. துளசிஐயா வாண்டையார்** அவர்கட்கும் என் ஆழ்ந்த நன்றி உரித்தாகுக. நிறைவாக என்னை இப்பணியில் உய்த்த உயர்வறை உயர்நலமுடைய உத்தமன் திருவடி போற்றி தமிழன்னைக்கு இப்புதிய அணியைப்புனைவிக் கின்றேன்.

அன்பன்,

பேராசிரியர் **கி. கோதண்டபாணி,**

**தஞ்சாவூர்.**

# "சித்திர புத்திர ரம்மானை"

ஹரி ஓம் நன்ருக

"சித்திர புத்திரனர் தெய்வத் திருக்கதையைக்
கற்றவரும் நோற்றவரும் காசினியில் ஒத்திருந்து
கேட்டவரும் என்றும் கிளைவாழ வாழ்ந்திருப்பார்
காட்டானை மாமுகனே காப்பு"

சிவமயம்

நன்ருக.

அத்தி முகனே அறுசடையோன் புத்திரனே
விக்கின விநாயகனே! வேறு வினை வாராமல்
அப்ப மதிரசம் தேன் அவல் பொரி யெள்ளுண்டை
5 எப்பொழுதும் யான் தருவேனென் வினைகள் தீர்த்தருள்வாய்
என்வினை தீர்த்தருள்வா யிந்திரனர் புத்திரற்கு
செந்தமிழை யான்பாட திருவாக்குத் தந்தருள்வாய்
வாக்கு முழுதும் வாழ்வு மிகவே தருவாய்
மோக் கிழமும் தந்தருள்வாய் முக்கணான் தன்புத் திரனே
10 தஞ்ச முனக்கே சரணமுந் தன் தாளிணைக்கே
அஞ்ச லெனை முன் நடவீர்! ஆனை முகப் பிள்ளையீரே!
மூத்த விநாயகனே முக்கணனே வேலவனே
போற்றி திருமாலயனே பூலோக தேவதையே
வாலே சுவரியே மகமாயியே உமையே
15 தாயே சரஸ்வதியே! தற்காத்துக் கொண்டருள்வாய்
அத்திர புரத் தரசே யாவீன்ற பூவேந்தே

---

நோற்றவர்—தவஞ்செய்தோர்; கிளை—சுற்றம்;
அத்தி—யானை; அஞ்செழுத்து—நமசிவாய; பவுசு—சிறப்பு;

சித்திர புத்திரரே சிவனே! சிவாய நம
அஞ்செழுத்தை பஞ்சாட்சரமே யனைத்துயிர்க்கும்
மெய்யே
நெஞ்சகத்தே புக்கிருந்து நித்தம் வரு சித்தருள்
வாய்!

20 சித்தி யருளும் சிவபரமுந் தானருளும்
பத்தி முத்தி புத்தி வித்தை பாக்கிய மெல்லாமருளும்
எல்லாப் பிழையும் பொறுத்தருளும் என் கோவே!
கல்லாதார் நெஞ்சத்தில் கற்பகமாய் வீற்றிருப்பீர்
எப்போதும் எப்பொழுதும் ஏழையர்க்கே அன்புதந்து

25 தப்பாமல் வந்திருந்து சந்ததமும் வாழ்வு நல்கும்
கற்றுணர்ந்த பேர்க்குக் கன பவு சுண்டாக நல்கும்
உற்றிருந்து கேட்டபேர்க்கு உதவிகளுண்டாக
நல்கும்
முத்தமிழ் நூல் தன்னை யுரைத்தோர்க்கும்
கேட்டோர்க்கும்
புத்தி மிக வுண்டாகப் புண்ணியரைக் கண்பாரும்

30 சித்திர புத்திரனார் தெய்வத் திருக்கதையில்
பத்தி லொன்று காணுது பாடியது பாவலரே
பாவலரே உங்களுடைப் பாதந் தொழு மடியேன்
பூவுலகோர் முன்பாய்ப் புகலரிய செந்தமிழைத்
தெய்வீக மாயறிந்து சிந்தை மகிழ்ந்
தோதுகின்றேன்.

35 ஐயமறக் கேளீர் அரியோர் பெரியோர்கள்
கற்றவர்கள் கேட்டவர்கள் காசினியில் உள்ளவர்கள்

---

அத்தர் - இறைவன்; போதம் - அறிவு
இச்சகம் - புகழுரை; உள்வினைகள் - வஞ்சகச் செயல்;
ஆசு மதுரம்-கவி வகைகள்; பையல் - பயல் என்பதன் மருஉச் சொல்
அசங்க தங்கள் - தீமையான செயல்கள், இடையூறுகள்

அத்தரருளாலே அசங்கதங்கள் பண்ணுதே
ஏது பிழையானாலும் ஏழையேன் புன்சொல்லினை
போதமுடன் கேட்டுப் பொறுத்தருளும் புண்ணியரே

40 தெய்வத் திருக் கதையைச் சீரதனை ஒத்துப் பார்த்
தையப் படாமல் அவையடக்கம் கூறலுற்றேன்
நன்பால் புகலறியேன் நல்லோர் பாற்
சொல்லறியேன்
என்பே ரெழுதறியேன் இட்ட கரிக்குப் பறியேன்
இட்ட கரிக்குப் பறியேன் இச்சகங்கள் பேசறியேன்

45 ஒட்ட மென்ற பேர்க்கு மறுவுத்தாரஞ்
சொல்லறியேன்
உத்தாரஞ் சொல்லறியேன் உள்வினைகள்
செய்யறியேன்
வித்தாரம் பண்ண முகவிச்சை சொல்ல நானறியேன்
ஆசு மதுரம் அறிந்து கவி யோ தறியேன்
ஈசர் திருவருளும் ஏதோ வென வறியேன்

50 ஒன்று மறியேன் உரைத்த திருக்கதையைப்
புண்ணியரே கேட்டுப் பொறுப்ப துமக்கே புகழ் காண்
ஓதுந் தமிழோர்க்கு உற்றேவல் செய்து மலர்
பாதந் தொழு தேத்தும் பையல் நான் பாவலரே
என்னாலே நானுமியன்ற மரியாதை சொன்னேன்

55 நன்னாவலர்கள் நகையாமல் கேட்பது போல்
மைந்தன் தனதுமொழி மாதாக்கள் கேட்பது போல்
எந்தன் மதுரமொழி எல்லோருங் கேட்டிருங்கோள்

---

ஈசுரர் - இறைவன்; செண்பகம் - கானங்கோழி; பறவையினம்
சித் தெறும்பு - சுற்றெறும்பு வழக்கியலில் எதுகை நோக்கி
சித்தெறும்பு என ஆயிற்று
நாக்கப் பாம்பு - நாங்கூழ்ப் புழு
சத்த சமுத்திரம் - ஏழு கடல்கள் (சப்த சமுத்திரம் என்பது இவ்வாறு
சதத சமுத்திரம் - என வழக்கில் எதுகை நோக்கித் திரிந்தது

எல்லோருங் கேட்க எளியோனு மிக்கதையை
சொல்லால் உகந்துரைத்தேன் சொல்லறிந்த
பேர்களைப் போல்

60 தாந்தா னறிந்தவர் போல் தண்டமிழ்நூல்
வல்லவர் போல்
ஏந்தா னிவன் மொழிந்தா னெண்ணுதே யிக் கதையை
சாத்திரங்கள் ஓதுகின்ற சாதிமறை வேதியர் முன்
சூத்திரரும் பார்த்து மிகச் சொன்னவர்கள் மெய்க்
கலையோ
வல்லார் வலுவுள்ளார் வாயுள்ளார் வாழ் நகரில்

65 இல்லாதார் சொல்லாதார் ஏழைகளும் வாழலையோ
ஏழுகடல் சூழ் புவியில் இராசாதி ராசருடன்
கோழையதி யாரியருங் கூடவர சாளலையோ
நல்லதொரு செங்கழுநீர் நந்தாமரைத் தடத்தில்
அல்லிகளும் கொட்டிகளும் ஆம்பல்களும் நிற்கிலையே

70 காவேரித் தண்ணியுடன் கழிவாய்க்கா லோடலையோ
ஈவாயிற் றேனும் உகந் தீசுரர்க்கு ஏறலையோ
முத்தமிழோர் முன்பு சிலர் மொடரகவி பாடலையோ
அத்தன்மைத் தானெக்கு மடியே னுரைத்த தமிழ்
சத்த சமுத் திரங்கள் தன்னைச் சதிருடனே

75 சித்தெறும்பு தானருந்த சிந்தைதனி லுற்ற தொக்கும்
நாகமிருந் தாடுதென்று நாக்கப் பாம்பு தானுமொக்க

---

ஈசுரர் – இறைவன்; செண்பகம் - கானங்கோழி, பறவையினம். சித்தெறும்பு - சிற்றெறும்பு வழக்கியலில் எதுகைநோக்கி சித்தெறும்பு என ஆயிற்று.

நாக்கப்பாம்பு – நாக்கூழ்ப்புழு;

சத்தசமுத்திரம் - ஏழு கடல்கள் (சப்த சமுத்திரம் என்பது இவ்வாறு சத்த சமுத்திரம் என வழக்கில் எதுகை நோக்கித் திரிந்தது.

தாக முடனுடி தவசாய்த் திரிந்த தொக்கும்
பம்பை மயிலாடு தென்று பாத்திருந்து கானகத்தில்
செண்பகமுங் கூடச் சிறகுவிரித் தாட லொக்கும்

80 தலையில் துரும்பெடுக்க .......... யிருந்தோர்
மலையிற் சரகெட்டி வாரியிழுத்த தொக்கும்
நாயடியேன் சொன்ன தமிழ் நன்றுதீதே யானாலும்
தாயகமே கொண்டு பொருந் தம்பிரா னன்மை தரும்
நன்மைதரும் வண்மைதரும் நல்லபவுசும்தரும்

85 உண்மைகொடு கேட்டருளும் உத்தமத்தி லுத்தமரே
வென்றியுள்ளோ ரோதுகின்ற வேதபுராண நூலை
இன்னதிது வென்னுமல் ஏழையேன் பாடுகிறேன்
ஆராதனை செய் தடியே னின் பாலுகந் தோர்
தீராவினை தீர்த்த தீட்ச குரு வானோர்கள்

90 துய்ய மறையோதுந் துரைசை நகராதிபதி
சைவ குல மாமுனிவர் சற்குரு வாசாரியர் கோன்
மாணிக்கக் கூத்தான மலர்த்தாள் தொழுஞ் சீஷன்
ஆணிப் பொன் மார்பன் அதிவீர ராட்சதன்றன்
பட்டணத்தில் வாலனுக் கனபார பதினெண் விசையன்

95 சிட்டபரிபாலன் சிவனுர் திருப்பேரன்
ஆரமுதச் செல்வி வணிகர் நயினு னருள் சொல்
சீரகத்தார் மார்பன் சிதம்பரனுர்தான் மகிழ்ந்து

---

ஈனுவிருசி - குழந்தைபெரு மலடு; காளை - காளைப்பருவ ஆடவர்
மாணிக்கக் கூத்து - அழகிய நடனம். (ஆகுபெயர்)
சீஷன் - மாணவன் சீடன் என்பது சீஷன் என்ருயிற்று.
சற் குரு - வழிபடத்தக்க பேராசான்; ஆணிப்பொன் - மாற்றுக் குறையாத பொன் (ஆடகப்பொன்)
தீட்ச குரு - ஆன்மீக ஆசான் (தீட்சையளித்து உய்யக்கொண்ட ஆசான்)

ஓதும் திருக்கதையை உத்தம மாமென்றுகந்து
நாதன் திருவருளால் நன்றியுடன் கேட்டருளீர்

100 ஏழை எளியோர் இரக்கமுடன் கேட்டருளீர்
காளையர்கள் கேட்டக்கால் கன்னியரைக் கைப்பிடிப்பர்
இன்னுமின்னும் சொல்லுமென்று இன்பமுத்துக் கேட்டருளீர்
கன்னியர்கள் கேட்டக்கால் கடுகி மணம் புணர்வர்
ஈனு விருசிஇளமலடி கேட்டிருந் தால்
மாளுக மின்னும்மக மடிமேலுற வணைப்பார்
மாருத நோயர் வல்வினையோர் கேட்டிருந்தால்
தீராத வல்வினை நோய் தீர்ந்துமிக வாழ்ந்திருப்பார்
இல்லாதார் கேட்டிருந்தால் எல்லையற வாழ்ந்திருப்பார்
கல்லாதார் கேட்டிருந்தால் கல்வியறிவுண்டாவார்

110 சித்திரபுத்திரனுர் சிவனுர் திருக்கணக்கர்
உத்தமர்கள் வேந்தர் உலகுக் கதி காரி
பொய்யெழுதார் மெய்யர் புகழுக் கரசாளி
வையகங்க ளெல்லாம் படைத்தளிக்கும் வாழ்வேந்தர்
கீர்த்தி பெரிதுடையோர் கேவலத்தில் மெய்க்காவல்

115 தாட்சி யுடையோர் தரணிமுழுதுடையோர்

---

ஈனுவிருசி - குழந்தைபெரு மலடு; காளை - காளைப்பருவ ஆடவர் (ஆகுபெயர்)
மாணிக்கக் கூத்து - அழகிய நடணம்:
சீஷன் - மாணவன் சீடன் என்பது சீஷன் என்ருயிற்று
சற்குரு - வழிபடத்தக்கபேராசான்; ஆணிப்பொன் - மாற்றுக் குறையாத பொன் (ஆடகப்பொன்)
தீட்சகுரு - ஆண்மீக ஆசான் (தீட்சையளித்து உய்யக் கொண்ட ஆசான்)

எல்லார் குணமும் எடுத்தெழுதும் எம்பெருமான்
நல்லார் கருமம் நடுவெழுதும் நாயகனார்
பொல்லார் கருமம் புறம்பெழுதும் புண்ணியனார்
இல்லாத தொன்றும் எழுதாரியல்வேந்தர்

120 கன்மக் கணக்கர் தவக்கணக்கர் மெய்க்கணக்கர்
சென்மக் கணக்கர் சிவனார் திருக்கணக்கர்
அத்தி சூழ் நாட்டுக் கவரே பெருங்கணக்கர்
முத்தி சூழ் நாட்டுக் கவரே தலக் கணக்கர்
செய்ய பொறையுடைய தேவேந்திர ராவர்

125 துய்ய கணக்கெழுதத் தோன்றினார் பாலகனார்
பாலகனார் தன் புதுமை கேளிர் பரிவுடனே
கோல வண்ணர் தம் புதுமை கேளிர் குல வரையீர்!
உத்தம மான புதுமை கேளிர் உலகுடையீர்
கொத்தவனார் தம் பெருமை கேளிர் குவலயத்தோர்

130 தேவேந்திரன் புதுமை கேளிர் செகதலத்தோர்
வாழ் வேந்தர்தம் புதுமை கேளிர் வளமையுடன்
கேட்டிருந்த பேர்க ளெல்லாங் கேவலமாய்
வாழ்வார்கள்
பாட்டறிந்து சொல்வார்கள் பாவமெல்லாந்
தீர்ந்திடுவர்
பாவ கலி தீர்ந் திடுவர் பாக்கியமே வுண்டாவர்

---

நடுவெழுதும் - துலைநாப்போல் நடுநிலைமையுடன்; துய்ய- தூய்மையான,
சென்மக் கணக்கர் - பிறவிக் கணக்கர்;
கொற்றவனார் என்பது எதுகை நோக்கி உலகவழக்கில் கொத்தவனார் எனத்திரிபுற்றது
சந்தமும் - நாள்தோறும்; உசந்த என்பது உயர்ந்த என்பதன் மரூஉச்சொல்
வாழ்நாள் என்பதுவாணன் என்று திரிபு எய்தியது
அரசாளி - அரசர்களில் சிங்கம் போன்றவர்

135 சாகா வரம் பெறுவர் சந்ததமும் வாழ்ந்திருப்பர்
ஊழியோ டூழி உசந்த குடிப்பிறப்பர்
வாழ்வு மிக வுண்டாய் வாணாள் வளர்ந்திருப்பர்
கனமா துலையுங் கருதி னவை கைகூடும்

தன்மந் தழைத் தோங்கும் சந்ததிக ளுண்டாகும்

140 ஈராறு பெண்ணு மிருபத்து நா லொண்ணும்
காரார் குழலார் தன்மரையும் பெற்றெடுப்பார்
தன்மரையும் பெற்றெடுப்பார் சந்ததமும்
வாழ்ந்திருப்பார்
பொன்னுலகை யாள நல்ல புத்திரரு முண்டாவார்
புத்திரரைப் பெற்றெடுத்துப் போத மனங்களிப்பார்

145 கத்தவருங் கேட்டவரும் கயிலாயமே பெறுவார்
அங்குள்ள மன்னர் அமரரேறு கொள்வர்
இங்குள்ள நாளும் இராசாவைப் போலிருந்து
நீதி நெறியுகந்து நீடுழி வாழ்ந்திருப்பார்
சோதி மகுடமுடி சூடி அர சாண்டிருப்பீர்

150 அமராபதிக்கு அரசான ஆண் பெறுவீர்
இமையோர் பருபதத்தில் விளக்காகப் பெண்பெறுவீர்
இன்னம் பெறுவீர் எதிர்த்தார் முடிபெறுவர்
பின்னும் பெறுவர் பெருமாள்தன் சீர்பெறுவர்
சித்திர புத்திரர் தெய்வத் திருக்கதையை

---

**அமராபதி - இந்திரவுலகம்; தன்மர் - தருமர் போலச் சான்றோர்**
**பொன்னுலகம் - தேவருலகு; கற்றவர் என்பது வழக்கில் எதுகை நோக்கி**
**கத்தவர் எனத் திரிந்தது; கயிலாயம் - வீடுபெறுதல்**
**உத்திருந்து என்பது வழக்கில் வழங்கும் உற்றிருந்து என்பதன் மரூஉச்சொல்,**
**துச்சினம் - மிகுதியான கோபம்;**

155 உத்திருந்து கேளும் கொளுத்த மாருள்ளோர்கள்
சொல்லு மையா வென்று செவி தாழ்த்துக்
கேளுங்கோள்
அல்லும் பகலும் ஆசனமிட்டுக் கேளுங்கோள்
ஆசன மிட்டுப் பச்சை வடமாபரணம் வேண்டியதும்
காசு பண மீந்து களிப்பாகக் கேளுங்கோள்

160 வல்லடி காரர் மறைய நின்று கோளுங்கோள்
மலடி மலடா மறைய நின்று கேளுங்கோள்
கள்வர் திருடர் கடக்க நின்று கேளுங்கோள்
காவாலி மைந்தர் கடக்க நின்று கேளுங்கோள்
துட்டர் கபடரெல்லாம் தூர நின்று கேளுங்கோள்

165 துச்சினக் காரரெல்லாம் தூர நின்று கேளுங்கோள்
எச்சி லரித்த இயல்தேடிக் கேளாதே
பிச்சை யிடாத பெரும்பாவி கேளாதே
அய்ய மிடாத அரும்பாவி கேளாதே
மெய் போலப் பொய்யுரைக்கும் வீணரிது கேளாதே

170 தன்னகத்தை விட்டு பிறரகத் திற்போயிருந்து
அல்ல லுழக்கும் அரும்பாவி கேளாதே
பெண்டா ரகத் திருக்கப் புறம்பே மனதுவைத்து
கொண்டவனைப் பேணுத குணகேடி கேளாதே
பர்த்தாவைப் பேணுதை பாவியர்கள் கேளாதே

175 உந்ருரைப் பேணுது உதாசனித்தாள் கேளாதே
மாதாவைப் பேணுத மாபாவி கேளாதே
தாயாரைப் பேணுத சண்டாளி கேளாதே

---

**அமராபதி – இந்திரவுலகம்; தன்மர் – தருமர் போலச்சான்ரோர்**
**பொன்னுலகம் - தேவருலகு; கற்றவர் என்பது வழக்கில் எதுகை நோக்கிக்**
**கத்தவர் எனத்திரிந்து; கயிலாயம் - வீடுபெறுதல்;**
**உத்திருந்து என்பது வழக்கில்வழங்கும் உற்றிருந்து என்பதன் மரூஉச்சொல்!**
**துச்சினம் - மிருதியானகோபம்;**

காதலியைப் பேணுத காவாலி கேளாதே
தேவியரைப் பேணுத சீர்கேடர் கேளாதே

180 அரும் பாவம் செய்யும் அளறுவார் கேளாதே
பெரும் பாவம் செய்துவரும் பெண்கொடியார் கேளாதே
மாபாவஞ் செய்தோர் மறையநின்று கேளுங்கோள்
ஆபாதகேடர் அகல நின்று கேளுங்கோள்
தோதகிகள் தோதகர்கள் தூரநின்று கேளுங்கோள்

185 பாதகமே தீரப் பரிந்துநின்று கேளுங்கோள்
கற்றவர்கள் நோற்றவர்கள் காதாரக் கேளுங்கோள்
உத்தம பத்தினியர் ஒத்திருந்து கேளுங்கோள்
உள்ளன் பதாக உகந்திருந்து கேளுங்கோள்
பத்தியுடனே பலகாலும் கேளுங்கோள்

190 சித்திர புத்திரனுர் தெய்வீக வான்பொருளைத்
தேவேந்திரப் பெருமாள் செல்வத் திருக்கதையை
செந்தாமரை மலர்மேல் வந்தார் திருவுரையை
அன்பானவ ருரையை அன்பாகக் கேளுங்கோன்
அறிந்து படியளக்கும் அன்பருரை கேளாதார்

195 முறிந்த குடியாவர் முக்கூட்டுக் சிக்காவர்
எருது புசல் [illegible]க்கம் இல்லறங்கள் கொள்ளை போம்
கதிர்த்தலை சாவியாய்க் கனதூரம் பறந்துவிடும்
விளை நிலமும் பாழாகும் வித்துமுளை யாகாது
முளையுங் கதிரும் முழுதும் வெள்ளம் பாழாகும்
200 புழுதி தரியும் புனல் பூண் டெழுந்து விடும்

---

**குணகேடி - பண்புநலன்இல்லாப் பெண்டிர்; காவாலி - கயவர் (உலகவழக்கு)**

**முறிந்தகுடி - தாழ்ந்தகுடி கெட்டகுடி;**
**வான் பொருள் - உயர்ந்த கருத்துக்கள்**
**பர்த்தா - கணவன்**

உளுந் திரள மாடும் முள்ளே சிறுகிவிடும்
கொட்டிலு மாருங் குழக் கன்றுங் கேடாகும்
தொட்டி லுள மைந்தர் துடந்தோடிப் போய் விடுவார்
பெத்த வயறடைக்கும் பீளதேச முண்டாகும்

205 வைத்த உடமை யாவும் மண்ணன்று தின்றுவிடும்
கூடிய மாமுதலுங் கொள்ளை பறிபோகி விடும்
தேடிய தெல்லாந் தெருவோ டலைந்துவிடும்
பண்ணுகிற செட்டும் பலியாமலே போகும்
செய்கிற செட்டும் திகை பிழைத்து நின்றுவிடும்

210 ஆண்ட அடியானும் ஆகாசமே போவர்
பூண்ட பணியும் பொரியாத்துப் போகிவிடும்
பட்டுப் பணிதுகிலும் பற்றி எரிந்துவிடும்
செட்டுப் பலியாமல் சேதமே யுண்டாகும்
உடுத்த புடவைகளுக் குள்ளே பகையாகும்

215 அடுத்த விடமும் அறப்பகை யாகி விடும்
தொல்லை மிகுதியினுற் தூரத் துரத்திவிடும்
எல்லைகள் தோறு மிரந்துண்ண வைத்துவிடும்
இடுவார் முகமும் இடைகளியும் தேட வைப்பர்
படுபாவி களாய் பார்ப்பார் பலகாலும்

220 சித்திர புத்திரனுர் செல்வரென நினைத்து
உத்தமமாக ஒரு நோன்பு நோற்றவரும்
கற்றிருந்து சொன்னேருங் காதாரக் கேட்டோரும்
உத்தம தானம் ஒருக்காலைக் கீந்தோரும்
அன்னங் கொடுத்தோரும் அரிசி கறி ஈந்தோரும்

---

**சாவி - அழிவு நெல் அழிந்து சாவியாகும்**
**குழக்கன்று - இளமையான கன்று; ஆகாசம் போவர் - இறந்துபடுவர்**
**பொரியாத்துப் போகிவிடும் - ஆற்றலிழந்து விடும்;**
**கனதூரம் - மிகுதியான அளவு; நோன்பு - விரதம்;**
**பணி - ஆபரணம், அணிகள்**

225 முழுக முழுக் கெண்ணெய் முகந்து கொடுத்தோரும்
அழுத பிள்ளை அமர்த்தி அமுதருளிச் செய்தோரும்
தாயில்லாப் பிள்ளைதனைத் தாபமாய்க் கொள்வோரும்
கோயிலெடுத் தோருங் குளங்குழித் தொட்டவரும்
ஏழை அழுதால் ஏதென்று கேட்டாரும்

230 சாலுங் கரகமும் தண்ணீரும் வைப்போரும்
தண்ணீரும் பந்தல்களுக்கு சாலைகளும் வைப்போரும்
எண்ணே ரெழுத்தி னியல் வோதுவிப்போரும்
சலித்தார் முகம்பார்த்துச் சங்கடங்கள் தீர்ப்போரும்
பசித்தார் முகம் பார்த்து பச்சைகலி தீர்ப்போரும்

235 உத்தமரு மாவர் உயர்ந்த குடிப்பிறப்பர்
பத்தினியு மாவர் பலசிறுவர் தாயாவர்
மாணிக்கம் வந்து உதிக்கு மவர்வயிற்றில்
ஆணிப்பொன் வந்து அமரும் அவர் வயிற்றில்
தோற்றுத செம்பொன் வந்து தோற்று மவர்வயிற்றில்

240 மாற்றிலாச் செம்பொன் வந்துதிக்கு மவர் வயிற்றில்
வானிதியம் வந்து வழங்கு மவர் கோவில்
வாழ்வே கிளர்ந்தோங்கி வளரு மவர்மனையில்
தொட்டிலில் மைந்தர்களும் சூழ்ந்து விளையாடிவரும்
கட்டின மாங்கல்யம் கற்பாந் திரமாகும்

245 செட்டுப் பலித்துவரும் செய் கருமம் கைகூடும்
கொட்டிலும் மாடுங் குழக்கன்று முண்டாகும்
நெல்வருஷந் தோறும் நிலைவிளைச் சலாய்விளையும்
செல்வ மிகுத்து வரும் சேத மொன்றும் வாராதே

---

**முழுக்கெண்ணெய் - நீரோடுவதற்குஎண்ணெய்; அமுது - உணவு;**
**மாணிக்கம்; ஆணிப்பொன் - மாணிக்கம் போன்றும் ஆணிப்பொன் போன்றும் அருமந்தப்பிள்ளைகள்**
**வானிதியம் - மிகுதியான செல்வம்**
**கால் கரகம் - நீர் முகக்கும் கூருவிகள்**
**கொட்டில் - ஆடு மாடு கட்டும் கொட்டில்**

மாருத செல்வமுடன் வாநிதியம் உண்டாகும்
250 பேராண்மை மைந்தர்களைப் பெற்றுத் தழைத்திருப்பர்

இந்த வுலகில் அமராவதி ஆள்வர்
பின்னை யொரு செல்வம் பெருமாளைப் போலிருப்பர்
இன்ன மின்னங் கேளுங்கோள் இந்திரனார்
தொற்றரவை
கண்ணுயிரவர் பெற்ற காவலனார் தொத்தரவை

255 பின்னையும் நீர் கேளிர் பெருமாள் திருக்கதையை
விண்ணுலகம் மண்ணுலகம் வேந்தர் திருநகரும்
பொன்னுலகம் தான்விளங்க பூமிவெளிச் செறிக்க
ஆழியிலங்க அலைகடலில் முத்து இலங்க
ஊழி துலங்க வுலகமெல்லாந் தான் விளங்க

260 பூலோக மெல்லாம் புகழே வளர்ந் தோங்க
தேசம் விளங்கு கைக்குச் செய்ய வல்லார்
தோன்றுகிறார்
கலியுகங்கள் காண வென்று கண்வளர்ந்தார் பாற்
கடலில்
பள்ளிகொண்ட வெம்பெருமான் பாரளந்தார்
தம் பொருட்டால்

265 தெள்ளிய தேவேந்திரனார் செய்த தவங் குறையாமல்
பிள்ளைகளில்லாமல் பெரும்பாவஞ் செய்தமையால்
புத்திர ரில்லாமையினாற் போத மன முடைந்து
இந்திரா லோகத் திமையோர்கள் ஏத்துதற்கோர்
மைந்த ரில்லாமல் மாடாவஞ் செய்தமையால்

---

அமராவதி - அமராவதியில் பெருஞ்சிறப்பினை எய்துவர் ஆழி - கடல்; எம்பெருமான்-திருமால். ஏலம் கூருங்குழல்-மணமிக்க கரியகூந்தல்; இமையோர் - தேவர்; கண்வளர்ந்தார் - அறிதுயில் கொள்ளல்.

270 பாலகரு மில்லாம லென்ன பாவஞ் செய்தோம்நாம்
ஏலங் கருங்குழலே இந்திராணியே கேளாய்
தாமார மாரித்தலை நாழிலக் கற்பனை காண்
ஆண்மலடும் பெண்மலடு மானேம் அணியிழையே
ஏது கருமஞ்செய்தோமோ யீடுகுலந் தோமோ

275 தீது நினைந்தோமோ செங்கோல் மறந்தோமோ
கோவில் அடைத்தோமோ கொடும்பாவம்
செய்தோமோ
தாயில்லாப் பிள்ளைகளைத் தலையில் அடித்தோமோ
மாதா பிதாவை வயிறெரியப் பார்த்தோமோ
ஊராருடைமைக்குப் பேராசைப் பட்டோமோ

280 வையகத்தார் கைக்கலத்தை வயிறெறியப்
பார்த்தோமோ
பிச்சை யிடாமல் பெரும் பாவஞ் செய்தோமோ
ஐய மிடாமல் அரும் பாவஞ் செய்தோமோ
செய்யாது செய்தோமோ தெய்வமிழந்தோமோ
சத்திய வாசகங்கள் தப்பியர சாண்டோமோ

285 பத்தினியை யுத்தமியைப் பாராது சொன்னேமோ
இடும்பை யுரைத்தோமோ இல்லறங்கள் சுட்டோமோ
நடுங்கப் பணி கொண்டு நாளைவா வென்றேமோ
கூலி குறைத்தோமோ கொடும் பாவஞ் செய்தோமோ
வேலியழித்து விலைகுறைய விற்றேமோ

290 பட்டடை நெல்லிலே பதரைக் கலந்தோமோ
இட்டார் மனது கன்ன இசைகேடு சொன்னேமோ

---

**கலம் - பிச்சைப்பாத்திரம்; பணிகொண்டு - வேலைவாங்கிக்கொண்டு
கோவதை-பசுக்கொலை; ஏலங்கருங்குழல்-மணமிக்க கரிய கூந்தல்;
உற்றொருமை என்பது எதுகை நோக்கி உலக வழக்கில் உத்தொருமை
என்றாயிற்று
பொற்செப்பு-பொன்னாற் செய்த செம்பு; கன்ன-வருந்த;**

சொல்லாது சொல்லித் தொடுவழக்குச் செய்தோமோ
இல்லாது பொல்லாது இடைகேடு சொன்னோமோ
மண்ணி லிருந்து வழக்கோரஞ் சொன்னோமோ

295 கண்ணிலே காணக் கடும்பிழைகள் சொன்னோமோ
ஆவையடித்தோமோ அநியாயஞ் செய்தோமோ
கோவதையைச் செய்து கொலைகள் விளைத்தோமோ
என்ன கொடுமை செய்தோம் ஏலங்கருக்குழலே
இன்னிலைமை தானெழிந்து ஏட்டின்படி முடித்தால்

300 அன்னைபிதா வென்று அழைத்துவரப் பிள்ளை இல்லை
தீர்க்கடனும் நீர்க்கடனும் செய்து திடமுடனே
வாய்க்கரிசி யிட்டு வரிசை பண்ணப் பிள்ளை இல்லை
உத்தொருமை செய்து உடனரசை யாள்வதற்குப்
புத்திரனும் வேணுங் காண் பொற்செப்பிள முலையீர்

305 பூந்திருவே கேளிர் புதல்வரில்லாப் பாத கத்தால்
வாழ்ந்து தானவதென்ன மாயமல்லோ வாழ்வெனவே
புத்திர சோகம் பொறுக்க மனங் கூடாமல்
சித்த முருகிச் சிவனே என நினைந்து
உள்ள முருகி உமை பாதமே கருதி

310 பிள்ளைத் தவத்தில் பிற்பட்டா ரிந்திரனர்
உம்பர்உலகு தன்னி லுற்ற பெருஞ்சேனையுடன்
செம்பொன் மணித் தேரேறி தேவந்திரன்
போகையிலே
தேவேந்தி ரனர் தெருவே வருகையிலே
ஆயிரம்காலம் பசுவிலொரு பசுத் தான்

---

**நீர் முகந்து - நீர் எடுத்து; கடுகி - விரைந்து;**
**இசலி - உடன்பட்டு விரைந்து;**
**பொன்னரியமாலை - பொன்னால் செய்யப்பட்ட மாலை;**
**இடுக்கி - மடியில் வைத்தல்; உம்பர் உலகு - தேவருலகு;**
**பிள்ளைத்தவம் - துவக்க நிலை நோம்பு.**

315 அன்று ஈன்ற கன்றோடு அசறு மிளங் கொடியும்
கன்றும் பசுவும் கதறி எதிரோடிவர
தேவேந்திரன் கண்டு செம்பொன்மணித் தேரிறங்கி
ஆவீன்ற கன்றை அருகே வரவழைத்து
இன்பமளித்து இடுக்கி மடியில் வைத்து

320 செம்பொன் மணிமுடியைச் சூட்டினார் தேவந்திரர்
பொன்மாலை பூமாலைப் பொன்னரிய மாலையிட்டு
பன்னாக மூட்டி வளர்த்தார் பசுவினிற்கும்
ஆர்பேர் இடுவ தென்றான் அமராவதியிலுள்ளார்
தாய் பேரிடுவ தென்று சாற்றினார் தேர்வேந்தர்

325 தார் வேந்த ரிந்திரரும் தாயார்தன் பேர் சொல்லி
மாவேந்திரி யென்று அழைத்தார்கள் வானோர்கள்
பசுவின் இளங் கோவான் பாலமுதந் தானருந்தி
இசலி வளர்ந்திடுமாம் இந்திரனார் கோயிலிலே
கொம்புநிறம் பொன்னாய் குளம்புநிறம் வெள்ளியுமாய்

330 கண்கள் பவளமுமாய்க் காண்பார்க் கதிசயமாய்க்
பிள்ளை யென்று சொல்லி வளர்த்தார் பெருமையிட்டு
கன்னி யிளங்கன்று கடுகி வளர்ந்திடுமாம்
கலியுகங்கள் காண வென்று கடுகி வளர்கிறதாம்
தேவேந்திரன் தேவி சுறுகா லெழுந்திருந்து

335 பூவேந்தி செங்கழுனீர் பொய்கையிலேயே நீர்முகந்து
காலோடு கையுங் கதிர்முகமுந் தான்பூசி
காதோடுங் கண்ணுங் கனிவாயுங் கொப்பளித்து
உத்தமன் தேவி உதிக்குமுன்னே வந்துகொண்டு

---

குழக்கன்று - இளங்கன்று; இருஷி - முனிவர்;
நாமம் - சிறப்பு; பெயர்; அரனை - சிவபெருமானை;
தவசு - தவம்; ஆலம் - ஆலமரம்;
மாதவம் - பெரிய தவம் உரிச்சொல் தொடர்.

பத்திரியும் போட்டு பலகாலும் தெண்டனிட்டு

340 பசுவின் முகத்தில் முழிப்பள் அந்தப்பைந்தொடியார்
ஆவின் முகத்தில் முழிப்பள் அந்த ஆரணங்கும்
பத்து வயதளவும் பாராட்டிச் சீராட்டி
முத்து மணிவாசல் முகப்பில் வளர்ந்ததுவே
நாமோ மலடிருந்தோம் நாமக் கருங்குழலே

345 வளர்த்த பசுவும் மலடாச்சோ கொம்பனையே
குழக் கன்றுங் கூட மலடாச்சோ கொம்பனையே
ஆர் கொடுமை காணுமிது ஆனந்த வாழ்மாரி
பிறரும் நகைக்குது காண் பெடைமலர்க் கண்ணுரே
மலடி மலடியென்று வானிலுள்ளோர் ஏசுதுகாண்

350 பலரும் நகை கருதிக் காணும்வேந்தர் ஏசுதுகாண்
பிள்ளை யில்லையென்று பிறனுடர் ஏசுதுகாண்
மைந்த ரில்லையென்று மறுநாட்டார் ஏசுதுகாண்
இருஷி முதல் தேவர்களும் எல்லோரும் ஏசுதுகாண்
பெரிய தவமே முயன்ருல் பிள்ளையு முண்டாமெனவே

355 தேவேந்திரரே திகைத்து நெடுமூச் செறிந்து
பூவேந்திரநீர் சொரிந்து போற்றி அரனைப்பணிந்து
பத்தி யுடனே பரகயி லாயஞ் சுமந்து
புத்திர வாஞ்சையினுல் பூமி மறந்து விட்டார்
பிள்ளையே வேண்டிப் பேரிடைஞ்சல் மண்டிவிட்டார்

360 மைந்தரை வேண்டி யல்லோ மாதவமே பண்ணுகிருர்
ஆாரும் பண்ண தரிய தவசு பண்ணி

---

**அம்பலவர் - அம்பலத்தில் நடனமிடும் தலைவர் சிவபிரான்;**
**மகதேவர் - மகாதேவர் என்பதன் திரிபு; சிவபெருமான்**
**வள்ளுவன் - ஊருக்கு பறையறைந்து செய்தி அறிவிப்போர்;**
**தெண்டனிட்டார் - கீழ்விழுந்து வணக்கினுர்;**
**அத்தனுர் - பெரியோனுகிய சிவபிரான்;**

வேரோடி யாலம் விழுதுகளும் மேல்விழுந்து
அத்தி முளைத்து அறுகுமிகப் படர்ந்து
புற்று வளைந்து புரைபுகுந்து வண்டலிட்டு

365 மெய் வாய் கண் மூக்குச் செவிகள் மிக வடைத்து
பொய் வாழ்வென நினைந்து போத மனம் உடைந்து
பக்கத் தெலும்பும் பழுவெலும்பும் முள்ளெலும்பும்
ஒக்கக் கரையான் உடம்பை அரித் துருவ
சிற்றெறும்பு கட்டெறும்பு சேஷதளுந் தாளரிக்க

370 சற்றும் கலங்காமல் நின்றார் தவம்புரிந்து
அப்போதும் பிள்ளைஇல்லை என்றாரே அம்பலவர்
முப்பத்து முக்கோடி தேவர் தேவாதிகளும்
பிரமாவும் விஷ்ணுவும் கூடி விசாரமிட்டு
மகதேவர் சீர்பாதம் வந்துகண்டு தெண்டனிட்டு

375 சித்தம் இரங்குமையா தேவேந்திர னார்க்கு
புத்திர வாஞ்சையிலே பூமிமறந்து விட்டார்
பிள்ளையை வேண்டி யல்லோ பேரிடைஞ்சல்
மண்டிவிட்டார்
மைந்தரை வேண்டி யல்லோ மாதவமே பண்ணுகிறார்
பாலகரை வேண்டி யல்லோ பாரதவம் பண்ணுகிறார்

380 பிள்ளை அருள் என்று பெருமாளுந் தெண்டனிட்டார்
வள்ளுவனை ஓடி வரவழையு மென்றுரைத்தார்
அன்று புலித்தோ லுடுத்த அத்தனார் சீர்பாதம்
சென்று கண்டு தெண்டனிட்டார் தெய்வ வடி
வள்ளுவனார்

---

**கமலம் - தாமரை; குஞ்சி - தலை மயிர்;**
**குஞ்சரம் - யானை அத்தர் - உயர்ந்தோர்;**
**கொற்றவர் என்றசொல் திரிபு பெற்று கொத்தவரே என்றாயிற்று**
**பாலகர் - மகன் (மகப்பேறு) பெம்மான் - சிறந்தவன்**

என்னை அழைத்த பணி ஏதென்றவ ருரைக்க

385 உன்னை அழைத்த பணி உண்டதுகே
ளென்றுரைத்தார்
அடியேன் செய்யும் பணி ஏதய்யா அருளுமென
அருள் புரியுந் தம்பிரானே அருளிச் செய்யுமெனவே
சிவனுரு மங்கே திருவாய் மலர்ந்தருளி
மகதேவர் தானுந் மனமகிழ்ந்து வள்ளுவனை

390 மெத்த மகிழ்ந்து விரையவே ஒடிவந்து
ஆனையேறி மாலைசூடி யப்பொழுது வள்ளுவனும்
தேடிவருகையிலே சித்திர புத்திரனர்
கஞ்சுழியுங் கப்பரையுங் கமலத் திருமுகமே
குஞ்சிச் சடைச் சித்திரனர் தோன்றினர்
குஞ்சரம் போல்

395 ஆனையிறங்கி அலர்தாரான் போய்ப் பணிந்தார்
ஏனடா வள்ளுவனே யிங்குவந்த
தென்சொல் லென்றார்
அத்தரே! உம்மை அருளிப் பாடென் றுரைத்தார்
கொத்தவரே! வாருமென்று கும்பிட்டான்
வள்ளுவனும்
சித்திர புத்திரருஞ் சிந்தைமகிழ்ந் தோடிவந்து

400 பத்திரியும் போட்டுப் பலகாலும் தெண்டனிட்டு
அய்யரே என்று அருளிப்பா டென்றுரைத்தீர்
செய்யும் பணிவிடை என்திரு விளம்பத்து மென்றார்
பாசமுடையீர் பரிவுடையீர் பண்புடையீர்
தேசம் விளையாடி வந்தீர் சித்திர புத்திரரே

---

**உமை பாகர் - உமாதேவியை ஒருபக்கத்தே உடைய சிவபிரான்; தெண்டனிட்டு - வணக்கஞ் செய்து; தலைநாள் - முன்னாள்; ஈனு - கருவீனுத; ஆ - பசு; இணை - இரண்டு; விருமா - பிரம்மா; விஷ்டுணு - திருமால்.**

405 கணக்கால் பெரியவரே காரியந்தால் நல்லவரே!
குணத்தால் மிகுந்தவரே கூறுமொழி கேட்டருளீர்
தேவேந்திர னூர் திகைக் கிருர் பிள்ளை யன்றிப்
பாலகரை வேண்டி யவர் பண்ணுந் தவம் பாரும்
மைந்தரை வேண்டி வருந்து தவம் பார்த்து

410 இந்திரற்குப் பிள்ளை இனி நாம் அருள்வ தென்ன
சித்திர புத்திரனூர் செய்யதிரு வாய் மலர்ந்து
புத்திர ருண்டாக விதியிலேயே புண்ணியரே
அரிய தவம் பண்ணுகிலும் பிள்ளையில்லாற்
குண்டாமோ?
பிள்ளை பிறக்க வழக்கிலேகாண் பெம்மானே

415 மைந்தர் பிறக்க வழக்கிலேகாண் மாலயரே
என்றருளிச் செய்ய இமையோரு மாலயனும்
சென்று சிவனூர் திருத்தாளைப் பற்றிக் கொண்டு
பத்தி முத்தி மெத்தவே செய்தபார் வேந்த ரிந்திரற்கு
புத்திர சம்பத் தருள வேணு மென்று ரெல்லாரும்

420 தேவ ரிவை சொல்லச் சிவனு ருள மகிழ்ந்து
பாலகராய்ப் போய்ப்பிறவும் பண்புடையீர் இந்திரற்கு
புந்திரராய்ப் போய்ப் பிறவும் புண்ணியராம்
இந்திரற்கு
உத்தமமி தென்று உரைத்தார் உமைபாகர்
ஆதியோ யென்று ளடிபணிந்து தெண்டனிட்டுச்

425 சோதியே கேளுமென்று துய்யதிரு வாய்மலர்ந்து
கோ கோ கோகோ வெனவே குஞ்சிச்சடை யுடையார்

---

புனிதர் - தூயோராகிய சிவபெருமான்; சிதன் - கரையான்;
பேழை - பெட்டி; ஒலியல் - உடுக்கும் ஆடை;
சிலந்திநூல்-சிலந்தி நூற்ற கூடு; கமண்டலம் - நீர் தாங்கும் கரகம்;
உத்தமர் - சிவபிரான்; ஆறுசடையீர் - கங்கையினை முடியில் தரித்த
சிவபிரான்; குண்டலம் - காதணி;

தேவேந்திரன் வயிற்றில் செனனம் மிக்க தன்மமல்ல
இந்திரற்குப் பிள்ளை எழுத் தில்லை காண் ஈசுரரே
சந்ததி யில்லாமைத் தலைநாளிலக் கணமென்றார்

430 அந்த மொழி கேட்டு மரனார் அருள் கூர்ந்து
எந்தவகை யானாலும் இந்திரனார் கண்டுகந்து
செந்தாமரை மலராய்ச் சென்றுறையும்
பொய்கையிலே
இந்திராணி தான்வளர்த்த யீனா விளங் கோதை
வந்து தண்ணீர் தான்குடிக்க மாயன் திருவருளால்

435 தாமரைப் பூவாகத் தண்ணீருடன் கலந்து
ஆவின் வயிற்றி லவதரிக்கில் அற்புதங்காண்
வயிற்றில் லுதிக்க வழக்கில்லை எண்ணில் வர
வளர்த்த பசுவின்விலாவி லுதியு மென்றார்
ஆயுளடியோம் அருள்பாதம் பெற்றோ மென்று

440 கூர்பெற்றோ மென்று கும்பிட் டெழுந்திருந்து
எவர் பெற்றேனென் றீணைக் கடைக்கை தான்
தொழுது
தேவர் இருசிகளைத் திக்கெனத் தோள் அனுப்பி
வேத விருமாவை விஷ்டுணுவையுந் தானனுப்பி
போய் வருவே னெனவே பொற்பாதம் போற்றி
செய்து

445 ஏசுரரும் பார்வதியு மிதமா யுள் மகிழ்ந்து
கெழுகி னடா கிங்கிலியர் பூதகண நாதர்கள்

---

பவுர்ணை - முழுமதிநாள்; ஆதித்த வாரம் - ஞாயிற்றுக்கிழமை;
கரந்துறைந்தார் - மறைந்து வசித்தார்; கண் துயின்று - உறக்கமுற்று;
உற்றவித்தார் - தோன்றினார்; ஏலம் கருங்குழலாள் - மணமிக்ககரிய
கூந்தல் உடையாள்;
துணுக்கென்று - உடனே;

புகழ் மைந்தர் பொத்தகத்தைப் போ யெடுத்து
வாருமென்ருர்
அந்த மொழி கேட் டனைவோரும் வந்து கண்டு
எந்தெந்தப் பொத்தகங்கள் எங்கோவே
சென்றெடுப்போம்

450 நீரில் கிடந்தா லழுகாத பொத்தகமோ
பாரில் கிடந்தால் சிதளரியாப் பொத்தகமோ
பதிஞயிரவர் அசைக்க வொண்ணுப் பொத்தகமோ
எப்போ தகஞ்சென் றெடுப்போம் எழிலீரே!
அப்பொத் தகங்கள் அறிவோ மலர் தாரீர்

455 மானிடவர் பொத்தகத்தைப் போயெடுத்து
வாருமென்ருர்
ஆயிரங் கிங்கிலிய ரசைக்கவொண்ணுப் பொற்பேழை
பதிஞ யிரவர்கூடி பற்றவொண்ணுப் பொற் பேழை
ஒரு வயிறு சோற்றுக்கு மொலியலுக்கு மொசும்போம்
மாநல் நெடுமுடியீர் வைத்தாற்றிக்
கொள்ளுமென்பார்

460 தாழமுடியீர்! தலையாற்றிக் கொள்ளு மென்பார்
வைத் தாற்றிக் கொள்வாரு மாராத்திக் கொள்வாரும்
தொட்டாற்றிக் கொள்வாரும் தோளாற்றிக்
கொள்வாரும்
பதிஞயிரவ ருடன் பத்துலெட்சம் பூதகணம்
இனவாந் திரத் தோடு எடுத்துவந்து முன்வைத்தார்

---

**வேழமுகம் - யானைமுகம்; ஆதித்தன் - சூரியன்;**
**கனிவாய் - கொவ்வைக்கனி போன்ற வாய்; சொப்பனம் - கனவு;**
**அநுட்டானம் - முறையான கடன்கள்; முல்லை இதழ் - முல்லைப் பூக்களது இதழ்;**
**தீர்த்தம் - நறுமண நீர்; கெண்டிகை - கமண்டலம்**

465 பொற்பலகைக் கீழ்வைத்தார் பொத்தகத்தை
மேல்வைத்தார்
செப்பே டெடுத்தார் சிவனார் திருக்கரத்தால்
செந்நூ லிதழுஞ் சிலந்தி நூலும் போக்கி
பொன்னி னெழுத்தாணியுடன் பொத்தகமுங்
கைகொடுத்தார்
முற்கணக்கும் பிற்கணக்கும் முன்னெட் டனுப்படியும்

470 எக் கணக்கும் பிற் கணக்கும் பாத்தெழுதுமென்றார்
ஈசுரனார்
பொற்பிரம்பும் பூண்நூலும் பொன்னின் கமண்டலமும்
கைக்குடையும் வெண்ணீற்றின் பைங்கவச
குண்டலமும்
அரை நாணும்கி ண்கிணியும் அரைவடமும்
பூஞ்சிலம்பும்
திருவாபரண மெல்லாம் சாத்திச் சிவனாரும்

475 தாமரைப் பூவாகத் தாபித்தா ருத்தமரும்
போய் வாருமென்று புனித ரருள் புரிந்தார்
ஆறு சடையீர் அடி யேன்றன் விண்ணப்பம்
ஏறுத விண்ணப்பம் எங்கோவே கேட்டருளீர்
அடியேன் பசுவி லவதரிக்குங் காரணத்தால்

480 ஆவின் வயிற்றில் பிறக்கு மதிசயத்தால்
பசிவின் வயிற்றில் பிறந்தருளும் பாக்கியத்தால்
இகல்வ தொரு காரணத் தால் என்னை நீரேளதலால்
சித்திரைக்குச் சித்திரையில் சேர்ந்த பவுர்ணையில்
அத்த தலைக் கிழமை ஆதித்த வார மதில்

---

கதிர் மேகம் - ஒளிபொருந்திய மேகம்;
கங்குல் - இரவு; எரிசுடர் - சூரியன்;
கன்னிக் கிடாரி - இளமை பொருந்திய கிடாரி;
உம்பர் - தேவர்; மாதா - தாய்.

485 சித்திர புத்திர ராய்ச் சென்றங் கவதரித்து
பொத்தகமும் பொன்னெலகுங் கொண்டு பிறந்தருளி
அத்திபுரத்துக் கரசா யினி திருக்க
சித்த மகிழ்ந்து திருவாக் கருளுமென்ருர்
அன்று சிவனுர் அருள்புரிந் தாரப் படியே

490 சென்று கரந் துறைந்தார் செங்கமலப் பொய்கையிலே
ஐநூற்றுக் காதம் அகலமுள்ள பொய்கையிலே
எண்ணூற்றுக் காதம் இடலமுள்ள பொய்கையிலே
ஆயிரக் காத மளவுள்ள பொய்கையிலே
தேவேந்திரப் பெருமாள் செங்கமலப் பொய்கையிலே

495 ஆயிரந் தாமரைப் பூவில் அவருமொரு
தாமரைப் பூவில் வீற்றிருந்தாருத்தமனுர்
ஏலங் கருங் குழலா ளிந்திராணி கண் துயின்று
ஆனந்த வாழ்மாரி அப்போ கனுக் காண்பாள்
பணி மொழியாள் சொப்பனத்தில் பாலனு
ருற்பவித்தார்

500 தெரிசினங்கள் கண்டருள் வாள் தேவந்திரன் தேவி
செம் பொன்னே முத்தாணிச் செந்திருவாய்ப்
பிள்ளைகண்டாள்
சேமக் குருத்தோலை வாசிக்கப் பிள்ளைகண்டாள்
மைந்தர் மடிமீதில் வந்திருக்கச் சீராட்ட
கண்டு மனமகிழ்ந்து காரியப்பூஞ் சாயநல்லாள்

505 பச்சுடம்பு பால்முலையும் பாலனுமாய் வந்திருக்க
சொர்ப்பனத் தில்கண்டு துணுக்கென் றெழுந்திருந்து

---

**இனிது - சிறப்பாக; ஊழி - பலநூறு ஆண்டுகள்;**
**பூஷணம் - ஆபரணம்; பூவணை - பூமாலைகள்; ஆரம் - மாலை;**
**தாவடம் - தாழ்வடம் என்பதன் திரிபு; மாலை**
**அடவி - காடுகள்; கன்னல் - கரும்பு; செங்கமலம் - செந்தாமரை;**

செம்பொன்வருகு தென்று தேவேந்திரன் தேவி
இன்பம் பெருகி இருதோளும் பூரித்து
அரைத் திருந்த சந்தனத்தில் உதித்திருந்த
நீரதுபோல்

510 உரைத் திருந்த செஞ்சாந்தில் உதித்த
பனிநீரதுபோல்
கோடைப் பலாமரங்கள் வேரிற் பழுத்தாற் போல்
பாரப் பருமரங்கள் பட்டுத் துளிர்த்தாற் போல்
மாலைக் குழல்மடவாள் மாசற்ற மென்மொழியாள்
ஆலித் தெழுந்திருந்து ஆனந்தமே பொழிய

515 கிளிபவளச் செவ்வாயார் கெங்கைக் கரை போந்து
ஒளி சிறந்த கெண்டிகையில் உற்ற செழுநீர்முகந்து
காலோடு கையுங் கதிர் முகமுந் தான் பூசி
காதோடு கண்ணுங் கனிவாயுங் கொப்புளித்து
முல்லையித ழொடித்து முத்துப்போல் பல்விளக்கி

520 நெல்லி முளியரைத்து நீண்டகுழல் கோதி
பூலா விலை பிசைந்து பூங்கூந்தல் நீராட்டி
சேலை வரிந் துடுத்தி செந்த மறு தாடுகட்டி
மாலை முடியாள் மயிர் முடிந்து பின் போட்டு
தீர்த்த மெடுத்துத் திருமஞ்சன மளித்து

525 அர்ச்சனைகள் செய்து அநுட்டானந்தான்முடித்து
சிந்தித்து நின்று சிவனை அடி தொழுது
வேழமுகத்து விநாயகனைத் தெண்டனிட்டு
ஆர் பவளச் செவ்வாயாள் ஆதரித்தங்கேது சொல்வாள்
பச்சரிசி வெல்லம் பயறு பணியாரம் வல்

---

**மறை - வேதம்; வானவர் - தேவர்கள்; மாதீர்த்தம் - புனிதநீராட்டம்; அட்டதிக்கு பாலகர் - எட்டுத்திக்குப் பாலர்கள்; கமலம் - தாமரைப்பூ; பூசுரர்-பூமியில் வசிக்கும் தேவரோடு ஒத்தவர்; துய்ய - தூய்மையான; மாவிருட்சம்-மாமரம்; பெரிய மரம் எனலுமாம்;**

530 மொச்சை கடலை முதிர்ந்த கனி எள்ளுண்டை
செல்விளநீர் பச்சிளநீர் தேன்இளநீர் கரும்பு
அய் வரசத் தேனும் அடியேன் இடப் பருமன்
அலையில் எழுவானே! ஆதித்தன் புத்திரனே
தலையேறும் நாயகமே சானேற வேணுமென்றார்

535 கற்புடையே ளுமாகிற் கண்ட கனுப் பொய்யாதே
சொப்பனம் மெய்யாக வென்று தோத்திரங்கள்
செய்யலுற்றார்
சூரியனை நோக்கித் தொழு திறைஞ்சித்
தெண்டனிட்டு
பாயிதங்கள் செய்து படைப்பேன் பகவானே
கண்டகனு வின்படியே காசினியோர் கொண்டாட

540 குண்டலகள் மின்ன குமாரர்வந்து தோன்றுவாரா
சொப்பனத்தில் புத்திரனார் தோன்றும் செயமாகிற்
பேராக மாரி பொழிவேன் கதிரோனே
கதிர் மேகம் பொன்னாலே கங்குலெல்
லாம்பொன்னாலே
சூத பணம் பொன்னாலே எரிசுடரும் பொன்னாலே

545 பூந்தேரும் பொன்னாலே புரவிகளும் பொன்னாலே
சேந்தகலை பொன்னாலே திருப்பாதம் பொன்னாலே
இந்திர பானம் பொன்னாலே எழுகோணம்
பொன்னாலே
மந்தா கொடி எல்லாம் வைப்பேனே பொன்னாலே
என்று சிவ சூரியனை ஏத்திப் பலகாலும்

---

நொடிப்பொழுது - ஒருகணப்பொழுது;
புற்றரவம் - புற்றில் உள்ள பாம்பு; அவகடங்கள் - தீமைகள்;
எரிபுழு - கடித்தால் எரிப்புண்டாக்கும் புழுக்கள்; பொறி - புள்ளிகள்;
வாசல் - வாயில் என்பதன் திரிபு. ஏகம் - ஒன்று; நோக - துன்புற.

550 அன்று மலரிட்டடி தொழுது நிற்கையிலே
இந்திரபதி என்றருளு மிந்திராணி தன் பசுவே
வந்து கண்டு விட்டார் மாயவனு ரப்பொழுது
தும்பை தரித்துவிட்டார் சிவகாமி திருவருளால்
கொம்பிக் குதித் தெழுந்து கோலத்துக் கண்சிவந்து

555 கட்டவிழ்த்துக் கொண்டு கடுகிப் புறப்படுமாம்
கன்னிக் கிடாரி கத்துங் குரல் கேட்டு
என்னேம் பயின்ருரே ஏனென்று ஓடி வந்து
தேவேந்திரன் தேவி திகைத்துநெடு மூச்செறிந்து
மாவேந்திரியே வருந் துயர மேதுரைப்பாய்

560 நான் மலடி என் றிருந்தேன் நாடறிய ஊரறிய
ஊமை செவிடானேன் உம்பரெல்லாம் ஏசுதற்கு
தவக் குறையினுலே தவிக்கிறேன் மாபாவி
வளர்த்த பசுவும் மலடாச்சே மாதாவே
கண்ணே கருங்கலமே கன்னி யிளங்கோ வதையே

565 என்னேடே கூடி மலடிருக்க வுன்விதியோ
வறள் காலி வாசல்விட்டு மாதாவே நீ போயுன்
இனத்தோடே கூடியினிநூழி வாழு மென்ருர்
போகுது காணு மப்போ போர்வேந்தனுர் பசுவும்
வேகமுடனே விழிசிவக்கத் தாள் நோக

570 சிலம்பு கலகலென்னச் செஞ்சதங்கை
தண்டை கொஞ்ச
வலம்புரியுஞ் சங்கு முத்து மாலைகளுந் தோள் புரள

---

ஆர்ப்பரித்து - ஆரவாரம் செய்து மகிழ்ந்து; இரை - உணவு;
குறுவேர்ப்பு - சிறுவியர்வை; பொறி - ஐம்பொறிகள்
(மெய், வாய், கண், மூக்கு, செவி)
தியங்கி - தயக்கமுற்று; அண்டர் - தேவர்கள்;
எமலோகம் - இயமன் உறையும் உலகம்; கிலேசித்து - வருந்தி;
ஆ - பசு; அசையாமணி - அசையாதமணி (இதுவரை ஆடாத மணி)

ஆரம் பதக்கம் ஆருபுரி யாபரணம்
பூஷணமுங் கால்வளையும் பூவணையு மேல்வளையும்
செம்பவழத் தாவடமுஞ் சேர்ந்த முத்தின் மாலைகளும்

575 பொன் பொதிந்த மாலையுடன் பொன்னரிய
மாலைகளும்
செம்பொன் மணி மாலைகளுஞ் செங்கழு னீர்
மாலைகளும்
தங்கமணிப் பூஷணமும் தாவடமும் தோள்புரள
அடிமேலடி வைத்து அன்னம் போலே நடந்து
குடி தாங்கக் கோவதையார் கொஞ்சுநடை
யாய்நடந்து

580 வீதி கடந்து வெளிகடந்து ஊர் கடந்து
ஆறு கடந்து அடவி பல கடந்து
கன்னல் கதலி கமுகொடியத் தான் பாய்ந்து
செந்நெற் கதிர் மேய்ந்து சேர்ந்தங் கினத்துடனே
கோனார தன்மாயவனைக் கும்பிட்டடிவணங்கி

585 ஈனுதை சாவி இள மேய்ச்சல் தான் மேய்ந்து
தண்ணீருழத்தித் தவித்தங்களைத் தோடி
கண்ணுயிரமுடைய காவலனுர் பொய்கையிலே
முன்னூற்றுக் காதம் முழக்கமுள்ள பொய்கையிலே
நானூற்றிக் காதம் நகரியுள்ள பொய்கையிலே

590 ஐந்நூற்றிக் காதம் அகலமுள்ள பொய்கையிலே
ஆயிரங் காதம் அகலமுள்ள பொய்கையிலே

---

**துறை - நீராடுதுறைகள்; வல்லலாடிக்காரர் - தீயோர்கள்; வல்வழக்காடுவோர்;**
**ஒரு நொடி - ஒருகணப்பொழுது; தாதியர்கள் - தோழிமர்கள்; வாய்புதைத்து - வாய் பொத்தி; ஏதுவினை - என்ன காரியம்; படைவீடு - பாசறை; வெற்பு - மலை.**

தேவேந்திரப் பெருமாள் செங்கமலப் பொய்கையிலே
சேர்த்திப் பெரிதுடையார் செங்கமலப் பொய்கையிலே
வாய்த்த மறைபுகழ்சேர் வானவர்தம் பொய்கையிலே

595 அத்தைக்குப் பாவம் மனந் தமரும் பொய்கையிலே
முத்துக்கள் நின்று முழங்குமந்தப் பொய்கையிலே
மாணிக்கம் நின்று மறுகுமந்தப் பொய்கையிலே
ஆணிப் பொன்நின்று வானெரியும் பொய்கையிலே
வானவருந் தேவர்களும் வந்திரங்கும் பொய்கையிலே

600 மாதவர்கள் மாதீர்த்த மாடிவரும் பொய்கையிலே
சந்திரருஞ் சூரியருஞ் சந்திபண்ணும் பொய்கையிலே
சத்த மகாரிஷிகள் சந்திபண்ணும் பொய்கையிலே
அந்தணரும் பூசுரரும் அர்ச்சனை செய்யும்
பொய்கையிலே
அட்டதிக்குப் பாலகரும் ஆடுமந்தப் பொய்கையிலே

605 கட்டி யிருப்பார் கடலாடும் பொய்கையிலே
கீர்த்தி பெருகிக் கிளர்ந்தோங்கும் பொய்கையிலே
ஆயிர மாவிருட்சம் அமர்ந்துறையும் பொய்கையிலே
ஆயிரம் கெர்ப்பம் தரிக்குமந்தப் பொய்கையிலே
நித்த மாயிரம் கமலம் பூக்குமந்தப் பொய்கையிலே

610 சுத்தி வலமாக வந்து துய்யதிருப் பாற்பசுவும்
மெத்தும் படித்துறையை மெல்லவே வந்துகண்டு
தத்தடி யிட்டுத் தவித்து மனந் தளர்ந்து
பத்துப் படியும் கடந்தந்தப் பாற் பசுத்தான்
தண்ணீ ருழத்தித் தடாகையி லுள்ளிறங்கி

---

கோவதை - பசுவதை; பாற்பசு - பாலைத்தரும் பசு;
பரலோகம் - மேல் உலகம்; கற்றுவும் - கன்றையுடைய பசுவும்;
கயிலாயம்-இறையடிநீழல்; உற்றபரி என்பதன்திரிபு உத்தபரி என்பது.
குழலாள் - கூந்தலையுடையாள்;

615 தண்ணீர் குடிக்கையிலே தாமரைப் பூவிழுங்கி
தாரைப் பூவுந் தரித்துகந்த கர்ப்பமதாய்
பொய்கை தனில் நீர் குடித்துப் பூவருந்திப்
பிள்ளையுண்டாய்
துய்ய திருப்பாற் பசுவும் தோய்ந்து கரைமீதேறி
வேர்த்து விறுவிறுத்து மெய்நடுங்கி யுட்குலைந்து

620 வாய்த்த மலர் குச்சிலிட்டு வாயால் நுரைபிதற்றி
கை சோர்ந்து மெய்சோர்ந்து கனகவளை
தான்சோர்ந்து
துய்ய திருமேனி துவள நடந்தசைந்து
முட்டி யுயர்ந்து முகவாய் மிகக்குழைந்து
கட்டு தெரிந்து தளர்ந்து மொழி நெகிழ்ந்து

625 முன்வயிறும் பின்வயிறும் மூக்கு மரையுந் தளர்ந்து
கண் ணிருண்டு வாய் வரண்டு காதிரண்டும்
தான்தளர்ந்து
மீனூர் பொருமலுடன் வேதனையா லுள்ளுடைந்து
அம்மை யடியோ மென்றலறிற்று வப்பசுவும்
ஏகக் கருப்பிட்டு இட இடத்தார் போற் கதறி

630 மச்சேந் திரர் வாசல் மனைவழியே வந்திடுமாம்
வாசல் தனில் வந்து கண்டு மச்சேந்திரன் தேவி
தேவேந் திரன் வளர்த்த தெய்வக் குலப்பசுவே
மாலேந் திரி பேரிட்ட மானுகங் கொண்டாரே
ஏனேன் அலறுகிறீர் ஏலங் கருங் குழலே

635 மானே மரகதமே வஞ்சனைகள் செய்த துண்டோ
ஆராகிலும் நோக அவகடங்கள் செய்தாரோ

---

கொம்பனை - கொம்பு போன்ற பெண்; சூல் - கர்ப்பம்; கரு;
காணுக்கடி - விஷக்கடி நச்சுப்பூச்சு காலுகடி;
கண்ணேறு - திருஷ்டி; எட்டி - எட்டிக்காய், நச்சுக்காய்;
பட்டி - மாட்டுக் கொட்டில்;

பாராதார் பார்த்தாரோ படுகொலைகள் செய்தாரோ
மலையேறி மேய்ந்திடத்தே மலைத்தழைகள் தின்றீரோ
நாவேறே கண்ணே நஞ்சுபல தின்றீரோ

640 பொறி விரியன் புல்விரியன் புற்றரவந் தீண்டிற்றே
காடேறி மேய்ந்திடத்தே கன்னிமணங் கொண்டீரோ
எரி புழுக்கள் செம்புழுக்கள் ஏதாகிலு நக்கிச்சோ
உந்தன் திருமேனி யுள்ளுடைந்து வாட்ட முற்று
வந்த திவையேதென் றறியேன் மாதாவே யென்று

645 குங்கும முஞ் சந்தனமுங் கூட்டிக் குழம்பு செய்து
செங்கை யுற வாரித் திமிர்ந்தாளே தேன்மொழியாள்
அப்போது வப்பசுவுக் கம்மயக்கந் தீராது
மச்சேந்திரன் தேவி மனையிடமே போய்ப் புகுந்து
காடியும் கூழும் கழுநீரும் கஞ்சி புல்லும்

650 ஓடியெடுத்து வந்து வைத்தா ரொரு நொடியில்
சேரக் குடித்து தெகட்டிக் களிகூர்ந்து
பார்க்க வளமிகுத்துப் பார்த்துநெரித் தார்ப்பரித்து
பட்டணத்தே சுற்றிப் பல்லடிக்கொண்டே கதறி
இட்ட புல்லுந் தின்னாது இரையெடுத்து மேயாது

655 சித்திர நவரத்தின மணித்தேர் வேந்தன் வாசலிலே
முத்துப் பதித்த முகப்பருகே வந்துநின்று
ஆர்க்க முழங்கும் அபயம் அபய மென்றும்
கொம்பு சுழற்றுங் குறு வேர்ப்புத் தான் கொள்ளும்
கண்கள் பொறிப்பறக்கும் கால்சிறைக்கும் வால்
சுழற்றும்

---

அலகிட்டு - மெழுகிக் கூட்டித்தரையினைத் தூய்மை செய்தல்;
சிறுகால் - சிறிதுபொழுது; அரங்கம் - மேடை;
காரா - கரிய நிறமுடைய பசு; விதானம் - மேல்தட்டு;
அகிலம்புகை - அகிற்புகை; தாள் - பாதம்.

660 மானத்தே பார்க்கும் நிலத்தை அருவருக்கும்
பூமியைப் பார்க்கும் பொறிகலங்கிச் சீறிவிழும்
தன்னிழலேக் குத்துந் தரையே யருவருக்கும்
முன்னந்தம் பின்னந்தம் பாயும் முழக்கமிடும்
ஆனந்த மாடு மதிர நடனமிடும்

665 வானுலகம் போக வழிபார்க்கு முள நடுங்கும்
தெய்வமே யென்னுந் தியங்கி மயங்கி விழும்
அம்மையடி யென்னும் அலறும் மடித்துவிழும்
சிவ சிவா வென்னும் திகைத்து நெடுமூச்செறியும்
அர கரா வென்று சென்று ஆராட்டி நாவகைக்கும்

670 அசையா மணி யசைவய அண்ட ரெல்லாம்
ஓலமென்ன
எம லோகம் பரியந்தம் எங்கும் கிடுகிடென
தீட்டு புகழ் நாட்டவர்கள் சேர முறையிட் டலற
கேட்டு நடு நடுங்கி கிலேசித் தெழுந் திருந்து
தேவேந்திரன் தேவி திகைத்து நெடுமூச் செறிந்து

675 தாமந்த வாழ் மாரி தாங்கி முகனேக்கி
கோவதை யேன் கூப்பிடுதும் கொம்பேரிடையாரே
ஆவேன் அலறுகுது அசையு தேனவராட்சி
அசையா மணி நாவசைய வந்த காரிய மென்ன
கள வேது போனதுண்டோ காவல்சிறை
யானதுண்டோ

---

சூர் - பற்றி வருத்தும் பைசாசம்;
உலகளந்தான்-உலகை அளந்த நெடுமால்; சஞ்சலித்தல்-வருந்துதல்;
விரமலிபி - பிரமலிபியின் திரிபு; தலைவிதி.
துரத்திற்றோ என்பதன் திரிபு துரத்தித்தோ என்றாயிற்று.
செய்ய - சிவந்த; வானவர்கோன் - தேவர் தலைவன் இந்திரன்;
அயன் - பிரம்மா; காலன் - இயமன்; கை யோரம் - ஓரவஞ்சனை.

680 சிறையேது வந்த துண்டோ சேனைமன்னர்
போந்ததுண்டோ
துறை சேத மான துண்டோ சொங்குகப்பல்
தாழ்வதுண்டோ
கப்பல் கவிழ்ந்த துண்டோ காசிமன்னர்
வந்ததுண்டோ
அப்போதுகுலவெற் பங்கதிர்ந்து விழுந்து துண்டோ?
தென் கடலில் கப்பல் திசை பிழைத்துப்
போனதுண்டோ?

685 வடகடலில் கப்பல் வழிபிழைத்துப் போவதுண்டோ?
மேலக் கடலில் கப்பல் வெளிமசங்கிப் போனதுண்டோ
கீழ்க் கடலில் கப்பல் கெடிபுகுந்து போனதுண்டோ?
வல்லடிக் காரர் வளைந்து பிடித்த துண்டோ
கொள்ளை முதல்காரர் கூவென்று வந்த துண்டோ

690 தெய்வ லோகந் தன்னுளே தீக்கொழுத்தி விட்டாரோ
வானுலகந் தன்னுளே வந்து திறை கொண்டாரோ
பட்டனத்துக் குள்ளே படைவந்து விட்டாரோ
படைவீடு தன்னைப் பகலே யழித்தாரோ
என்நகரில் வந்தவினை ஏதோ வென வறியேன்

695 பொன்னகரில் வந்தவினை போயறிவீர் பூவையரே
ஏதுவினை யென்றறிந்து என்துயரந்தான் தீரீர்
ஓடிவிசாரித் தொரு நொடியில் வாருமென

---

**சீவன் - உயிர்; சிவலோகம் - சிவன் உறையும் உலகம்;**
**இறையடி எய்தல்;**
**வேற்கண் - வேல் போன்ற கண்; கயிலாயம் - இறையடி நீழல்**
**அடைதல் இறத்தலுக்கு மங்கலமொழி;**
**தேவி - மனைவி; பார்மேல் - பூமியின் மீது;**
**மலர்ப்பாதம் - தாமரை போன்ற திருவடி; குருதி - இரத்தம்;**
**வானுருலகு - தேவருலகம்;**

தாதி யரைத் தான் விடுத்தாள் தாமக் கருங்குழலாள்
அந்த மொழி கேட்டு அறிந்தசில தாதியர்கள்

700 வந்து கண்டு தெண்டனிட்டு வாய்புதைத்தங்
கேதுரைப்பார்
பொன்னகரி தன்னுள்ளே போந்த வினை தானுமல்ல
வாழ் நகரி தன்னுள்ளே வந்தவினை தானுமல்ல
பிறனாட்டி லுள்ள பெரும்படை தானுமல்ல
மறுநாட்டு ரர்சாக்கள் வந்து திரை கொண்டதல்ல

705 கள்வர் மறவர்களும் கரும்பிறங்கள் தானுமல்ல
உள்ளபடி சொல்லுகிறேன் உத்தமியே
கேட்டருள்வாய்
ஒருத்தர் வினையுமல்ல உத்தமியே வுன்மனையில்
வளர்த்த பசுவுக்கு வந்தவினை காணுமிது
கோவதை யார் தமக்கு வந்த வினை காணுமிது

710 தெய்வலோகம் விட்டுச் சிவலோகஞ் கேருதுகாண்
மானே உன் பாற்பசுவும் வைகுந்தஞ் சேருதுகாண்
தேனே உன் பாற்பசுவும் சிவபதமே சேருதுகாண்
பாற் பசுவு மிப்போ பரலோகஞ் சேருதுகாண்
கற்றுவு மிப்போ கயிலாயஞ் சேருதுகாண்

715 உத்தமியே கேளென் றுரைத்தார்க ளோடி வந்து
பாங்கியர்கள் சொன்ன மொழிபத்தினியார்
தான்கேட்டு
ஏங்கி முகம் வாடி இருவிழிகள் நீர்சொரிய

---

**மகாதேவர் - சிவபெருமான்; வானவர்கோன்தேவி - இந்திராணி; கட்டுவிச்சி - குறி சொல்பவள்; அக்கரவம் - உருத்திராக்கம் சர்ப்பமாலை;**

**சிவலோக நாதர் - சிவபெருமான்;**
**திருவாய் மலர்ந்தருளல் - கூறுதல் பெரியோர்கள் கூறுவது:**

கற்ருவின் சொற்கேட்டன்று நினைந்தோடுதல் போல்
முற்ரு முலையார் முகப்பில் படி கடந்து

720 வண்டார் குழலார் மணிமுத்தின் வாசல் வந்து
கண்டே திடுக்கிட்டு காரிகைப் பூஞ்சாய் நல்லாள்
மெத்த விதன முத்து மெல்லியரைத் தானேவி
உத்த பரி காரியனை யோடி யழையு மென்ருர்
காற்றிலுங் கால் கடிய தாதியர்கள் தானழைக்க

725 வாய்த்த பரி காரியனும் வந்து கண்டு
தெண்டனிட்டார்
வந்த பரிகாரியனைக் கண்டுமடமாது நல்லாள்
இந்திரனுர் தன்தேவி யின்பமணி வாய்திறந்து
பண்டிதரே சித்தர்களே பார்க்கும் பிடாரர்களே
எண்டிசையும் கொண்டாடும் ராசபரி காரியனே

730 பசுவைப் பிழைப்பூட்டும் பத்துலட்சம் பொன் தருவேன்
கோ வதைக்கே சீராக்கீர் கோடி தனந் தருவேன்
என்ற மொழி கேட்டங் கிருந்து பரிகாரிகள் தான்
சென்று நல்ல பண்டிதங்கள் செய்வார் சிலகோடி
காட்டில் மருந் துங் கடைச்சரக்கும் கை மருந்தும்

735 கூட்டில் வடித்துக் குடிநீர்கள் தான் காய்ச்சி
கத்துக் குழலாள் அக்கடுகெனவே தான்புகட்டி
பத்திய பரிகாரம் பார்ப்பார் பலகோடி
அப்போது மப்பசுவுக் கம்மயக்கம் தீராது
தப்பாத மென்மொழியாள் தானு மிகவே சலித்து

740 ஆவை யெடுத்து அணைத்து மடியில் வைத்து

---

பூஷணங்கள் - ஆபரணங்கள்; பாகு - வெல்லப்பாகு; இனிய,
மாயன் - மாயத்தன்மை நிறைந்த கண்ணபிரான்;
கேளாய் - கேட்பாயாக; கேவலம் - இழிவு;
தீராய், வாராய். முன்னிலை ஒருமை வினைமுற்று.

கோ வதையைத் தான்பார்த்துக் கூறுவாள்
கொம்பனையும்
ஆனந்த மாரி யலரியிங்கே வந்த தென்ன
தேனுர் மொழியாரே தீங்குனக்குச் செய்தாரார்
மாலை முடியீர் மயக்கம் வரக் காரியமென்

745 ஆர முலையீர் அடுத்தடுத்து மேஞ்சீரோ
சூல் சினையாய் வந்தீரோ துக்கவலைப் பட்டீரோ
வேல்பொருத கண்ணுரே விஷங்கள்பல தீண்டிற்ருே
கட்டெறும்பு செந்தேள் கருந்தே ளுறுத்திற்ருே
நட்டுவக் காலி நறுங்குளவி கொட்டிற்ருே

750 பேய் தானடித்துதோ பேய்நரிதான் தீண்டிற்ருே
காணுக் கடிகள் கடித்ததோ காரிகையீர்
சூகை எரிபுழுக்கள் செம்புழுக்கள் தாக்கிற்ருே
நாக வெறி தாக்கித்தோ நஞ்சுபல தின்றீரோ
கண்ணேறு பட்டதோ கண்கொடியார் பார்த்தாரோ

755 நாலேறுபட்டதோ நாவுழலைக் கொண்டீரோ
பட்டி செருமிற்ருே பாலொடுவிதிண்ணீரோ
எட்டி யலரி இலைக் கள்ளி தின்றீரோ
பெருமருந்து தின்றீரோ பேய்மருட்டி நின்றீரோ
கரு வேம்பு தின்றீரோ மலைவேம்பு தின்றீரோ

760 காட்டெள்ளுத் தின்றீரோ காஞ்சொரி தின்றீரோ
வாய்ந்த கொடுவேலி மதமத்தைத் தின்றீரோ
பேய்ப்புல்லுத் தின்றீரோ பித்தன் காய்த் தின்றீரோ
கொத்தோடே ஆமணக்குங் குலைமுரித்துத் தின்றீரோ
பூத்த பொரி மரத்தின் பூவிதழ்கள் தின்றீரோ

---

எண்டிசை - எட்டுத்திக்குகள்; புண்டரீகம் - தாமரை;
அட்டகிரி - எட்டு மலைகள்; அரலோகம் - சிவன் உறையும் உலகம்;
பார்பதி - உமாதேவி, பார்வதிதேவி; சப்தரிஷி - ஏழு முனிவர்கள்;
அண்டம் - உலகம்; பகிரண்டம் - பிற உலகங்கள்;

765 காய்த்த கடுமரத்தின் காய்கனிகள் தின்றீரோ
தானே வளர்ந்த தழைகுழைகள் தின்றீரோ
ஈனாத சாவி இளம்புல்லுந் தின்றீரோ
சர்ப்ப விஷத்தின் தழைத்த புல்லுந் தின்றீரோ
எப்புல்லுந் தின்றீரோ ஏங்கும் கருங்குழலாள்

770 சிறுகாலேப் படியின்று மேயவென்று போனபசு
இது காண் மடி தழைந்து யீன வந்து நிற்குதுகாண்
கோவில் புதுக்குங் கொணராளே கொம்பனையும்
ஆயு ளடியோம் அருள்பெற்றோ மென்று ,
கூறப் பெற்றோ மென்று கும்பிட் டெழுந் திருந்து

775 ஏவப் பெற்றோ மென்று இணைக் கடைக்கைதான் தொழுது
ஆர்பொன் னரங்கங்கள் அலகிட்டு நீர்தெளித்து
எங்கு மலகிட்டு இன்பத்தா லக் கொடுத்து
சந்தனமுங் குங்குமமுஞ் சாந்தால் தரை மெழுகி
குங்குமத்தாலே குளிரத் தரை மெழுகி

780 சந்தனத்தாலே சதிர் மேகக் கால் நாட்டி
ஆகாய மெல்லாம் அகிலம் புகை காட்டி
ஆகாய மேற்கட்டி கட்டி யலங்கரித்து
கற்பூரமே திமிர்ந்து காராவின் நெய் சொரிந்து
எட்டுத் திசையும்எரிக்குஞ் சுடரொளி போல்

785 குத்து விளக்குக் கொழுந்து பட வேற்றி
மாணிக் கத்தாலே வகைதோறும் ஏத்தினர்
தீபமிகத் துலங்கத் திரை தோறும் ஏத்தினர்

---

**ஆறுசடையீசர் - கங்கையினை முடியில் தரித்த சிவபிரான்**
**வேள்வி - யாகம்; மதிசூடி - சந்திரனை முடியில் சூடியவன் சிவன்;**
**கொம்மை - பருத்த; வரி - கோடுகள்;**
**தெய்வமலை - தெய்வத்தன்மை பொருந்திய கயிலாயமலை;**

எண்ணுதை தெல்லாம் எண்ணி ஏந்திழைதன்
பால்பசுவை
வேதனை யோடே விடுதியே கொண்டு சென்று

790 ஆணிப் பொன் கொம்பா லதிர முளைத் தாக்கி
மாணிக்கத் தூம்பால் வாங்கி வச மேறிட்டார்
மெத்தவி தனமதாய் வேக தாக மிகுத்து
ஒத்த முகிளொடிந்து உள்ளுடைந்து தாள்நெரிந்து
நாடி தளர்ந்து நடுத் தளர்ந்து உடல் தளர்ந்து

795 ஓடி விழுந்து உருண்டு பிரண் டார்ப் பரித்து
மெய் மயங்கிச் சோர்ந்து விடைக் காலெரிந் துளரி
ஐயகோ வென்று அடித்து விழுந்தருளி
ஓகோகோ வென்று உருண்டு புரண்டு விழும்
கோவதை தன்குரலை கொம்பனைகேட் டோடிவந்து

800 வானவர்கோன் தேவி மணிவயிற்றில் கையறைந்து
அந்நேரந்தா னோடி யாத்தி அரவணைத்து
பொன்னுன மேனி புலன் குறைய வந்ததென்ன
செய்ய திருமேனிக்குக் தீங்குவரக் காரியமென்
அய்யன் குறையோ வருந் தேவதை குறையோ

805 திருமா லயன் குறையோ தெய்வ கன்னிமார்
குறையோ
இமராசன்றன் குறையோ இராச மருளின் குறையோ
கொல்லியோ குன்றோ குலதேவதை குறையோ
பில்லியோ சூனியமோ பேயோ பிசாசுகளோ
பூதந் துரத்தித்தோ புள்ளடிகள் தண்டிற்றோ

---

**ஆரணங்கு - தெய்வப்பெண்; அட்டகிரி - எட்டுமலைகள்**
**மாலயன் - திருமாலும், பிரமனும் பிஞ்ஞகன் - பெரியோன்;**
**வாணுதல் - ஒளி பொருந்திய நெற்றி;**

810 வீரன் பிடித்ததோ விறுமாத்தித் தீண்டியதோ
முன்னடிகள் பிடித்ததோ முனியன் பிடித்துதோ
தலையில் விதி மாண்டதுவோ சனியன் வளைந்ததுவோ
அந்திப் பேய் சந்திப்பேய் அடித்ததோ பாவியனே
வந்திப்போ காலன் வழி மறித்துக் கொண்டானே

815 காலனு மிப்போ கையோரஞ் செய்தானே
சூருவனு மிப்போது சூழ்ந்து பிடித்தானே
இயம மிப்போது என்ன பாவங் கொண்டானே
தலையில் விதிப்படியோ தம்பிரான் கற்பனையோ
இட்ட தலையி லெழுத்து முடிந்த தென்றோர்

820 ஒட்டுவனே காலன் உலகளந்தான் வந்தாலும்
விரம லிபியை விலக்கலாமோ பசுவே
தனியே போறேனென்றுசஞ்சலியாதே நீ பசுவே
சாகிறேனென்று தயங்காதே நீ பசுவே
மாளுகிறேனென்று மயங்காதே நீ பசுவே

825 சிவலோகம் பார்க்க செய்ய திருத் தேரேறி
வேற்கணுள் வந்திடுவேன் உத்தமியே வுன்னுடனே
சீவனொழிந்து சிவலோகஞ் சேருதற்கு
கூட வருவேன் நான் கொம்பே ரிடையாரே
கயிலாயஞ் சேர வருவேன்நான் காரிகையே

830 சலியாதே யென்று தடவிப் பல காலும்
அபயம் அபயம் என்று ஆனந்த வாழ் மாரி
மயிரை விரித்துதறி மண்மேல் விழுந் தழுது

---

**பிரகடம் - வஞ்சனை, தீமை; சேல் - கெண்டைமீன்;**
**நீலவண்ணர் - திருமால்; நிமலர் - சிவபிரான்;**
**காலன் - இயமன்; உடு - நட்சத்திரம்;**
**சடுதி - விரைவு; பார்பதி - பார்வதி என்ற சொல்லின்திரிபு**
**தாரன் - மாலையினையுடையவன்;**

முன்கை நெரித்தாள் முகத்திலே கையறைந்தாள்
செங்கை சிவக்கத் திருவயிற்றிலே யறைந்தாள்

835 கையோடு கையறைந்தாள் கண் குருதி யாருேட
அய்யா கோ வென்று அடித்து விழுந்தழுதாள்
ஆகோ வென வென்று அரண்டு புரண்டழுதாள்
தேவேந்திரன் தேவி தெய்வமே யென்றழுதாள்
அந்த மொழி கேட்டு அயனுந் திருமாலும்

840 சந்திரருஞ் சூரியருந் தானவரும் வானவரும்
வந்த சிவனுர் மலர்ப்பாதம் தெண்டனிட்டார்
செந்தாமரைப் பதத்தில் சேர்ந்து திருவாய்ப்புதைத்து
இந்திராணி படுந் துயர மெல்லா மெடுத் துரைத்தார்
அப்போ சிவனுரும் அங்குள்ள தேவர்களும்

845 வெற்பார் கயிலாய மீதேறிப் பார்த்திருந்தார்
வானு ருல கோர் வழி திறந்து பார்த்திருந்தார்
வைகுந்த லோகம் வழி திறந்து பார்த்திருந்தார்
தேவேந்திரன் தேவி சிவனே சிவாய வென்று
பார்மேல் விழுந்து பலகாலபயமிட்டு

850 அநியாய மென்று அலறி விழுந்த் குரல்
சிவலோகநாதர் திருச்செவியி லூற்றபின்பு
மகா தேவர் தாமும் மனதாரக் கேட்டதற்பின்
சிவனுரு மங்கே திருவாய் மலர்ந்தருளி
வானவர் கோன் தேவி மயிரை விரித்தலறி

855 ஆனந்த மாரி யடித்துவிழாப் பொல்லாது
தாமார மாரி தரையில்விழப் பொல்லாது

---

சீவாத்துமா - உயிர்; ஆன்மா; பொத்தகம் - புத்தகம்;
இரட்சிக்க - பாதுகாக்க; சனி - சனி என்ற கோள்;
தார்குழல் - மாலையுடை கூந்தல்; பவுறனை - பௌர்ணமி நாள்;
செனிக்கிருர் - பிறக்கின்ருர்; நமன் - இயமன்

ஆகாது ஆகாது அபய மென்ன லாகாது
என்று சிவனுர் ஈஸ்வரியைப் பார்த்தருளி
போ கிரு பையே புகழ்சேர் குற மாதாய்

860 கட்டு விச்சி வேஷம் கடுகெனவே பூண்டுகொண்டு
பற்றிப் பார்சென்று குறிப்பார்த்தருளு மென்றுரைத்து
இப்போது போமெனவே ஈசர் திருவாய் மலர்ந்தார்
அப்போது உமையும் அருள் பெற் றெழுந்திருந்து
அக்கரவம் பூண்டுவர அரனுரு மப்படியே

865 கொக்கிறகு சூழ்ந்து குழந்தையு மார்பணிந்து
கோலப் பணியுங் குறப்பணியுங் தான் புனைந்து
செங்கை வளைபுனைந்து செஞ்சிலம்பு தானணிந்து
முன்கை முகதாரி முழுக்கடையந் தானணிந்து
கரதுக்குத் தோடணிந்து கண்ணுக்கு மையெழுதி

870 சாதிக் குறமகள் போல் சங்கு முத்துந் தானணிந்து
கத்தூரி நாமமிட்டுக் காம சரப் பொட்டுமிட்டு
பொற் கூடை பொற்குடுவை பொற்பிரம்பு
கைப்பிடித்து
கோவிந்த மாடிக் குறமாதர் தங்களைப் போல்
பாடி நடந்து வருவாளே பார்வதியும்

875 இந்திர லோகத் திமையோர் திருநகரில்
வந்து குறி பார்த்தார் வானவர் கோன் தன்பதியில்
அங்கங்கே சென்று அறிவு மிகவே யுரைத்து

---

**உற்ற - பொருந்திய; செஞ்சாந்து - சிவந்த சந்தனம்;**
**இருநாழி - இரண்டு படி; தன்மம் - தருமம்;**
**பறையன் - பறையடித்து அறிவிப்போன்; திரவியம் - செல்வம்;**
**வெள்ளிமலை - கயிலயங்கிரி;**

மங்கை நல்லார்க் கெல்லாம் வகை வகையே
கை பார்த்து
செம்மை செம்மையாகச் சிறந்த குறி பார்த்துரைத்து

880 அம்மை அம்மையென்று வந்தா ளறம் வளர்த்த
மாதாவும்
வந்தார் குறத்தி அம்மை வானவர்கோன்
கோயிலிலே
இந்திராணி தான் கண் டெழுந் திருந்து ஓடிவந்து
வாராய் குறமாதே வந்தெனது மாதுயரம்
தீராய் திறமாய் என் சிந்தை மயங்காமல்

885 பாராய்நீ என்தன் பசுவைப் பிழைப்பூட்டி
தாராய் குறத்தி யம்மே தர்மமுனக் கெனவே
கோவதை யாற்குற்ற குறிபார்த்து நீ யுரைத்தால்
வேண்டிய தெல்லாம் விரையவே கொண்டுவந்து
பூஷணங்கள் உள்ளதெல்லாம் பூட்டுகிறே
னென்றுசொல்லி

890 ஆசனங்க ளிட்டு அடிபணிந்தா ளப்பொழுது
பாகான மென்மொழியார் பார்வதியா ருள்மகிழ்ந்து
கேளா யெனதுகுறி கேவலமென் றெண்ணாதே
எந்நாளும் எந்நகரும் என்மலையும் என்பதியும்
உன்னோடே சொல்லுகிறேன் உத்தமியே
கேட்டருள்வாய்

895 உத்தமியே நீதா னுறுதியுடனே குறத்தைப்
பத்தினியே கூறுமென்று பார்வதியுங் கூறலுற்றாள்

---

அய்யர் - தலைவர் (சிவபெருமான்); நிறைநாழி - நிறைந்த படி நெல்;
செங்கமலம் - செந்தாமரை மலர்;
நாலுமுலை - நான்கு முலைக் காம்புகள்; திரை - மறைக்கும் சீலை;
ஓலம் - அபயமென்று வருந்த; ஈன - பெற்றெடுக்க.

தெந்தினனு தின தினனு தெந்தினனு தினனு
தெந்தினனு தின தினனு தெந்தினனு தினனு
ப்த்தியுட னுத்தமியை யழைத் தருகே வைத்துப்

900 பாரு கைக் குறத்தியென்று கோடி பொன்னு
மளித்தாள்
இந்தன மெனக் கரிதோ யுனக் கருமை யிப்போ
இரு நிதியும் நவமணியும் எழுபுவியு மெனது
உத்தமி என் மைத்துனி இலட்சுமி யிடத்தே
உகந் துறையும் மாயன் என்னுடன் பிறவி
யானேன்

905 முத்து நவரத்தினமும் முறத்திலிட்டுக் கொடுவா
முன்வரவு பின்வரவு உண்மை குறி சொல்லுறேன்
அத்திபுர மித்தனையும் முத்தொரு குடைக்கீழ்
ஆள மகன் வருவா னென் ஆறுமுக னருளால்
புத்திரனை யிப்பொழுது பெற்றிட முகூர்த்தம்

910 போதுவென் றறிந்தபடி பார்வதி மொழிந்தாள்
பார்பதி மொழிந்த மொழியேதென நினைந்து
பைங்கொடி முன்வந் தருகிருந்து உள்மகிழ்ந்து
சீர்மையில் மெய்யாது குறமாதர் குறியிதுவே
தெய்வீக மானவுரை தெய்வ மெனலாகும்

915 மோதக மோடு ஓதுமனம் பேதக மில்லாமற்
கூர்மை கொடு கேளும் குறிநீயு மினியெனவே
குறமகள் தன்னகரி வளமுறைமை யுரைத்தனளே
அண்ட பகிரண்ட நவ கண்ட புவனங்கள்
அரலோகம் பரலோகம் அதிகச் சிவலோகம்

---

**கால் - தூண்; சாந்து - சந்தனம்; அகல் - அகல் விளக்கு; பொற்றளிகை - பொன்னால் செய்த விளக்கு; சோமன் - ஆடை; காரிழை - கரிய ஆடை; பவுரணை - பவுர்ணமி நாள்; தாமம்-பூமாலை.**

920 எண்டிசையு மம்பலமும் உம்பர் திருநகரும்
இந்திரபதி மந்திரபதி எங்கு மெந்த னகரி
சந்திரர்கள் சூரியர்கள் தவஞ் செய்வ தென்னடு
சப்தரிஷி மெய்த் தவர்கள் பெற்றது மென்னடு
புண்டரீக மாலயன் உறைந்தது மென்னடு

925 பொன்னுலகு மென்னுலகு பூவையரே கேளாய்
கொச்சிமலே குடகுமலே கொல்லிமலே தில்லி
கொங்கீழம் வங்காளம் லங்கையொடு சங்கம்
பச்சைமலே பதுமமலே பவளமலே சீனம்
பசும்பொன்மலே கும்பமலே பரம கயிலாயம்

930 அட்டகிரி பருபதமு மகில குல வரையும்
அதிக மகா மேருவும் என் ஆனேமலேதானும்
சிட்டபரி பாலன மிகு துட்டர் குலேகாலம்
செங்கை வடிவேலவ னென்மைந்தனடியம்மே
கந்த ஞெடு கணபதியும் எந்தனுட மைந்தன்

935 காம ஞெடு கஞ்சனு மென்னுடை திருமருகன்
எந்தன் மருமகள் வள்ளியென்னு மவள் மாமி
ஈரேழு பதினலு லோகமு மென்லோகம்
அந்தருவே எந்தன்மொழி பொய்யாது காணும்
ஆறுசடை யீசர் கயிலாயர் துணேயாக

940 வந்து குறிகேளும் மலேயரையன் மகள்நானே
மணிக்கடகக்கை பார்த்து உன்மனம் நினேத்த குறி
சொல்வேன்
வெய்ய திரு வேள்வி செய்யும் அய்யன் மலேயரையன்

---

மை - இருட்டு; தடங்கை - அகன்ற கை;
பச்சுடம்பு - ஈன்ற மென்மையான உடல்; தவளம் - முத்து;
சென்மித்தோம் - உற்பவித்தோம்; ஆலித்து - தழுவி;
அய்யப்படாது - சந்தேகமின்றி; துவண்டு - மயங்கிக்கசங்கி.

வேத மிறு மாதிகளில் வேலனனு தாரன்
செய்ய வினை மாள அவர் சென்னி அறமீன்ற

945 திக்கென்று மெய்க்க தலை தக்கன் மெய்
அழித்தரக்க
துய்ய மனுநீதி நெறி வையமிசை யோதி
சோதி யென மெய்பாதி மதிசூடி மன்றுள்ளாடி
அய்யரடி யார் கிருபை ஆளன் றுளாளன்
ஆதிபர மேசுர னென் னுதன் அடியம்மே

950 பைங்கொடியே என்பேரு பார்பதி யார்பேரு
பரமர் திருநாமம் எந்தன் கணவர் திருநாமம்
கந்தனுட பேரிளைய மைந்தனுடை பேரு
கரிமுகன்றன் பேரெனது திருமகன்றன்பேரு
எந்தனுடைச் சிந்தையில் நினைந்த குறி சொல்வேன்

955 ஏழைமதி நினையாதே வேழமுக னருளால்நன்
மைந்தரவ ரிந்திரன் மனங்குளிர வருவார்
வானுலகை ஆள்வை மிக வாழ்வையடியம்மே
அம்மையடி யம்மையேஇன துண்மை பொழியுதே
அன்புடனே கேளோர் துன்ப மணுகாதே

960 செம்மை யில்லை என்பர் சிலரதுண்மை கொடு
சாலுமே
தேசத்தி லுள்ள குறத்தியோ நான் தெய்வமலைக்
குறத்தி
இம்மையிலும் மறுமையிலும் எனதுகுறி நல்லது
ஏத்தின முடிசூட நல்லபுத்திரரும் வருவார்
கொம்மை வரிமுலையாளே இந்திராணி யம்மே

---

**திருமொழி - பெருமையுடைய மொழி; கோதனம் - பசுதானம்**
**குழல் - கூந்தல்; கிளிமொழி - கிளிபோன்ற இன் சொல்**
**களைந்து - நீக்கி; துன்று - நெருங்கிய;**

965 குறித்தமுத்தை நினைத்தெடுத்து உன்மனத்திலுற்ற
துரைப்பேன்
வேறு அறிவாளி தனியாளி அரிதோடி பொருள்
தேடல்
பொறை தேடும் புகழ் தேடும் புண்ணியமே நீ தேடும்
நிறை நாழி தனில் நிரம்ப நெல்லளந்து கொடுவாரீர்
குறி கேளீர் குறிகேளீர் என்றுளே குறத்தி யம்மை

970 குறத்தி யம்மை சொன்னகுறி கொம்பனையுந் தான்
கேட்டு
அற பெரிய கோப மெல்லாம் மாறி அரை நாழிகையில்
சிறப்புடைய குறி பார்த்தேன் தேன்மொழியே
உந்தனுக்கே
இறப்பதுவும் பிறப்பதுவும் இழப்பரிக மறிய தென்றுள்
வளர்த்திடுவேன் அறமுளதும் வையமெங்கும்
படியிடுவேன்

975 அபயக் கரமும் காத்திடுவேன் அஞ்சாதே
நீ மகளே!
அஞ்சாதே அஞ்சாதே ஆரணங்கே அஞ்சாதே
நெஞ்சார நீ கேளாய் நினைத்த தெல்லா முரைத்
திடுவேன்
புஞ்சாருஞ் சடைமுடியார் பிஞ்ஞாகனுர் திருவருளால்
குஞ்சானும் வருவரென்று குறிபடுது கொம்பனையே

980 பட்டகுறி தப்பாது பத்தினியே யுத்தமியே
வட்டமதி வாணுதலாள் வள்ளியம்மை மணவாளன்
அட்டகிரி சூழுலகென் னறுமுகவன் திருவருளால்
இட்டமுள்ள புத்திரனு ரிப்போது தோன்றுகிருர்

---

பரஞ்சோதி - இறைவன் ஒளிவடிவான இறைவன்;
நாயகர் - தலைவர்; அடவு - பகையுணர்வு, சிறப்பு எனினுமாம் ஈண்டு
கள்ளி - வஞ்சனை நிறைந்தவள்;

புத்திரனு ருற்பவமாயிப்போ திருக்கிருர் மாதாவே

985 பெற்றருள்வை இப்போதே பெருமாள்தன்
திருவருளால்
அத்திபுர மித்தனேயு மாள்வை யல்லோ வாழ் மயிலே
சத்தியமே என் வசனந் தப்பாது சலியாதே
ஆருத்துயர மெல்லாம் ஆருத் தனியிழையே
காராளே மேளியனுர் கணபதியார் திருவருளால்

990 மாருத கணபட்சம் வாழ்வுகளும் புகழுகளும்
போான பாலகனும் வாரானே பெண்ணமுதே
பெண்ணமுதே யென்னரசே பெருந்திருவே
யருந்ததியே
நன்னுதலே நீர் கேளீர் நல்லகுறிப் படுகுது காண்
எண்ணரிய மாலயனும் இந்திரனும் மகிழ்வு பெற

995 கண் நிறைந்த பாலகனுர் கடுகெனவே
தோன்றுகிருர்
பாலகனுர் தோன்றுகிருர் பசுவினுடை வயிறு
தன்னில்
சேலனேய விழி மாதே திகரமெல்லாம் மொழிவாயே
நீலவண்ண ரருளாலும் நிமலர்திரு வருளாலும்
காலனுடை ஏடுகொடு கடுகெனவே தோன்றுகிருர்

1000 கடுகெனவே தோன்றுகிருர் கனவிலுள்ள பாலகனுர்
உடுவரையும் நவமணியு முன்னெசமே கொடுபோநீ
விடுதியிலே போய்வாரோம் மெல்லியலே
யெனமொழிந்து

---

**ஈன்று - குழந்தைபெற்று; கோலம் - அழகான;**
**பரகதி - வீடுபேறு; தன்மராசன் - தருமம் தன்மம் எனத் திரிந்தது**
**வீரியர் - வீரமுடையவர்கள்; அண்டர் பிரான் - தேவர்கட்குத் தலைவன்;**
**காராம் பசு - கரியநிறமுடைய பசு;**
**விண்ணுலகம் - தேவருலகம்:**

சடுதியிலே போவளல்லோ தார்குழலார்
பார்பதியும் - குறமுத்தும்
தார்குழலாள் பார்பதியார் தாளிணையைப் பூண்டு
கொண்டு

1005 மாது நல்லா ளிந்திராணி வாய்புதைத் தங்கே
துரைப்பாள்
பார்பதி யம்மே பரமே சுரன் திருவே
ஆவி னுயிர் தன்னை அருளுமெனக் காரமுதே
நாக விஷ கடியோ நஞ்சுகளோ வஞ்சனையோ
குறை யேது கூறுமெனக் கொம்பனையு
மேதுரைப்பாள்

1010 ஏனென மயங்குகிறீ ரிந்திரனார் தேவியரே
நாகமுந் தீண்டவில்லை நஞ்சுகளுந் தின்னவில்லை
பேயும் பிடிக்க வில்லைப் பிரகடமுங் கொள்ளவில்லை
மானாகங் கொண்டார் மசக்கை படுகுது [காண்
தேனே மொழியாரே சினைப் பிறமாய் வந்ததுகாண்

1115 வேல் பொருத கண்ணாரே மெய்நொந்து
நிற்குதுகாண்
பாலகனு மிபபோ பசுவிற் பிறக் கின்றார்
கோ வதையில் வந்து குமாரன் பிறக்கின்றார்
ஆவின் வயிற்றில் அலர்தாரன் தோன்றுகிறார்
மைந்தனு மிப்போ வருகிறான் பாற் பசுவின்

1020 பைங்கொடியே யென்னுமொரு பத்தினி
கேட்டேதுரைப்பாள்

---

**போற்றி செய - வாழ்த்துதற்கு; கனகம் - தங்கம்**
**உம்பர் - தேவர்; அசுவம் - குதிரை;**
**காரா - காரிய நிறப்பசு;**
**நம்பி - ஆடவர்களில் சிறந்தவன்;**

பாற் பசுவின் தன் வயிற்றில் பாலகனுந்
தோன்றுவனே
ஏற்குமோ இந்த மொழி எந்தனுடை மாதாவே
பாலகனர் வந்து பசுவிற் பிறந்த துண்டோ
காலமுந் தானிப்போ கலி பிறழ்த்து போறதுவோ

1025 கலியுக மெய்யாய் வருதோ தான் குறத்தி யம்மே
குறிகளும் பொய்யாய் விடுதோ
கொம்பேரிடையாரே
என்ன குறி சொன்னீர் ஏற்றதில்லை என்றனக்கு
நல்ல குறி சொல்லுமென்ன நாயகியார் நேசமுத்து
உரைத்த குறியதனை யுட் கொள்ளாய் நீ யென்ன

1030 மறித்து முகம் பார்த்து மாதாவும் மனதுரைப்பாள்
சித்திரைக்குச் சித்திரையில் சிறந்த பவுரணையில்
இற்றைக்கு ஞாயிறினி அரை நாழிகையில்
பொத்தகமும் பூணூல் கவசம் பொன்னி
னெழுத்தாணியுடன்
உத்தமனர் வந்து உதிக்கிறர்ப் பசுவில்

1035 சித்திர புத்திரனர்வந்து செனிக்கிறர்
இப்பொழுது
தேசம் விளங்க வென்று வந்து செனிக்கின்றார்
பூலோகம் விளங்கவென்று வந்து பிறக்கு கின்றார்
பூமி விளங்க வென்று வந்து பிறக்குகின்றார்
இப்போது வந்து பிறக்குகிரு ரெம் பெருமாள்

---

தடம்கை - அகன்ற கை; குறங்கு - தொடைப்பகுதி;
பகீரதி - கங்கை; இருஷியர் - முனிவர்;
தேவரிருஷியர் - தேவஇருடிகள், முனிவர்கள்;
மானேந்தியர் - கையிலே மானைப் பெற்றவர்;
உமாதேவியாரை ஒருபுடை கொண்டவர் எனினுமாம்;

1040 தப்பாது காணு மிது தார் குழலே நீர் கேளீர்
நாட்டுக் கணக்கும் நமன்கணக்கும் நங்கணக்கும்
ஏட்டுக் கணக்கும் எழுதவல்லார் சொல்லவல்லார்
எண்பத்து நான்கு நூருயிரஞ் சீவாத்துமாவும்
தம்பொத்தகத்தில் தரிக்குங் கணக்கரிவர்

1045 எழுதக் கணக்கும் இரட்சிக்க ஈசுபரியும்
உறும் பொருளாய் நிக்கவல்லார் உற்றதுணை
யாகவல்லார்
எறும்பு கடையானை தலையெல்லாம் வளர்க்க
வல்லார்
எழுதக் கணக்கும் இரட்சிக்க ஈசுபரியும்
அருளச் சிவனும் அளிக்க மகா விட்டுணுவும்

1050 வகிழ்க்க பிரமாவும் வாழ்விக்க லட்சுமியும்
கெடுக்கச் சனியனுங் கேள்விக்குப் பரமனுமாம்
கணக் காதியாரி காரியப் பேர் கண்காண
துரக்காதா மெய்காலைத் தூதர் தள்ளுளியங்கள்
இப்படியாக இருப்பர் காணேந் திழையே

1055 தப்பறவே சொன்னேம் சலியாதே யென்றுரைத்தார்
அந்த மொழி கேட்டதற்பின் ஆரணங்கு உள்
மகிழ்ந்து
இன்பங் கனிந்து இருதோள்கள் பூரித்து
உறைத்திருந்த சந்தனத்தில் உற்றிருந்த நீரதுபோல்
உறைத்திருந்த செஞ்சாந்தி லூற்ற பன்னீர்
வாசனைப்போல்

1060 கோடைப் பலாமரங்கள் வேரில் துளுத்தது போல்
பாரப் பசுமரங்கள் வேரில் துளுத்தது போல்

---

**சோபனம் - மங்கலம் நிறைந்த; பொன்கவரி - பொன்சாமரம்; கலம் - ஆபரணம் அணிகலன்; பாலடிசில் - பாற்சோறு; தமர் - உறவினர்; போனகம் - உணவு; தீபகம் - ஒளிவிளக்கு;**

பாற் பசுவின் தன் வயிற்றில் பாலகனுந்
தோன்றுவனே
ஏற்குமோ இந்த மொழி எந்தனுடை மாதாவே
பாலகனுர் வந்து பசுவிற் பிறந்த துண்டோ
காலமுந் தானிப்போ கலி பிறழ்த்து போறதுவோ

1025 கலியுக மெய்யாய் வருதோ தான் குறத்தி யம்மே
குறிகளும் பொய்யாய் விடுதோ
கொம்பேரிடையாரே
என்ன குறி சொன்னீர் ஏற்றதில்லை என்றனக்கு
நல்ல குறி சொல்லுமென்ன நாயகியார் நேசமுத்து
உரைத்த குறியதனை யுட் கொள்ளாய் நீ யென்ன

1030 மறித்து முகம் பார்த்து மாதாவும் மனதுரைப்பாள்
சித்திரைக்குச் சித்திரையில் சிறந்த பவுரணையில்
இற்றைக்கு ஞாயிறினி அரை நாழிகையில்
பொத்தகமும் பூணூல் கவசம் பொன்னி
னெழுத்தாணியுடன்
உத்தமனுர் வந்து உதிக்கிருர்ப் பசுவில்

1035 சித்திர புத்திரனுர்வந்து செனிக்கிருர்
இப்பொழுது
தேசம் விளங்க வென்று வந்து செனிக்கின்ருர்
பூலோகம் விளங்கவென்று வந்து பிறக்கு கின்ருர்
பூமி விளங்க வென்று வந்து பிறக்குகின்ருர்
இப்போது வந்து பிறக்குகிரு ரெம் பெருமாள்

---

தடம்கை - அகன்ற கை; குறங்கு - தொடைப்பகுதி;
பகீரதி - கங்கை; இருஷியர் - முனிவர்;
தேவரிருஷியர் - தேவஇருடிகள், முனிவர்கள்;
மானேந்தியர் - கையிலே மானைப் பெற்றவர்;
உமாதேவியாரை ஒருபுடை கொண்டவர் எனினுமாம்;

பூரித்து விண்டு பொன்னு பரண மெல்லாம்
ஆலித் தெழுந்திருந்து ஆனந்த வாழ் மாரி
மாணிக்கச் சேனூர் வயிரத் தாள் திறந்து

1065 காணிக்கை காணிக்கை யென்ருளே காரிகையும்
சொன்ன மொழிகேட்டு உமையாள் துய்ய
திருவாய் மலர்ந்து
உன்னுடைய வன்புகளே போதும் நமக் குத்தமியே
பொன்னுடமை யாவது இருநாழி நெல் காணும்
பொன்னும் பொருளும் புலையன் படையானே

1070 பணமுந் தனமும் பறையன் படையானே
தன்மம் படைத் தீராய்த் தன்மமே செய்திடுவீர்
பணமும் படைத்தீராய் பார்ப்பார்க்குத் தானமிடும்
பொருளும் படைத் தீராய் புண்ணியமே
பண்ணிவிடும்
புண்ணியமே கைதருங்காண் பூவார் புரிகுழலே

1075 தன்மமுங் கைதருங்காண் தாமார்ந்த வாழ் மாரீர்
சென்ம மொழிந்தாலத் திரவியம் வேருக்கிவிடும்
தன்னது மென்பார் தமக்கே பகை காணும்
என்னுடைய நேர்மை சொல்லக் கேளீர் நீ
ரேந்திழையே

1080 பொன்னின் மலையில் புகழ் சேர் திருமலையில்
வள்ளி மலையில் வட வேங்கட மலையில்
வெள்ளிமலையில் விரதி காண் மெல்லியரோ
தெய்வமலர் தேனுந் தினை மாவுந் தானருந்தி
அய்யரிடப் பாகம் அமர்ந்திருப்பே னரணங்கே
பொன்னும் பொருளும் பொருந்தாது காணெனக்கு

---

மருங்கு - பக்கம்; வண்ணச் சரம் - அழகான மாலை; ஆரம் - மாலை;
வார் காது - நீண்ட காது; பாடகம் - சிலம்பு;
பரமபதம் - இறைவனடி எய்தல்; சோதி - ஒளி;

1085 என்றுஞ் சிவனளப்பன் இருநாழி நெற்படி காண்
நிறை நாழி தன்னில் வைத்த நெல்லமையும் மாதாவே
இரு நாழி நெல்லா லிராச்சியத்தை யாண்டிருப்பேன்
எங்கும் படியளப்பேன் எல்லாம் படைத்தளிப்பேன்
மங்கயரே போய்வாரேன் மாதுயரம் நீர் தீர்ந்து

1090 தேசம் வெளிச் செறிக்கச் செல்வனர் தோன்றுகிரூர்
உலகம் வெளிச்செறிக்க உத்தமனர் தோன்றுகிரூர்
தேவேந்திரன் பொய்கை தனில் செங்கமலப்பூவில் வந்து
ஆவின் வயற்றில் உதிக்கிரு ரன்புடனே
பாற்பசுவின் யோனிபட வொண்ணு தென்றருளி

1095 வேற்றுருவங் கொண்டு விலாவிறைற் ரூேன்று கிரூர்
அப்போது பால்பசுவுங் ஆற்ற முடி போகாமல்
செப்பால் மடி தழைந்து சீம்பால் முலே சுரந்து
நாலு முலேயும் நலமாகப் பால்பொழிந்து
வேதனே போந்து வெடு வெடென்று மெய் சோர்ந்து

1100 மோதி விழுந்து முகிளொடித்துத் தாள் நெரித்து
நஞ்சு திமிர்ந்து நடுநெகிழ்ந்து நாவுயர்ந்து
மைந்தரை ஈன வயிர வயிறு நொந்து
மாஞகை மீன வயிர வயிறு நொந்து
ஆன திருமேனி அனுக் குலேந்து சீரழிந்து

---

**குழல் - கூந்தல்; கண்ணுயிரமுடைய காவலன் - ஆயிரங்கண்ணனுகிய இந்திரன்;**
**அம்பலம் - மேடைகள்; தாதி - தோழி;**
**பூங்கிளி - பூங்கிளி போன்ற பெண்;**

1105 நொந்து மிடை மிடைந்து நோக்காடு மெத்தியபின்
இந்திரனார் தேவி யிரங்கி விழுந் தோலமென்ன
பரமேசுர னாரும் பார்பதியார் தன்னருளால்
கருமாரி தன்னிலே கை கொடுக்கவே மகிழ்ந்து
பூவார் புரிகுழலாள் பூமாதேவி ஓடிவந்து

1110 நாவரை கட்டி நடுவே திரை வளைத்து
வாழை கமுகு மஞ்சள் வனக்கரும்பு தானிறைந்து
சந்தனத்தால் கால்நாட்டிச் சாந்தால் தரை மெழுகி
குங்குமத்தால் கோலமிட்டுக் குத்து விளக்கு வைத்தார்
பொன்னின் அகலேந்தி நின்றாள் புவிமாது

1115 மின்னொளி போல வெளிப்பட்டா ருத்தமனார்
அன்பால் மொழிய வொரு ஆண்பிள்ளை யாயினதால்
அறவே மனமகிழ்ந்து ஆண் பிள்ளை யாயினதால்
பொன் போல் வெளிச் செறிக்க புண்ணியனார் வந்துதித்தார்
உத்தமனார் வந்துதித்தார் ஓம் நமசிவாய மென்ன

1120 பொற் றளிகை ஏந்தினாள் பொற்செப்பிள முளையாள்
தளி கையி லேந்தினாள் தாமக் கருங் குழலாள்
பொன்னின் கலத்தில் பிறந்தார் புகழ் வேந்தர்

---

பொன்னறுகு - பொன் போன்ற அறுகம் புல்;
அமரர்கோ - தேவர் தலைவன்; வேதன் - பிரம்மா;
விருமா - பிரம்மா என்பதன் திரிபு; மனை - வீடுவாசல்;
வாணுதல் - ஒளி பொருந்திய நெற்றியுடைய பெண்;
மறுமாற்றம் - மறுமொழி;

பூமி விளங்கப் பிறந்தாரே புண்ணியனுர்
சித்திரை மாதத் திற் றேதி சுப வருஷம்

1125 உத்தம மான சிவயோக இலக்கணத்தில்
அந்தப் பவுரணேயில் ஆதித்த வாரமதில்
சித்திரைக்குச் சித்திரையில் சென்மித்தார்
பாலகனுர்
சென்மித்தார் சென்மித்தார் சித்திர புத்திரனுர்
பொன்னி னெழுத் தாணியும் பொத்தகமும்
பூணூலும்

1130 ஏடு பிடித்த இடக்கையும் வெண்ணீரும்
வீசிய கையில் விரலாழி மோதிரமும்
காதிலே யிட்ட கவசமணிக் குண்டலமும்
உடுத்திய சோமனும் உட்கட்டுத் தாவடமும்
சிவந்த நிறத் தழகும் செங்கமலக் கன்றழகும்

1135 உற்றன மாயவெனறித் தொளியும் திருவழகும்
பொற்றளிகை மீதிற் புரந்தாரோ புண்ணியனுர்
காதிலே யிட்ட வரிமணிக்குண்டலத் தார்
காரிழை மாந்தர் கணக்க ரிவர் என்பாரும்
மார்பிலே பூண்ட வரியொளிசேர் பூணூலால்

1140 இராச குமார ரிவர் காணு மென்பாரும்
அந்த யிடை சேரும் புரைநூ லரைவடத்தால்
எந்தெந்தத் தேசத்தி லிருந்துவந்தா ரென்பாரும்
மண்ணுக் குரித் தாய் இருந்தாரோ புண்ணியனுர்

1145 என் செய்வோ மென்பாரும் என்கொடுப்போ
மென்பாரும்

---

சோபனம் - மங்கலம்; தணல் - நெருப்பு;
தரணி - உலகம்; கலியன் - கலிபுருடன்;
மாராயம் - புகழுரை கூறல்; கோன் தலைவன்;

அஞ்ச லஞ்ச லய்யா அகத் தடிமை யென்பாரும்
ஆனந்த வாழ் மாரற் கன் பான பேரடிமை
ஏடலர் பூந்தாரா னுக் கிப்பவே தானடிமை
மற்று முதலடிமை மாற்றளித்த பின்னடிமை

1150 கொத் தடிமை சேர வென்று கூறினார் கூறியபின்
ஆர்வமோ மாவோ வென் ருலித் தெழுந் திருந்து
திருவாய் திறந்தழுதார் சித்திர புத்திரனார்
அய்யப் படா தென் றனைவரையுங் கையமர்த்தி
தெய்வத் திருக் கணக்காய்ச் சென்மித்தோ
மென் றழுதார்

1155 சிவனார் திருக் கணக்காய்ச் சென்மித்தோ
மென் றழுதார்
அழுத குரலோசை ஆயிழைகேட் டோடிவந்து
மலடிருந்த ஆவலுடன் வாரி யெடுத் தணைத்து
ஆலித்துள் மகிழ்ந்து அன்பா லுற வணைத்து
பூரித் துவண்டு தவளப் பொன்னா பரணமெல்லாம்

1160 பொற்கனகப் பூஷணங்கள் பூரித் துவண்டொழுக
பச்சுடம் பதாகப் பரந்து திருமேனி யெல்லாம்
பால் முலைய தாகப் பால் சுரந்து கொங்கை
யெல்லாம்
பாலகனா ருண்டருளப் பால்பாயுங் கொங்கை
ரெண்டும்
கொங்கையிரண்டும் குதி கொள்ளப் பால் சுரக்க

1165 தன்பிள்ளை யென்று தடங்கையுற வணைத்து
தான் பெற்றுப்போலே தரணியிலே போய்ச்
சேர்ந்தான்

---

உளவன் - உளவு உரைக்கும் பகைவன்; அருக்கன் - சூரியன்;
விடக்கு - புலியின் உணவு; வீரியர் - வீரமுடையவர்;
அம்பலம் - மேலிடம்; இணை - இரண்டு;

மையகல மாகி மயங்கி யவள் சோர்ந்த பின்பு
அய்யரே அய்யா வெள்றருள் புரிந்தார் பாலகனார்
அருளுந் திருமொழியை அன்பாகக் கேட்டதற்பின்

1170 திருமேனி மீண்டத் துறவியராய்ப் போய்ப்புகுந்து
வாரியெடுத்து மடிமேலே வைத்திருந்து
வார் காதுருவி வயிரஞ்சேர் மூக்கெடுத்து
தோ லாத வீரியற்குத் தொப்புள் கொடி
யறுத்துக்
கோதானம் பண்ணிக் குளிசம் பலசாத்தி

1175 நீராட்டலாடி நீர்ப்பசைக்குப் போந்த பின்பு
ஈரங்களைந்து இணையாடை தானுடுத்தி
உலராத உக்சிக்குச் செவ்வெண்ணெய் தானுமிட்டு
நீலமர்ந்த நெற்றிக்கு நிலக்காப்புத் தானுமிட்டு
பொற்காப்பும் மெய்க்காப்பும் பூஞ்சதங்கை
தண்டையிட்டு

1180 சொல் கேளா நாகந் தெடத் தேடுராப் போலே
ஏறு திருநெற்றி தனி லின்பாகப் பொட்டு மிட்டுப்
கீறு திரு நீறும்இட்டார் கிளிமொழியாள்
துன்று குழலாற்குச் சுண்டு வலிக் கிலுமென்
பேடை மலர்க் கண்ணூற்குப் பிரண்டு
வலிக்கிலுமென்

1185 ஓடை மலர்க் கண்ணூற்கு உதிரஞ் சொரியலுமென்
வெந்நீர் குடித்து விளக்கெண்ணெய் தான்குடித்து

---

வடு - குற்றம்; புல்லூரி - புல்லுருவி (''நல்ல மரத்தில் புல்லுருவி பாய்ந்தாற் போல்'' என்பது பழமொழி.
குறை - மாற்றுக்குறைவு; உவர் - உவர் மண் (நெல் விளையாத மண்)
திங்கள் - சந்திரன்; கண்டம் - கழுத்து;
ஆலாலம் - ஆலகாலம் என்னும் நஞ்சு; சென்மம் பிறப்பு;
பங்கயமா மாது - தாமரையில் உள்ள இலக்குமி;

வெங்காயஞ் சுக்கு மிளகு சமதாகமுடன்
ஐங்காயங் கூட்டி யபிஷேகம் நெய்யென்
ருரவைத்து
செவ்வெண்ணெய் வார்த்துத் திருவிளக்கு
தானிரைத்து

1190 பொன்னின் திரை வளைத்துப் பூங்கிளியும்
போய்ப்புகுந்தாள்
அம்பொன் திரை வளைத்து ஆரணங்கு நீங்கினள்
உருவு திரை வளைத்து உத்தமியும் நீங்கியபின்
மைந்தரை ஈன்ற பசுவாடி மனந் தளர்ந்து
பைந் தலைக் கீழ் மோதித் தலையடித்துக்
கொண்டுருண்டு

1195 வெண்கண் புரண்டு விடைகாலெறிந் தலறும்
அங்கொரு தாதி அறிவாள்கண் டோடி வந்து
பச்சைப் பயறு பழத்தை மிகப் பிசைந்து
கொச்சைப் பசுவே குடியு மெனவே கொடுத்து
குப்பைச் சேற்றைக் கூளமெல்லாங்கூட்டி
யரித்தெடுத்து

1200 வைக்கோலைச் சும்மாடாய் வைத்தார் தலைக்குயரம்
கிடகிட வென்று கிடத்தியபின் கீழ்நிலத்தில்
சரணஞ் சரணமையா தற்காத்துக் கொண்டருளும்
பரம பரஞ்சோதியே பார்பதியே யென்றருளி
அயயனே மெய்யனே ஆளும் பெருமாளே

1205 தெய்வசிகா மணியே தெய்வங்கள் தாபரமே
பத்தே பரஞ்சுடரே பாண்டவர்கள் தாபரமே

---

முன்நாள் - பழங்காலம்; ஈராறு - பன்னிரெண்டு வயது;
அளகம் - கூந்தல்; புழுகு - மணப்பொருள்; அஞ்சனம் - கருமை;
ஓரம் - வஞ்சனையான வார்த்தைகள்; கிலேசம் - வருத்தம்;
பலகாலும் - பலமுறையும்;

அத்த பேர்க் கெல்லாம் மனத்தாபம் நீ யொழிய
மற்றும் நினைக்க வழக்குண்டோ மாயவனே
இப்போ எனக்காறும் என்கோவே யென்றுரைக்க

1210 அப்போ சிவனு மரியயனுந் தேவர்களும்
வானுரு லோகம் வழிதிறந்து பார்த்திருந்தார்
வைகுந்த லோகம் வழிதிறந்து பார்த்திருந்தார்
தன் பெருமை தானறியாச் சண்டாளி செய்கையிது
அன்புடையோர் பாருமென ஆன்றவ
ரேதுரைத்தாரே

1215 சித்திர புத்திரரே தெய்வங்கள் நாயகரே
பெற்ற பசுவைப் புறக்கணித்து விட்டாள் காண்
புக்கைத் தவிடு தழைப் புல்லுகளும் போடவில்லை
வைக்கலொடு தண்ணீரும் வைத்திலள்காண்
மாதுநல்லாள்
கள்ளி யவள்தான் கழனி கஞ்சி வைத்திலள்காண்

1220 மலடி யவள் தான் மதி யழிந்து போனாள் காண்
பாவியவள் முலைதான் பால் சுரக்கக் காரியமென்
மூதேவி யாற்கு முலைசுரக்கக் காரியமென்
இந்த இருசிதனக் கிவ்வடவு உண்டான தெல்லாம்

1225 மைந்தர் திருவருளின் மாய்கையாய் வந்ததுகாண்
ஈன்றறியாக் கன்னிதனை இப்போது சூழ்ந்து
கொண்டு
வானவர்கள் வந்து மருந்து கொடுக்குது காண்
காலனே நீ தானேக் கடுகென வங்கோடி
கோலமணித் தேரின்மேற் கோவதையைத்
தானேற்றி

---

தரியாமல் - கேட்காமல்; கட்டுவிச்சி - குறி சொல்பவள்;
மட்டு - தேன்; பங்கயம் - தாமரை; ஆலித்து - அமர்ந்து;

1230 பாற்பசுவுக் கிப்போ பரகதி யுண்டாகுகைக்கு
கூட்டோடே இந்நேரம் கொண்டோடி
வாருமென்றார்
அப்போ தெமது தன்மராசன் எழுந்திருந்து
பொற்பாதம் போர்த்தி செய்து போக விடை
கொண்டருளி
மேதன்மராயருடன் எம்பிரான் தூதர்களும்

1235 பொன்னரி மாலைகளும் பூந்தேரும் பாகர்கறும்
மின்னனையார் கோவிலிலே வீரியரெல் லாம்புகுந்து
சித்திர புத்திரரைப் பெற்ற திருப்பாற் பசுவை
பற்றி எடுந்து இந்திரபானத் தேர்மேலேற்றி
தேரிலவ ரேறி சிவலோகஞ் சென்ற பின்னும்

1240 வானு ருலகம் வழி திறந்து போய்ப் புகுந்தார்
வைகுந்த லோகம் வழிதிறந்து போய்ப் புகுந்தார்
அன்பிற் சிவனாடி வணங்கித் தெண்டனிட்டு
சென்று சிவ லோகஞ் சேர்ந்தது வப்பசுவும்
செம் பொன் கயிலாசஞ் சேர்ந்தது வப்பசுவும்

1245 ஆகாசம் விண்ணுலகஞ் சேர்ந்தது வப்பசுவும்
சிவலோகம் தண்ணிலே சேர்ந்தது வப்பசுவும்
மகா தேவர் சீர்பாத மலரடியைப் போற்றி செய்து
அண்டர் பிரானே அடியார்க் கெளியோனே
தெண்டனென்று பொற்பாதந் சேர்ந்தது
காராம்பசுவும்

---

முழுத்தம் - ஒருகாரியம் துவக்க ஏற்ற நன்னாள்; ருத்திரர் - சிவன்; அயன் - பிரம்மா; மால் - திருமால்; கனக அபிஷேகம் - பொன்னால் ஆட்டுதல்;
கனகம் - பொன், தங்கம்; தார் - மார்பிலணியும் மாலை;
ஆரணம் - மறை; வேதம்; ஆரணர் - மறைவல்லார்;

1250 காராம் பசுவினுக்குக் காமதேனுக வென்று
சீரார் திருநாம மிட்டார் சிவனாரும்
அன்று முதல் காமதேனுகி யருந்தவர்க்குக்
சென்று சென்று பஞ்சகவ்விய தனங் கொடுக்கும்
அம்மையும் ஈசுரரும் அப்போ தருள் புரிந்து

1255 உம்மை வளர்த்த தொரு வும்பர்கோ னிந்திரரை
பிள்ளைத் தவங் கிடந்து பேரழிந்து போனார்காண்
மைந்தனை வேண்டி வலி வழிந்து போனார் காண்
பாலகனை வேண்டிப் பரிவழிந்து போனார் காண்
அத்தி புரத் துக் கரசிழந்து போகாமல்

1260 புத்திரரை ஈன்று கொடுத்தீரே பொற்கொடியே
தேவ தேவேந் திரனார் செய்த தவம் பார்த்து
கனக மணி முடியைக் காமதேன் கண்டருளீர்
மனது களி கூர மன்ன னெதிராக வந்து
செம் பொன் மணி முடியைச் சேர்ந்து பசு மேய்ந்து
கொண்டு

1265 தம்பி வந்தா னுந்தனக்குத் தார்வேந்தே யென்று
சொல்லி
உம்பர் உலகெல்லாம் ஒருகுடைக் கீழாள வந்தான்
நம்பி யெழுந்தருளும் நாயக்மே என்று சொல்லி
பசு வந் தெழுப்ப வெகுப்பாக்கியமாச் சென்றருளீர்
அசுவதியாகம் வளர்த்தப்பொழுதே வேள்வி செய்து

1270 கங்கை நீராடிக் கனக தானங்கள் பண்ணி
செங்கச் சிறப்பளித்து தேர்வேந்த ரேதுரைப்பார்

---

**கோதனம் - பசுதானம்; பூஷணம் - ஆபரணங்கள்;**
**குஞ்சரதானம் - யானைதானம்; இறையிலி -தேவதானம்;**
**புதுத் துகில் - புத்தாடை; பரி - குதிரை;**
**வேதியர் - வேதம் வல்லவர்; கனகதானம் - பொன்தானம்;**

காம தேனுக வந்த காராவே நீர் கேளீர்
மேனக ரம்பை விறுவிசியைத் தான் கூட்டி
போய் வாருமென்று போனார் புகழ்வேந்தர்

1275 தேவேந்திரர் போன பின்பு தெய்வ குல மாதர்
பூவேந்திரர் புத்திரரைப் போற்றி செய்யப் போவார்கள்
இரதியு மருந்ததியும் எண்ணமைந்த லெட்சுமியும்
சரசுவதியும் பார்பதியுந் தயை மனோன்மணியும்
தாமார மாரருட சமத்தரிய வேணுமென்று

1280 வானவர் கோயில் வந் திறங்கி மயிலனையார்
பூம்பட்டின் மேலிருக்கும் பொன்னின் குழல மணரை
தாங்கித் தடங்கையுந் தார் குழலார் தாமெடுத்து
மானகம் போ லேந்தி மடிகளிலே வைத்திருந்து
ஆனந்த மாரற்கு அருகு மணமிட்டார்கள்

1285 மங்கை நல்லார் போந்தபின்பு மற்று முள்ள வானுலகில்
சங்க பதியாருந் தாமந்த தேவியரும்
பொங்கு பதியாரும் பூலோகக் கன்னியரும்
பொங்கு கீரதியும் பூலோகக் கன்னியரும்
கைகேகி யாருங் கமலவல்லி நாயகியும்

1290 துய்ய தெய்வத் தாயுங் துரைமக்கதேவியரும்
முன்னூறு கோடி முடிமன்னர் தேவியரும்
நாநூறு கோடி நகரத்தார் தேவியரும்

---

பரிமா : விரைந்து செல்லும் குதிரை; காலாள் - காலாட்படை வீரர்;
அட்டதிக்கு - எட்டுத் திசைகள்; சேசேயென - மிகுதியாக
அண்டர் - தேவர்கள்; இருஷியர் - இருடியர் அதாவது தவமுனிவர்கள்
ஓலக்கம் - அத்தாணி மண்டபம்; மறை - வேதம்

அஞ்ஞாறு கோடி அரசமக்கள் தேவியரும்
எண்ணூறு கோடி இராசக்கள் தேவியரும்

1295 முப்பத்து முக்கோடி தேவர்கள் தம் தேவியரும்
நூற்பத் தெண்ணாயிரம் இருஷியர் தம் தேவியரும்
சேத்திமிதிமி யென்று தேவேந்தர் கோவில் சென்று
சாமத்திலே யறிந்தார் தலை நம் பிராட்டி யரை
இட்டா ரருகு மண மிந்திரனார் புத்திரற்கு

1300 பட்டாடைக் குள்ளிருக்கும் பஞ்ச வண்ண
மேனியரை
பவளக் குழ மணரைப் பாசமுடன் சேர்ந்திடுக்கி
புளகித் துள் மகிழ்ந்து பூரித் தினி திருந்தார்
வானகம் போலேந்தி மடிகளிலே வைத்திருந்தார்
கோலப் பட்டாத்தின் குறங்கின் மேல்
கொண்டிருந்தார்

1305 சிங்காதனங்களின் மேல் சேர இனி திருந்தார்
வீர சிங்காதனத்தே மேவியிருந்த பின்பு
தேவ ரிருஷியருந் தேவ தேவாதியரும்
மானேந்தி யாரும் மடத்து முதலியரும்
தானம் பரிகலமுந்தார் வேந்த ருள்ளாரும்

1310 சேனைத் தலைவர்களுஞ் சேர்த்தி மிதியென்று
சாமத்த ரிருந்தார்கள் தார்வேந்தர் கோவில் சென்று
வாசலிலே தட்டு வகை வகையே கொண்டு வந்து
மோதிரங்கள் மின்ன முகவாசந் தான் கொடுத்தார்
வந்த முகவாசம் வாங்கி மனமகிழ்ந்து

1315 இன்ப இலை பிளவு தினறங் கினிதிருந்தார்

---

**மணிக்குடை - அழகான வெண்கொற்றக்குடை; முருடு - சங்கு; இயங்கள் - வாத்தியக்கள்; கவரி - வெண்சாமரம்; கோகிலம் -குயில்;**

அத்தி புரத் தமரை யப்போ தறிந் திருந்து
சித்திர புத்திர ரென்று சேவை செய்தா ரெல்
லோரும்
போர் வேந்தரைக் காணப் போவாரும் மீள்வாரும்
தேர் வேந்தர் கோவில் திமி திமெனவே முழங்க

1320 சங்கநிதி யதுமநிதி தான் முழங்க வான் முழங்க
அங்கொரு தாதி யறிய வந்தா ளன்புடனே
தேவேந்திரற்குத் தினபோனகஞ் சமைத்து
காவலர்க்குப் பொன்னின் கலம்வைத்து
நீர்வார்த்து
பாலடிசி லிட்டுப் பரிந்த முத்துத் தாளளிக்கும்

1325 நாலுவகை முப்பிகளில் மேலான நன்னுதலாள்
செங்கழ னிறத் தாதி தெளிவுற் றெழுந்திருந்து
இந்திரனார் கோவிலிலே ஏறியவ ரினிதாய்
வளைத்த திரையை வரிவளைக் கையால் நீக்கி
பனிக் கவரி வீச நின்று பைங்கொடியுமென்
சொலுவாள்

1330 எந்த னணாங் கரசே இராச குல தீபகமே
மைந்தர் பிறந்தாரே மாருய சோபனங்கள்
சோபன மென்று தொழுதங் கடிபணிந்தாள்
ஆமடி சோபன மென்ரு ளானந்த வாழ்மாரி
கையருகே நின்று கவரிகொடு வீசினாள்

1335 முத்தின் கவரி யிடுவாள் முகம் நோக்கி
முன்னே கவரி யிடுவாள் முக னோக்கி
வயிரக் கவரி யிடுவாள் வாவென்று

---

**கொம்பனையார் - கொம்பு போன்ற பெண்கள்;**
**சுடரொளி - சூரிய ஒளி; சோதிவிட - ஒளி விட;**
**வசந்தன் - மன்மதன்; வசந்த காலம் எனினுமாம்.**
**சல்லிகை - இசைக் கருவி; முழவு - மத்தளம்.**

மாணிக்கப் பொற்கவரி மற்றொருவர்
கைக் கொடுத்து
தேவேந்திரனாரைக் தீபுரமாய்ச் சென்று கண்டு

1340 ஆவின் வயிற்றில் லரத்தாரான் தோன்றியதும்
பசுவின் வயிற்றில் பாலகனார் தோன்றியதும்
பாலகனை ஈன்ற பசு பரமபதம் நாடினதும்
கோவதையார் பூந்தேரில் கூட்டோடே
போனதுவும்
வானவர் கோன் முனறிய மாராயம் நீயுரைத்து

1345 வாங்கு முடுகன்றை வாங்கியிடு வாருமென்றார்
ஆயுளடி யென்று வருள் பெற்றே னென்று
கூறப் பெற்றே னென்று கும்பிட் டெழுந் திருந்து
ஏவப் பெற்றே னென்று இணைக்கடைக்கை
தான் தொழுது
சோபனங் கூறவென்று துய்யதிருத் தாதியுந்தாம்

1350 போவா ளவளுடைய பொன்னாபரண மெல்லாம்
பொன்னாப ரணமே பூஞ்சிலம்பே பாடகமே
பாடகமே மேலீடே பனபொன்மணி பொற்
சிலம்பே
சூடகமே மெல்வளையைத் தோடேது வண்டார்ப்ப
சுற்றி முடித்த முடிவந்து தோளில் விழ

1355 சுந்தரப் பொன்னாரம் தோளில் நிழல் காட்ட
வாரிட்ட சுட்டி வடிநெற்றிக் கிடை நடுவே
சீராக இட்ட திருநீறு நின்றிலங்க
வாளி யிலங்க மகரக்குழை யிலங்க

---

**தாமம் - மலர் மாலை; அருக்கன் - சூரியன்; சோமன் - சந்திரன்; விருது - வரிசை, பரிசுப்பொருள்கள்; வேழமுகம் - யானை முகம்; அநுட்டானம் - கடமைகள்; அறுமுகன் - ஆறுமுகங்களையுடைய முருகப்பிரான்.**

வாளியும் வார் காதுக் கொப்பு மறுதலைக்க

1360 பொற்றெட் டிலங்க புருவக் கடை நெரிக்க
முத்தார மெல்லாம் முலைமேல் விளையாட
வார்காதுக் கொத்த வயிரமணி யசைய
வான் முகத்துக் கேற்ற வண்ணசரம் பின்தாழ
கோவை முத்தாரங் குவிமுலை மேல் சோதிவிட

1365 ஆர முத்தாரம் அடைவடைவே சோதிவிட
பக்கத்தி லாரம் பளபளென்று சோதிவிட
உட்கழுத்தி லாரம் ஒளிபரந்து சோதிவிட
ஆரம் போற்றுலி யவள் கழுத்தில் சோதிவிட
ஆபரண மெல்லாம் அழகு புரண்டசைய

1370 மருங்கு துவண்டசைய வண்ணசரம் பின்தாழ
மந்தாரம் சண்பகம் பிச்சி மகிழ்மாலை
கொந்தார் குழலாள் குழல்மேல் விளையாட
மஞ்சு விரி பூம்பட்டு டுத்தி மருங்கிருக்க
தூது வளம் பூம்பட்டு உடுத்தித்துவண்டசைய

1375 எலுமிச்சம் பூம்பட்டாடை ஏகாசந்தான் போட்டு
ஏக விடுபட்டு யெடுத்து முலைமூடி
மாணிக்கத் தொங்கலை வாங்கி இருபுறமும்
முத்து முகத் தலையை விட்டு முதுகிலிட்டு
வண்ண முலைக்கும் இடைக்கும் நடுவாக

1380 மாதுளம் பூம்பட்டு மருங்கிருக்க கொய்துகட்டி
காசிறியக் கட்டி கடைசிறிய கற்பூரமும்

---

**வட்டவனை - வட்டமாகிய ஆசனம்; வானகம் - விண்ணுலகம்;**
**பூஷணங்கள் - ஆபரணங்கள்; குறங்கு - தொடை;**
**முத்தியிட்டு - முத்தங் கொடுத்து;**
**வித்தாரமாக - விளக்கமாக பத்தியுடன் - அன்புடன்**

சீவலரிப் புளவும் செம்புழுக்காய் வெற்றிலையும்
வாயார முக்கி வலக்கை சுருள் பிடித்து
நாக மெழுதி நவரத்தின மிழைத்து

1385 தீப மெழுதி சிறு பிரப்பங் கோல் பிடித்து
பொற்பிரப்பங் கோல்பிடித்து பூங்கிளியும் போய்
நடந்தாள்
வாசற்படி கடந்தாள் மண்டபங்கள் தான் கடந்தாள்
கோவிற்படி கடந்தாள் கோபுரங்கள் தான் கடந்தாள்
ஆனந்த மானந்தம் என்றுளே ஆரிழையும்

1390 அவ்வீதி வீதித்தெருவு மது கடந்தாள்
சித்திரா வீதித் தெருவு மது கடந்தாள்
தேரோடும் வீதித் தெருவே புறப்பட்டாள்
செம்பவள வீதியிலே தேவேந்திரர் வீற்றிருக்கும்
அம்பலங்கள் தேடி அணியிழையும் போய்ப்
புகுந்தான்

1395 வெள்ளானை மீதேறி விண்ணோர் புடைசூழ
கண்ணாயிர முடைய காவலனார் வீற்றிருந்தார்
தாதி யவளிந்திரரைத் தான் கண்டுள மகிழ்ந்து
வாசமுமித்து மலர்க் குழலிற் பூவுதறி
ஆடை யொதுக்கி அணிவிரலால் வாய் புதைத்து

1400 கூரை யொதுக்கிக் குனிந்தவளுங் கைகூப்பி
பூவும் புதுமலரும் பொன்னறுகும் பத்திரியும்
பாதந் தனில்தூவிப் பைந்தொடியுந்
தெண்டனிட்டாள்

---

**ஆகமங்கள் - வேதத்துணை விளக்கங்கள்;**
**முத்தி - வீடு பேறு; இமையோர் - தேவர்;**
**குஞ்சரம் - யானை; மாநாகம் - பெரிய நாகம்;**
**சுடரொளி - சூரிய ஒளி;**

தேவேந்திரனுர் திரும்பியங்கே பார்த்தருளீர்
ஆர்பணி தாதி அறியஉரையு மென்ருர்

1405 ஆர்பணியு மல்ல வடியேனும் நம்பணி யென்
பேர் பணியு மல்ல பெருமாளே விண்ணப்பம்
அன்புடனேகேளு மமரர் கோவே யெனத்தான்
செம்பவள வாய்திறந்து தேவேந்தர் சந்தோஷ
மைந்தர் பிறந்தாரே மாராய சோபனங்கள்

1410 சோபன மென்று தொழுதங் கடிபணிந்தாள்
ஆமோதான் சோபனமு மல்லவே சோபனமும்
ஆனந்தமாரி இறுதியோ சோபனமும்
அறுதி யறுதி யென்ரு ளானந்த வாழ்மாரி
ஈதென்ன சோபனந்தான் ஏலங் கருங்குழலே

1415 வேதன் விதியால் விருமாவின் கற்பனையால்
எழுதலை முறைக்கும் எம்பிரானிட் டெழுத்து
பாலன் பிறக்கப் பயனில்லைகாண் பைந்தொடியே
குடியிற் குடல்வழியில் கோத்திரத்தி லுள்ளான
அரசுக் கடியடியாய் ஆள்வதற்கோர் பிள்ளையில்லை

1420 முடிசூட்டப் பிள்ளைஇல்லை மூவுலகோர் போற்றி
செய்ய
மடியிலிருந்து மனையாளப் பிள்ளை இல்லை
பிள்ளை பிறந்த வகையேது பேதையரே
மைந்தர் பிறந்த வகையேது வாணுதலே
பேய்ப் பெண்ணே இப்போது பிள்ளை வந்த
வாரேது

---

**வாய்புதைத்து - வாயைப் பொத்திக் கொண்டு;**
**ஏட்டில் - நூலில்; நமன் - இயமன்;**
**பைங்தொடியீர் - பசுமையான வளையலணிந்த மடவார்களே**
**சொக்கலிங்கம் - முழுதான இலிங்க வடிவம்;**
**பாதகம் - தீய இழி செயல் ஈடேற - விளக்கமுறை**

1425 வாட்கண்ணே இப்போது மைந்தர் வந்த வாறேது
பைந்தொடியீ ரிப்போதுப் பாலகனு ருற்பவித்து
வந்தவாறேது மறுமாற்றங் கூறுமென்றார்
அரசனுரையுரைக்க ஆரணங்கு மேதுரைப்பாள்
பசுவின் வயிற்றில் ஒரு பாலகனார் வந்தார் காண்

1430 ஆவின் வயிற்றில் ஒரு அத்தியர் கோன் வந்தார் காண்
கோவதையில் வந்து குமரர் பிறந்தார் காண்
புண்ணியரை ஈன்றபசும் பொன்னின்மலை சேர்ந்தது காண்
மைந்தரை ஈன்ற பசு வாழ்கயிலை சேர்ந்தபின்பு
உந்தனுடை மாதேவி ஓடி எடுத்தணைத்தாள்

1435 அப்போது பச்சுடம் பாயான முலை சுரந்து
தப்பாத மென்மொழியாள் தானுமங்கே போய்ச் சேர்ந்தாள்
மாராயங் கொண்டு வந்தேன் வாழ்வேந்த னுமக்கு
சோபனஞ் சோபன மென்றாளே தூய்மொழியும்
தேவேந்தர் கேட்டு திகைத்து நெடுமூச் செறிந்து

1440 நாமே யிதுகேட்போம் நமசிவாய மெனவே
தாமார மார தரணியிலே போய்ச் சேர்ந்தார்
சேர்ந்த வாசர் துணுக்கென் றெழுந்திருந்தார்
ஏந்திழையார் சொன்ன மொழி எல்லோருங் கேட்டீரோ
நாட்டவரே தேவர்களே னந்தி இராசாக்களே

---

தன்மக் கணக்கு - அறநெறிப்படி எழுதும் கணக்கு;
ஏந்திழை - சிறந்த ஆடையணிந்த மகளிர்;
சீராளர் - சிறப்புடைய பிள்ளை;
சென்மக் கணக்கு - பிறவிக்கணக்கு

1445 மாட்டின் வயிறு தன்னில் மைந்தர் பிறந்த துண்டோ
பசுவின் வயிற்றி லொரு பாலன் பிறந்ததுண்டோ
கலியன் பிறந்த துண்டோ காராம் பசுத் தனிலே
எவர் செய்த தீவினையோ எம்பிரான் சோதனையோ
பலவ ரிட்ட மாயமோ பாவம் வெளிப்பட்டதுவோ

1450 அரச மக்கள் காவலழிந்ததோ வாசலுந்தான்
அந்தணர் களாலே யழிந்ததோ வாசலுந்தான்
மலையுங் கரைந்துதோ மாயம்வந்து சூழ்ந்ததோ
கடலுங் கவிழ்ந்துதோ கலப்பசுவு மீன்றதோ
பெண்புத்தி சொல்லப் பிழைவந்து சூழ்ந்ததோ

1455 புண்பட்ட நெஞ்சு புகை தனலாய் மூண்டதுவோ
பெரியார் பெருந்தலையார் பேய்கொண்டு போனரோ
சிறியார் பெருத்தார்பின் செய்வதறிவாரோ
கற்பனையும் வேருனல் கல்லுங் கரையாதோ
உட்பகையு முண்டானல் ஊரு மழியாதோ

1460 அழியாத கற்பித் தழியவந்த காரியமென்
முடியாத பூவை முடிப்பவரார் பாவியனே
உள்ளறைக் குள்ளே உளவ னிருந்தானே
பொன்னறைக் குள்ளே போந்த வினை தானேதோ
வாழ்வறைக் குள்ளே வந்தவினை ஏதெனவே

1465 தானிலே கைகொடுத்துத் தானே சலித்திருந்தார்
கோப வெகு கோபமதாய்க் கொற்றவர்கள் வீரியரும்

---

மஞ்சம் - படுக்கை; பரிசனங்கள் - மக்கள்;
அமுது - உணவு; கண் வளர்த்தி - உறங்கச்செய்து;
சாலகம் - ஜன்னல்; காற்றுவரும் வழி;
சீதள நீர் - குளிர்ந்த நீர்;

சோபமிகு வந்தெமக்குச் சொற்செவியி லேறு
தில்லை
கேட்குதில்லை மாதே நீகிட்டவந்து சொல்லு
மென்றே
வாட்கண் ணளைப் பொழுது வாய் புதைத்து
கைகட்டி

1470 அம்பலத்தின் முன்னே அணியிழையுஞ்
சென்றுநின்று
செம்பொன் மணிமாலைவகை சேலைவகை யொதுக்கி
இந்திரனார் தாதி இருகரங்கள் தான் கூப்பி
வந்து பணிந்து மலர் தூவித் தெண்டனிட்டு
எழுந்திருந்து நின்றங் கிணைக் கடகக் கைதொழுது

1475 திருந்திழையார்ப் பொழுது செம்பொன் மணி
வாய் திறந்து
அய்யா நீர் சொல்லுமொழி வம்பலத்துக் கேருதே
பொய் யேதும் நீளத் தகுமென்றே புண்ணியரே
வெள்ளை தனிற் கள்ள மூண்டோ வீண் பேச்சி
லாவ துண்டோ
தெள்ளமுதும் பாகு நறுந்தேனும் கலந்த துண்டோ

1480 அருக்கன் கறுப்ப துண்டோ அம்புலிதான் கண்ட
துண்டோ
நெருப்புக் குளிர்ந்த துண்டோ நீர்மோர் சுடுவ
துண்டோ
கறந்திருந்த பாலில் கருப்புண்டோ காவலரே

---

**பங்கயம் - தாமரை; கச்சு - இறுக்கமாக அணியும் இரவிக்கை**
**வேசி - தாசி (இருமனப் பெண்டிர்) வாதராசன் - வாயு பகவான்;**
**கன்ம வினை - கரும வினைகள்; ஏச - வசை மொழி கூற;**
**இருசிகள் - மலடுகள்; கலி - கலிபுருடன், சனிபகவான்;**
**தோகை - ஆகுபெயராய் மயில் போன்ற பெண்ணைக்குறித்தது.**

மறந்திறந்து போனல் வருவீரே மன்னவரே
பொற்பூவதனைப் பொரி வண்டு காத்திடுமோ

1485 கற்றூண் தனைக் கறையான் அரித்திடுமோ
புலியும் பசித்த தென்றல் புல் தழைகள்
தின்றிடுமோ
தின்ன விடக்குகளைத் தின்னதோ தின்பீர்களோ
உணணுதார் பக்கங்களில் உண்ணதோ
ருண்பர்களோ
தீண்டாத ஈனர்களைத் தேவர்களுந் தீண்டுவரோ

1490 வேண்டாத காரியங்கள் மேலோரும் வேண்டுவரோ
பேயிருந்த வம்பலம் போல் பெண்பாவம்
பேசுவரோ
ஆயிரம் பொய் சொன்னலும் அங்கொருமெய்
யுண்டாமோ
தேர்வேந்தர் தேவர்களே தேவாதி தேவாதிகளே
ஆராய்ந்து மெள்ள அளவறுத்துக் கொள்ளுமையா

1495 பார்பதியாரும் பரமே சுரனு மல்லார்
ஆரும் வடுப்பட்டு இருப்பார் காண் ஆணழகா
மாவில் வடுவுமுண்டு மரமதிற் புல்லூரி யுண்டு
பூவில் மதுவுமுண்டு பூங்காவில் வண்டு முண்டு
நெல்லிற் பழுதுமுண்டு நீருக்கழுக்கு முண்டு

1500 குன்றில் சுனையு முண்டு கோட்டைக் குளமுண்டு
பொன்னுக் குறையுமுண்டு பூவுக்கிதழுமுண்டு
மண்ணுக்கு உவருமுண்டு வாளுக் குறையு முண்டு

---

பச்சுடம்பு - குழந்தையீன்ற தாயுடம்பு; உத்தமனர் - சித்திரபுத்திரன் நயினர் - தலைவராகிய சித்திரபுத்திர நாயனர்; நயனர் என்று கூறுதல் மரபு
சடலம் - உடலம்; மாதவம் - பெரிய தவம் (உரிச் சொல் தொடர்)

மின்னுக் குழையுமுண்டு மேல்மழைக்கு வெள்ள
முண்டு
ஓடுகிற ஆற்றுக் குடைப்பும் மடுக் கோணமுண்டு

1505 பரந் தெழுந்த காவேரி பாசிமாறச் சேறடையும்
சிவந் தெழுந்த செங்கழுனீர் செம்மை நிறங்
குன்றிவிடும்
கதித் தெழுந்த கார்முகிலிற்கங்குல் திங்கள்தான்
மறையும்
உதித் தெழுந்த சூரியனுக்குள்ளே பழுதாகும்
சாதி பகவன் றனக்குந் தந்தம் பழுது முண்டு

1510 சந்திர பகவான் றனக்குச் சரல மறுவு முண்டு
ஆதி விதிமாவிற்கு அற்றதொரு சென்னியுண்டு
ஆலால முண்டார்க்கு கண்டத்தே நஞ்சு முண்டு
பாரளந்த மாயவற்குப் பார்க்கப் பழுது முண்டு
பங்கய மாமதினுக்குப் பார்க்கப் பழுது முண்டு

1515 குன்றி மணி யாற்குப் பின்னே கறுப்பு முண்டு
கண்ணுயிரவர்க்குக் காணப் பழுது முண்டு
ஈசும் பழுதும் இழுக்கும் எவர்க்குண்டாகும்
மாசணுகா வாணுதலாள் மாதுநல்லா ளிந்திராணி
முன்ன ளியன்ற வரம் மும்மூர்த்தியார்
பொருட்டால்

1520 எந்நாளும் எங்களம்மைக் கீராறெனும் வயது
பன்னிரண்டாம் பருவம் பக்குவமும் பாபமும்
பொன்னுர மார்பும் புழுகொழுகுஞ் சீர்வடிவும்

---

பருவரிசி - பெரிய காப்பரிசி; வலம் - வெற்றி;
மடல் - மடலேறும் பழக்கம் (காதல் ஈடேறுவிடில்)
கன்னல் - கரும்பு; பரமாசனம் - உயர்ந்த ஆசனம்.
எம்பிரான் - எமது தலைவனுகிய இறைவன்

மெய்யே சிவப்பும் விழியளகமே கருப்பும்
மையே மறுவல்லா மற்றதுவும் வல்லாதான்

1525 அலர் தாமரைக் கண்ணிலிட்ட அஞ்சனக்
காப்பல்லாது
மறுவேதுமில்லா வரமிகுத்த பத்தினி காண்
பத்தினியை யுத்தமியைப் பண்பழியப் பேசுவரோ
சித்தங் கலங்காதோ சிந்தை வேருகாதோ
விண்ணேர் சபைநடுவே வெள்ளானை மீதிருந்து

1530 பெண்ணேரஞ் சொல்வர்களோ பெண்பாவங்
கொள்வார்களோ
மண்ணிலே போந்திருந்து வம்புபகர்வார்களோ
கண்ணிலே காணுக் கடும்பிழைகள்
சொல்வார்களோ
பெண்ணைப் புறஞ் சொல்லிப் பெண்பழிகள்
போற்றுதலில்
பின்னைப் பலித்துவிடும் பெண் பாவம் நீங்காது

1535 மாதருடைப் பாவம் வலுபாவமாகி விடும்
பேதையர்கள் பாவம் பெரும்பாவ மாகி விடும்
கன்னியர்கள் பாவம் கரைசேர வொட்டாது
மன்னவரே கேளுமென்று வாய்புதைத்தங்
கேதுரைப்பாள்
தார்வேந்தே உம்முடைய தாயார் பேரிட்டு நின்ற

1540 காராம் பசுவது தான் கட்டவிழ்த்துக் கொண்டு
சென்று

---

அடற்படை - ஆற்றல் மிக்க படை; அதிர - எதிரொலிக்க;
தில்லை மன்று - சிதம்பரத்திலுள்ள பொன்னம்பலம்;
மத்த கசம் - மதமுடைய யானை (மும்மத யானை)
கட்டியக்காரர் - மன்னன் புகழ பாடுவோர்

ஈனுக் கிடாரி இன மேய்ஞ்சல் மேய்ந்திடத்தே
தண்ணீ ருழத்தித் தடாகத்தி னுள்ளிறங்கி
தண்ணீர் குடிக்கையிலே தாமரைப் பூவிழுங்கி
தாமரைப் பூவுந் தரித்தது கர்ப்பமதாய்

1545 கெர்ப்பமுடனே கிலேசித்து உள் மெலிந்து
பட்டண மெங்கும் பலவடிக் கொண்டே திரிந்து
மெத்த மயங்கி விடுதியோ போந்தபின்பு
பத்திப் பரிகாரம் பார்த்துப் பலகாலும்
பசுவின் துயர மெல்லாம் பைங்கொடியார்
கண்டருளி

1550 மனது தரியாமல் மண்மேல் விழுந்தழுதாள்
ஆனந்த மாரி யலறுங் குரல்கேட்டு
கானகத்தில் வாழும் குறத்தியம்மை தானும் வந்து
கை தூக்கி விட்டுக் கடுகிக் குறி பார்த்து
மெய் வார்த்தையாக விளம்பினுள் கட்டுவிச்சி

1555 கட்டு விச்சின் சொற்படியே காராவின் தன்
வயிற்றில்
மட்டு வைத்த பூவி லொரு மைந்தர் வந்து
தோன்றினர் காண்
பங்கய பூமீ துறைந்து பாற்பசுவில் வந்து தித்தார்
கங்கைக் கரை யுகந்த காராவின் புத்திரனுர்
ஆவின் வயிற்றி லவதரித்த அத்தியர் கோன்

1560 பூவில் தரித்தார் நீங்கள் செய்த புண்ணியத்தால்
மலரிலவதரித்தார் நீங்கள் செய்த மாய்வத்தால்
சித்திரைக்குச் சித்திரையில் சேர்ந்த பவுரணையில்

---

புலம்பிவர - ஒலிக்க; இந்திரவானம் - இந்திரவில்;
காளாஞ்சி - வரிசைப் பொருள்; அருகு - பக்கம்;

பொத்தகமும் பூணூலும் பொன்னி னெழுத்
தாணியுமாய்
சித்திர புத்திரனார் சென்மித்தார் தேவேந்தே

1565 புத்திரனார் வந்து பிறந்தார் காண் புண்ணியரே
பிள்ளை பிறந்தார் காண் பேரரசே நீர் வாரீர்
மைந்தர் பிறந்தார் காண் மன்னவரே நீர் வாரீர்
எந்தனுடை நாயகமே என்றங்குறப் பணிந்தார்
அந்த மொழி கேட் டுளமகிழ்ந்து இந்திரனார்

1570 இன்பங்குளிர்ந்து இரு தோளும் பூரித்து
அரைத்திருந்த சந்தனத்தில் உற்றிருந்த நீரது
போல்
உரைத் திருந்த சந்தனத்தில் லூற்ற பனி
நீரதுபோல்
பூரித்து மேனி புளகித் துளங் களித்து
ஆலித் தெழுந் திருந்து அப்போ தேவேந்திரனார்

1575 இட்ட விலங்கும் இணைக் காவல் கைச் சிறையும்
விட்டுத் துரத்தி யந்த வேந்தர் பெருமானும்
சிறைச்சாலைக் கூடம் அறச்சாலை கட்டி வைத்தார்
சோபனங்கூறி வந்த தூய்ய திருத் தாதியுடன்
சாதனம் வாங்கிக் கிழித்தெறிந்தார் தார்வேந்தர்

1580 நாட்டவரும் தேவர்களும் ராசாதி ராசர்களும்
கேட்ட சபையோர்கள் கிலேசன் றெழுந்திருந்தார்
முடியோடு முடியார விழுப்ப தங்கயக் காற் கனகம்
பொடியா யுதிர்ந்த தெல்லாம் பூவையர்க்குத்
தான் கொடுத்தார்
விளையாட நேரமில்லை வேந்தரே யென்று சொல்லி

1585 முழுகி விளையாடினார் மூவுலகிலுள்ளோரும்

---

**கார்மேகம் - கரிய மேகம்; முழவு - மத்தளம்;**
**சுருதி - வேதம்; பந்தி பந்தியாக - வரிசை வரிசையாக;**

குளித்து விளையாடினார் கொற்றவர்களெல்லோரும்
உடுத்திக் குளித்தருளும் உள்ளீடு சேலைகளும்
சாகே கழித்த நமலாயப் பட்டுகளும்
போர்த்திக் குளித்த புலிமுகச் சேலைகளும்

1590 மழைக் கால் பொதிந்தாற்போல் மன்னற்கே
கொடுத்தார்
திருவாபரண வகை செம்பொன் மணிமாலைவகை
கனகாபிஷேக வகை கண்களிக்கச் செய்யலுற்றார்
சீராடி வானவர் கோன் செம்பொன் மணி
முத்தளித்தார்
மாராய முள்ள தெல்லாம் வாங்கினாள் மாது
நல்லாள்

1595 மலைமலையாய்க் குவித்து வந்த வரிசை யெல்லாம்
பொதி பொதியாய்ப் பிடித்து பூவையரும்
போனதற்பின்
வேதியருஞ் சாத்திரரு மிக்க புரோகிதரும்
ஓதிய சாரியருந் ருத்திரரும் மாலயனும்
சந்திரருஞ் சூரியருந் தானவரும் வானவரும்

1600 இந்திரனு ரம்பலத்தே எல்லோரும் வந்திருந்தார்
இட்டமுடனே இருந்த பெருஞ் சபையில்
அட்டந் தனிலிருக்கும் ஆரணரைத் தான்தேடி
வருக வருக என்ன வாழ்வே வருக வென்று
அருகே இனிதிருந்த ஆரணரைத் தானழைத்து

1605 பொய்யார் மொழியார் புரோகிதரைத் தான்
பார்த்து
தெய்வீக நாள் முகூர்த்தம் செப்பு மெனத்
தேவேந்தர்

---

**சுகந்தமலர் - மணமிக்கமலர்; வரிசை - பரிசிற் பொருள்;**
**அஞ்சுகம் - கிளி; கோகுலம் - குயில்; சோபனம் - மங்கலம்**

நாளும் முழுத்தமும் நன்றென்று பாரு மென்றார்
போது முகூர்த்தமும் புண்ணியரே கூறுமென்றார்
நாளறுப்புக் கூறுதற்கு நால்வேத சாத்திரத் தோர்

1610 ஏடெடுத்துப் பார்த்தார்கள் ஏடலர் பூந் தாராரும்
நாளும் முகூர்த்தமும் நன்றென்றார் வேதியரும்
பொழுதும் முகூர்த்தமும் பொருந்து மென்றார்
புண்ணியர்கள்
இப்பொழுது சென்றெடுக்க இளமுகூர்த்தம்
நன்றெனவே
செப்பினார் வேதியர்கள் தேவேந்தர் முன்பாக

1615 முகூர்த்த மிடும் பார்ப்பாற்கு முத்து மாணிக்கமுடன்
கதித்த பலபூஷணமும் கல்பதித்த மோதிரமும்
எள்ளு யிரும்பு மீந்து கூலி நாடுகளும்
பொன்னும் புதுத்துகிலும் புண்ணியற்குத்
தாலீந்தார்
கன்னியர் தானம் கனகதானம் கொடுத்தார்

1620 கோதானம் மாதானம் குஞ்சர தானந் தந்தோம்
பூ தான மத்தனையும் புண்ணியற்குத் தானமிட்டு
செருப்புங் குடையும்சில கெருங் கம்பளியும்
இருப்பு வகையு மிரவலற்குத் தானமிட்டார்
இறையிலியும் பால்பசுவு மிரவலற்குத்
தானமிட்டார்

1625 விளைவயலும் பால் பசுவும் வேதியர்க்குத்
தானமிட்டார்
வேதியர் களெல்லோரும் விடைபெற்று
மீண்டதற்பின்

---

வரிசை - பரிசுப்பொருள்; மகாதேவர் - சிவபெருமான்;
இயம் - வாத்தியம்; வெண் சாமரம் - கவரி

நீதி யுள்ள தேவேந்தர் நேசமது சோபமதாய்
பாலர் தமைச் சென்றெடுக்கப் பாசமிக வுண்டாகி
மைந்தர்தமைக் காண மகாபிரிய முண்டாகி

1630 பிள்ளைமுகங் காணப் பிரியமிக வுண்டாகி
புத்திரரைக் காண வென்று போவார் புகழ்
வேந்தர்
உற்ற பரி வெள்ளானை யோச்சுந் தேர்
கொண்டுவந்து
வாகன மீதேறு மென்றூர் வாழ்வேந்த ரப்பொழுது
தேரின் மேலேறிச் சென்றால் தேரோடச் செல்லு
மென்று

1635 ஆனை யின்மே லேற்றிச் சென்றால் ஆனை வரச்
செல்லு மென்று
தேசியின் மேலேற்றிச் சென்றால் சிங்கிகளே
கொள்ளுமென்று
தண்டிகை மேலேற்றிச் சென்றால் தள்ளி நடவார்க
ளென்று
அண்டர் முனிவர்களனை வோருங் கொண்டாட
தேவ தேவாதி களுஞ்சேசேயென வணங்கி

1640 கால்நடையாக நடந்தாரே காவலனர்
அரகரா வென்று அறைந்து நடந்துவர
சிவா சிவா வென்று திரு நடங்கள் செய்துவர
மூவர் முதலியரும் முப்பத்து முக்கோடி
தேவ ரிஷிகளும் செரந்தி மிதியென

1645 சந்திரருஞ் சூரியரும் தானவரும் வானவரும்
மந்திர வாக்கியங்கள் மங்களங்கள் கூறிவர

---

**குண்டலம் - காதணி; பாலிகை - முளைத்த பயிர்கள்;**
**அப்பு - தண்ணீர்; அரைநாண் - இடுப்பிலணியும் கயிறு;**

கருடனரங் கேந்திரருங் கின்னர கிம்பிராதிகளும்
வருணரும் வாசுகியும் வாயு பகவானும் வர
அட்டதிக்குப் பாலகரும் அக்கினி பகவானும் வர

1650 சத்த மகா விருஷியருஞ் சந்தானம் கூறிவர
வேத முழங்கி வர விண்ணோர்கள் பாடி வர
சாதி மறை வேதியர்கள் சாத்திரங்கள் ஓதிவர
ஓதிய சங்கீதம் ஒலியு மொலி முழங்கும்
நீதி நெறி நூல் முறையும் நித்தமிடும் பேரொலியும்

1655 இந்திரனு ரோலக்கம் எங்கும் திசை விளங்க
மந்திரியர் ராசாக்கள் மாசேனை சூழவர
முடிபொருத்த ராசாக்கள் மூன்றுலட்சங் கோடிவர
படி பொருத்த மன்னவர்கள் பத்துலட்சங் கோடிவர
பத்து லட்சம் கோடி படை மன்னர் சூழவர

1660 எட்டு லட்சங் கோடி யிராசாக்கள் சூழவர
முன்னூறு கோடி முதலியர்கள் சூழ்ந்துவர
நானூறு கோடி நகரத்தார் சூழவர
அஞ்ஞூறு கோடி யரசமக்கள் சூழவர
எண்ணூறு கோடி இராசாக்கள் சூழவர

1665 கரியும் பரிமாவுங் காலாளுஞ் சூழவர
தெருவுந் தெருவீதி எங்குஞ் சிறந் திலங்க
பரிசை நிறைத்து வரப் பல்லவங்கள் சொல்லிவர
பெரிய மணிக்குடைகள் பின்னு முன்னுந்
தானிறைக்க
முத்துக் குடைபிடிக்க முன்னே கொடிபறக்க

---

கந்தப்பொடி - மணப் பொடி; கத்தூரி - கஸ்தூரி என்ற மணப் பொருள்;
புழுகு - வாசனைப் பொருள்; காசினி - உலகம்;
தண்டை - காப்பு;

1670 பட்டுக் குடைபிடிக்க பார் வேந்தர் சூழ்ந்துவர
பொற்சவடி முத்துவடம் பூஷணங்கள் தோளில்விழ
எச்சரிக்கை எச்சரிக்கை என்றே இருபுறமும்
கட்டிய காரர் கலந்து பணி மாறி வர
ஒட்டிய மேஷம் உலகோடுல கதிர

1675 மேஷங் கெவிகள் வெடிக்கப் புதைந்துவர
தாளங்கள் கொட்டத் தவில்முரசு தான் முழங்க
கைத்தாள மொத்திவரக் கைமணிகள் கொட்டிவர
மத்தளமுந்தவண்டை மல்லாரியும் போட
தம்பட்டம் போடத் தவில் சங்கு ஊதிவர

1680 கும்பட்டம் கொட்டிவரக் கொம்பு குறித்துவர
பொற்காளந் தாரை சின்னம் பூரிகையும்
பீடிகையும்
எக்காளம் நாகசரம் யாழ் வீணை பெய் முருடும்
ஒத்துந் துடியும் உடுக்குந் தமரகமும்
சத்தமிகு ராகமுடன் சங்கீதத் தின்னிசையும்

1685 அய்ய குழலிசையு மானந்தத் தாளிசையும்
சேர முழங்கிவரத் திண்டியங்கள் கொட்டிவர
வண்டினங்கள் பாட மயிலினங்கள் கூத்தாட
வண்மையினமும் மாடப் புரு வினமும்
அன்னவினம் புள்ளினமு மஞ்சுகமுங் கொஞ்சிவர

1890 கொஞ்சுங் குயிலினமுங் கோகிலமுந் தாராவும்
பஞ்ச வர்ணக் கிளிகள் பைந்தமிழ்கள் பாடிவர
வீசு கவரியிட வெண்சாமரை யிரட்ட
ஆசு கவிபாட அம்மானை பந்தாட
பந்தாடப் பந்தாடிவரப் பாவை பொம்மை
யாட்டிவர

---

**பதம் - திருவடி; பள்ளி கொள்ளும் - உறங்குக;**
**ஒள்ளி - ஒளி விடக் கூடிய; ராயர் - தலைவர்**

1695 கொர்ந்தா குழலார்கள் கேல்ா வசந்தம் நாடிவர
கோல மிகவே சமைந்து கொம்பனையார் ஆடிவர
பாகவதமே சமைந்து பார்ப்பார்கள் தான் கூர
ஆடுவா ராட அதி பிரியமாய் மகிழ்ந்து
பாடுவார் பாடப் பரிகலங்கள் ஓலமென்ன

1700 ஓல மென்ற சத்தம் ஒலிபோல் முழவதிர
நாலு திசையும் நறுநெய் விளக்கேற்ற
எட்டுத் திசையும் ஏரிக்குஞ் சுடரொளி போல்
குத்து விளக்குக் கொழுந்து நின்று சோதிவிட
காள விளக் கொளியுங் கைப்பந்தப் பேரொளியும்

1705 ஏணி விளக் கொளி எங்கும் வெளிச் செறிக்க
கோலமணிப் பந்தமுடன் குலப்பந்தம் தேர்ப்பந்தம்
ஆனநல்ல பந்த மணிமணியாய் நின்றிலங்க
இலங்கு திருவிளக்கோ டென்றிலாப் பந்த
மெல்லாம்
துலங்க நிரைத்தார்கள் சூரியனார் பேரொளி போல்

1710 போர் வாணம் தேர்வாணம் பூவாணம் மல்வாணம்
பேர் வாணம் இத்தனையும் பேரொளியாய்
நின்றிலங்க
வீதிகள் தோறும் வெடிவாணம் நின்றதிர
கோடிகள் தோறும் குமார் வாணம் பயில
அம்மானா ராடிவர வசந்தன் விளையாடி வர

1715 மாசேனை சூழ்ந்து வர மற்று முள்ளோர்
சூழ்ந்து வர
ஆலாத்திப் பெண்கள் அலங்காரத் தோ டெடுத்து
மாணிக்கப் பொற்கவரி மங்கை நல்லாள் வீசிவர
முத்து மணிக்கவரி முன்னே பணிமாற

---

**தன்மம் - தருமம்; உறமுறை - உறவின் முறையார்;**
**அநவரத நாழிகையும் - எந்த நேரமும்;**
**பள்ளி கொள்ளும் - உறக்கம் கொள்ளும்;**

சுற்றும் பிரம்படிக்காரர் துரந்து துரந்தடிக்க

1720 சல்லிகை பேரிகை தப்பக் குழலதிர
செல்லு செல்லென்று திருப்பிரம்பி நாலொதுக்க
வீதியும் வீதித் தெருவு மது கடந்து
வெள்ளியும் பொன்னுங் கொழிக்குந் தெருக்கடந்து
தே ரோடும் வீதித் தெருவு மதுகடந்து

1725 செம்பவளவீதித் தெருவு மதுகடந்து
அவ்வீதி வீதித் தெருவு மதுகடந்து
ஆனந்த வீதித் தெருவு மதுகடந்து
சித்திர வீதித் தெருவு மதுகடந்து
தேவேந்திரனுர் திருப்பாற் கடல்புகுந்தார்

1730 ஆனந்த மாராஅதி பிரியமாய் முழுகி
மாலே முடியார் மயிர்முடிந்து பின் போட்டு
தீர்த்தம் பனித்த திருமஞ்சனம் முகந்து
அர்ச்சனேகள் செய்ய அநுட்டானந்தான் முகிழ்த்து
சிந்தித்து நின்று சிவனே சிவாய மென்ன

1735 மந்தித்து வேண்டி மலரடியைக் கைதொழுது
ஆனேமுகனே அறுமுகனே தஞ்ச மென்று
வேழமுகத்து விநாயகனேப் பூசை பண்ணி
தேனு மிளநீருந் தின்கரும்புஞ் சக்கரையும்
பாலும் பழகும் பணியாரமும் பருப்பும்

1740 பருப்பும் பொரியவலும் பச்சரிசி தேங்காயும்
சிறக்கச் சிறப்பளித்துத் தேவேந்திரர் தானும்
கொட்டி முழக்கக் குளிர் சங்கு நின்றதிர
எத்திசையுஞ் சின்ன மிகலிப் பணி மாற
வீணே முழங்க விருதுபல ஊதி வர

---

சப்த லோகம் - ஏழு உலகங்கள்; புண்டரிகம் - தாமரை
வான்நிதியம் - பெரியசெல்வம்; வாணுதல் - ஒளி பொருந்திய நெற்றியுடைய பெண்

1745 தாரையும் பூரிகையுஞ் சங்குங் குழுமுமென்ன
மெள்ள நடந்து மிகுத்த பெருஞ்சேனையுடன்
செல்வம் பொலியத் திருமாளிகை புகுந்தார்
அருக்கனுஞ் சோமனும் அண்டர் முனிவோ
ரனைத்தும்
நெருக்கிப் புகுந்தார் நிலவொளி சேர் மண்டபத்தில்

1750 தாம முடியார் தமது திருக்கோவில் புக்கு
செப்புப் படியைச் சிறப்புடனே தானேறி
வெள்ளிப் படியை விளங்க மிதித் தேறி
பொன்னின் படியைப் பொருந்த மிதித் தேறி
முத்தின் படியை முழங்க மிதித்தேறி

1755 மாணிக்கப் பொற்படியை மாருடி யுள்புகுந்தார்
இந்திரனுர் தன் வரவை இந்திராணி கண்டருளி
வந்து தொழுதாள் மணிவயிர மாளிகையில்
தேவேந்திர ரிருக்கச் செம்பொன் மணியாசனமும்
வாழ்வேந்தர் தங்களுக்கு வட்டவணையும்
போட்டார்

1760 இட்டமணி யாசனத்தே இந்திரனுர் வீற்றிருந்தார்
தேவியருஞ் செம்பொன் திருமாளிகை புகுந்தார்
தாதியருங் கண்டு தகுதியுடன் கை தொழுதார்
பத்தியுடனே பலகாலுங் கை தொழுது
அத்தியுட கோன் கோவிலுள்ளே எய்தி
அணியிழையார்

1765 பட்டாடைக் குள்ளிருக்கும் பவளக் குழமணரை
வித்தாரமாக ஏத்தியே மெல்லின் நல்லார்

---

**செப்பரிய - சொல்லுதற்கரிய; நமன் - இயமன்; விர்மா - பிரமன்**
**அட்சரம் - எழுத்து; அரி ஓம் - பள்ளியில் பயிலத்துவங்கும் போது கூறும் இறைவழிபாடு;**

பொத்தகமும் பொற்கலமும் பொன்னி
னெழுத்தாணியுடன்
பத்தியுடன் முன்வைத்தார் பத்துலட்சம்
தாதியர்கள்
சித்திர புத்திரரைத் தேர்வேந்தர் சென்றெடுக்க
1770 முத்தியிட்டு மோந்துகொண்டு முன்வாயி லூற
லுண்டு
வானகமும் போலேந்தி மடியிலே வைத்திருந்து
மாலைமுடியார் வலக் குறங்கின் வைத்திருந்து
கோலப்பட்டாடைக் குறங்கின்மேல் கொண்டிருந்து
குங்குமப் பட்டாற் குறங்கின்மேல் கொண்டிருந்து
1775 மைந்தர் பெருமானை வாயோட முத்த மிட்டு
செம்பொன் மகுடாபிஷேக முடிதான் சூட்டி
பொன்னின் மணி மாலை வகை பூம்பதக்க மேல்
வளைகள்
வண்மையுள்ள பூஷணங்கள் மைந்தர் தமக்கே
யளித்து
மைந்தர் தமைஏந்தி மடியிலே கொண்டிருந்து
1780 இந்திரனாற் கப்போது இருதோளும் பூரிதமாய்
உச்சியும் உள்ளடியு முத்து முகந்து கொண்டு
மெச்சியே மெள்ள நகைசெய்து மிக மகிழ்ந்து
செம்பவள வாயிதழிற் றேனூறல் தானருந்தி
தன் பிள்ளை யென்று தடங்கையுற வணைத்து
1785 தன் மைந்த ரென்று தடவிப் பலகாலும்
என் மைந் ரென்று எடுத்துப் பலகாலும்

---

**இன்னா - தீமை; கோளர் - புறங்கூறுவோர்;**
**ஆதியரனார் - முதல்வனும், முன்னோனு மாகிய சிவபிரான்;**
**பாரிலுள்ளோர் - உலகோரனைவரும்;**

அன்பர் கிருபையினு லாதரித்த மாதவத்தோர்
தேன் பால் கூடல் கேட்க தேவேந்திரர்
விளம்புவார்
ஈனுதா வீன்ற இளவாழைக் கன்றிதுவோ

1790 மலடி யாரீன்ற தொரு மன்ன னிளங் கமுகோ
மானுக மீன்ற மணியோ மரகதமோ
குலமொழியார் ஈன்ற வந்த குஞ்சரமோ
கோளரியோ
சிங்கத்தின் கன்ருே திருமேனியின் பிரிவோ
தங்கத்தி லிட்டிழைத்த தன பவளக் கொம்பிதுவோ

1795 தேடிய செம்பொன்ஞே திருவாழி மோதிரமோ
ஆடு தண்டின் மீது அசைந்தாடும் பெருமாளோ
அய்யனே மெய்யனே ஆரூரமர்ந்தானே
அற்ருர் அலந்தார் அடைந்தார்கள் தாபரமோ
பெற்ருேர் தவப்பேருே பிள்ளை முடி தீர்ந்தானே

1800 ஓசைக் கடலீலுதிக்கும் சுடரொளியோ
ஆளப் பிறந்த அரசோ வரும் பொருளோ
என்னைப் பயின்ருரோ என்குடிக்கு நாயகமோ
முன்னைப் பழம் பொருளோ முத்தி தரும்
வித்தகனே
வைகுந்த வேதம் மகத்தான ஆகமங்கள்

1805 சைவ புராணம் தழைத் தோங்க வந்தானே
இந்திர லோகம் இமையோர் பருப்பதங்கள்
சந்திர லோக மெல்லாம் தான் விளங்க வந்தானே
மேன்மையுள்ள பூலோகம் விண்ணுலக மித்தனையும்

---

**தலை நாள் - முன் நாள்; ஏகாந்தம் - தனிமையாக;**
**பூலோகம் - மண்ணுலகம்; ஆலித்து - மனமகிழ்ந்து;**

நம்மை தின்மை பார்த்து நடுவெழுத வந்தானே
1810 பாரேழுந் தெய்வப் பதியேழுந் தான் விளங்க
ஈரேழுலகுகளும் ஈடேற வந்தானே
தேசக் கணக்கும் சிவனார் திருக் கணக்கும்
ஆசைக் கணக்கும் அளவறுக்க வந்தாராம்
பண்பும் பலனும் படுகொலையும் பாதகமும்

1815 அன்பும் அறமும் அறிந்து எழுத வந்தானே
ஆரூரர் பூசை ஆதரிக்க வந்தானே
பூராய சொக்க லிங்கம் பூசைபண்ண வந்தானே
முழு மலடி வாசலிலே மூப்பிருக்க வந்தானே
தலை மலடி வாசலிலே தள்ளிநடை இட்டானே

1820 மைந்த ரெனுஞ் சோபமெல்லாம் மாற்றிவிட
வந்தானே
எந்த னுட சென்ம மெல்லாம் ஈடேற்ற வந்தானே
அரசுக் கடிக் கடியாய் ஆள வென்று வந்தானே
வரிசைத் திருமகனார் வந்தா ரென மகிழ்ந்து
பைந்தொடியீர் நம்மிடத்துப் பாலகனா ரன்புடனே

1825 வந்த வாறெல்லாம் வகை வகையாக் கூறு
மென்றார்
அங்கொரு தாதி அறிவா ளருகு வந்து
செங்கையினால் வாய்புதைத்துத் தேன்மொழியுங்
கூறுவாள்
தங்கத் திருமேனி தாமரைப்பூ மீதுறைந்து
கங்கைக் கரை சேர்ந்து காராம்பசு மேய்ந்து

1830 பாரேழும் போற்றப் பசுக் காம தேனிடத்தில்

---

**ஈனுதார் - மலடுகள்; கிங்கிலியர் - கொடியோர்;**
**தென்னவர் - தெற்கு நாட்டவர்; பாரக் கணக்கு - பெரிய கணக்கு;**
**சதுர் வேதம் - நான்கு வேதம்; வித்தியா விநோதர் - கற்ற அறிஞர்கள்;**

முத்தியும் மோட்ச கதியு முதலாய் விளங்க
சித்திர புத்திரனுர் சென்மித்தா ரிந்திரரே
நாட்டில் நமன்கணக்கும் நாராயணன் கணக்கும்
ஏட்டில் அமைத்திங் கெடுத் தெழுத வந்தார் காண்

1835 ஊர்க் கணக்கும் பேர்க் கணக்கும் உற்றபல
கணக்கும்
தெய்வக் கணக்கும் தெரிந்தெழுத வந்தார் காண்
ஆர்க்கு மொக்க நீதி அறிந்தெழுத வந்தார்காண்
பாசக் கணக்கும் பலர் கணக்கும் பழங் கணக்கும்
ஆசைக் கணக்கு மறிந்தெழுத வந்தார் காண்

1840 நல்லார் பொல்லார் கணக்கும் நானு
வுயிர்க்கணக்கும்
எல்லாக் கணக்கு மெடுத் தெழுத வந்தார் காண்
எறும்பு கடையானை முதலெல்லா யுயிர்களுக்கும்
உறும் பயனுய் நின்றங்குள வெழுத வந்தார் காண்
ஈரே ழுலகும் எழுவா னெழு புவியும்

1845 பாரேழும் போற்றும் பதிவிளங்க வந்தார் காண்
விண்ணுலகும் மண்ணுலகும் வேந்தர் திருநகரும்
பொன்னுலகுமே விளங்கப் புண்ணியனுர்
வந்தார் காண்
உத்தமனுர் ஈரேழ் உலகும் விளங்க வந்தார்
கொற்றவரே உம்முடைய கோவில் விளங்க
வந்தார்

1850 தன்மக் கணக் கெழுதத் தாடாளர் வந்துதித்தார்
சென்மக் கணக் கெழுத சீராளர் வந்துதித்தார்

---

**காப்பிலி - கட்டுப்பாடற்ற மக்கள்; ஆரணியர் - காட்டு மக்கள்; கோலம் - அழகு; நஞ்சு - விடம்;**

சீராளர் வந்த வன்றே தேசம் வெளிச் செறிந்து
காவலனார் வந்த வன்றே கண்கள் வெளிச் செறித்து
கண்கள் வெளிச்செறிக்கக் கண்டார் மனங்களிக்க

1855 பொங்கு கடலும் புவியும் வளர்த்தி பெற்று
எங்கும் வெளிச் செறித் தென்றூர்கள் ஏந்திழையார்
மங்கை நல்லார் சொற் கேட்டு மன்னர்
பெருமான் மகிழ்ந்து
இந்தி ரரு மங்கே இனிதாக வீற்றிருந்து
பைந் தொடி யாற்குப் பரிசு கொடுக்க லுற்றூர்

1860 பரிசு கொடுத்து வரப் பார் வேந்தர் வீற்றிருந்து
வரிசை யளித்தார் வகை வகையே மன்னவனார்
முலே கொடுக்குந் தாதியர்க்கு மூன்று லட்சம்
பால் பசுவும்
அரவணைக்குந் தாதியர்க்குத் ஆறுலட்சம்
பால் பசுவும்
பாலூட்டும் தாதியர்க்குத் பத்துலட்சம் பால் பசுவும்

1865 தாலாட்டும் தாதியர்க்குத் தங்கமிட்ட பூஷணமும்
வளர்க்கிற தாதியர்க்கு வண்ணமுத்து மாலைகளும்
எடுக்கிற தாதியர்க்கு இன்பமுடன் பூஷணமும்
கல மெடுக்கும் தாதியர்க்குக்காணிகளும் பூமிகளும்
அழ கெடுக்குந் தாதியர்க்கு அத்திபுரமுங்
கொடுத்தார்

1870 பொன்னாலே தொட்டில்களும் பூங்கனகந் தூங்கு
மஞ்சம்
பண்ணிவந்த பேர்களுக்குப் பத்து லட்சம் பொன்
கொடுத்து

---

**சாக்காடு - இறப்பு; தும்பிகள் - யானைகள், வண்டுகள்;**
**சூலி - சூல முடையவள்; ஆங்காரம் - கோபம்;**
**பிணம் - மாமிசம், ஊன்; கூளி - பேய்த் தோழி;**

முத்தார மார தம்மை முக்காலும் மோந்து
கொண்டு
வித்தாரத் தொட்டிலின்மேல் மெத்தெனவே
கண்வளர்த்தி
வாச மலரணையில் மைந்தர் துயின்ற பின்பு

1875 போசன சாலையிலே போனார் புகழ் வேந்தர்
மணி முத்தின் சாலையிலே மங்கை நல்லாள்
போய்ப்புகுந்து
நிலமுத்தின் சாலகத்தே நீக்கி யங்கே தாள்திறந்து
பூத்த விடைநீர் பூவோ டலைந்திடு நீர்
வாய்த்த செழும் பன்னீர் மங்கை நல்லார்
தாமெடுத்து

1880 பொன்னின் கிடாரத்தே போத நீர் பூரித்தார்
வெள்ளிக் கிடாரத்தே வேண்டியநீர் பூரித்தார்
செம்பொன் கிடாரத்தே சீதளநீர் பூரித்தார்
தேவேந்தர் பாதம் விளக்கினார் தேன்மொழியாள்
இந்திரர் பொற்பாதம் விளக்கி இந்திராணி
கையினால்

1885 எழுந்தருளு மென்று இளைக் கடகக்கை
தொழுதாள்
திருந் திழையார் சொற் கேட்டு வேவேந் திரனாரும்
மகிழ்ந்து திருமாளிகையில் வந்து மனமகிழ்ந்து
பரிவுடனே வந்திருந்த பரிசனங்கள் கையமர்த்தி
அழகு பொலிய யிருந்தாரே அத்தியர் கோன்

1890 பொற்கலமும் வைத்துப் புதுப்பன்னீர் தான்
வார்த்து

---

**இமதன்மா - இயமதருமன்; பரிமா - விரைந்து செல்லும் குதிரை; பாதகர் - பாதகச் செயல் செய்வோர்; கண நாதர் - பூத கணத் தலைவர்;**

ஆரமுலையார் அமுதளித்து நிற்கையிலே
தேவி திருமுகத்தைத் தேவேந்தர் பார்த்துரைப்பார்
ஆவின் வயிற்றில் அலர் தாரன் வந்ததென்ன
கோவதையில் வந்து குமரன் பிறந்ததென்ன

1895 பசுவின் திரு வயிற்றில் பாலன் பிறந்ததென்ன
கலியன் பிறந்ததென்ன காராம் பசு தன்னிலே
காராவு மீன்ற தென்றால் கன்னியரே உம்முடைய
சீரார் திருமேனி சிந்தை வேருன தென்ன
ஆவினு லுன்மேனி அரசழிய வந்ததென்ன

1900 பசுவினு லுன் முலேகள் பால் பொழிய வந்ததென்ன
கொங்கை தங்க மான தென்ன கோலவிழி
சோர்வதென்ன
பங்கயப் பொன்மேனி எல்லாம் பச்சை நிறமான
தென்ன
கச்சணியுங் கொங்கை ரெண்டுங் கண்கறுக்க
வந்ததென்ன
அந்நகர்கள் அந்தணர்கள் ஆளும் அரச மக்கள்

1905 என்றறிய காவல் தப்பி இந்த வினை வந்ததென்ன
காவலிருக்கக் கரையழிய வந்ததென்ன
வேசி மனையானதென்ன மெல்லியலே உன் கோயில்
வாத ராசன் தூர்க்க வருணராசன் தெளிக்க
பாவை நல்லார் வந்து படியேறிச் சேவிக்க

1910 இந்திரனு ரென்று வுலகெல்லாம் நடுநடுங்க
காலங் கலி பிறழ்ந்து கன்மவினை சூழ்ந்த தென்ருல்
வாற விதி வந்து தென்ருல் மனதிலொன்று வாக்கி
லொன்ருய்

---

நகரிவலம் - நகரைச் சுற்றிப் பார்த்தல்; சண்டனை - இமயதமருனை;
பாசம் - பாசக் கயிறு; அடிசில் - உணவு; மதலே - குழந்தை;

உள்ளவிதி வந்து தென்றல் ஒளியாதே நீ எனக்கு
சொல்லு தனிக் கணக்குத் தோகையோ ராசியமாய்

1915 உற்ற குற மு றையா குள்ளறிந்தார் செய்தாரோ
பெற்றோர் பிறந்தார் பெருங்கேடு செய்தாரோ
ஆர் செய்தா ரந்தாங்ககி காரிழையே சொல்லு
மென்று
சொன்ன பொழுதே துக்கிட் டெழுந்திருந்து
காவலனைக் கைகூப்பிக் காதலியு மேதுரைப்பார்

1920 இந்த வகை கேட்டீர் இனி நான் உரைப்பதென்ன
எந்தனுட செம்மை ஏற்குமோ எங்கோவே
பெண் சாதி சொல்லும் பிடிக்குமோ பேரரசே
முன் செய்த தீவினையால் மூவுலகோர் தானேச
இன்பமுற வாழ்ந்திருந்தோம் ஈனு விருஷிகளாய்

1925 முன்செய்த பாவம் முடிந்து நன்றல்லா திருக்க
பின்னையும் பெண்பாவம் பேசுமோ இந்திரரே
வந்த வா றெல்லாம் வகை வகையே கூறுகிறேன்
கந்தனு ராணைக் கவடல்ல கேளு மென்றார்
ஈனு மலடும் இளமலடுந் தீர வென்று

1930 ஆவீன்ற கன்உறை யரிதாய் வளர்த்தோமே
கன்று மலடாச்சு தென்று காவலரே நீர் வருந்தி
சென்று பெரு மாதவங்கள் செய்தீரே தேவேந்தே
மாதவங்கள் செய்து வருந்துகிறீர் என்றருளி
பேதங் கள்மாய வந்துதித்தார் பெருமானும்

1935 மன்னவரே உம்முடைய மாதாவின் பேருஞ்சொல்லி
அன்னைதன் பேரு சொல்லி யழைத்துவளர்த்த பசு

---

திருமாளிகை - அத்தாணி மண்டபம்; தொங்கல் - மாலை;
தாமம் - பூமாலை; கலி - சனிபகவான்; தன்மம் - தருமம் என்பதன்
திரிபு; மறலி - இயமன்;

அத்தை நீரிப் போட்டழைத்த அரசுபசு
கட்டவிழ்த்துக் கொண்டு சென்று காடேறியே
மேய்ந்து
தண்ணீருழத்தித் தடாகத்தி னுள்ளிறங்கி

1940 தண்ணீர் குடிக்கு மப்போ தாமரைப்பூவிழுங்கி
தாமரைப் பூவில் தரித்து வந்தாருத்த மனர்
பூவில் பிறந்தாரும் புண்ணியத்தில் வந்தார் காண்
மலரிற் பிறக்கவுந் தன் மாதவத்தால் வந்தார் காண்
செய்கை தனில் பொத்தகமும் செம்பொ
னெழுத்தாணியுடன்

1945 எங்கள் நயினர் எழுந்தருளி வந்தார் காண்
சித்திரைக்குச் சித்திரையில் வந்துதித்தார்
தேர்வேந்தர்
புத்திரரை யீன்ற பசும் பூந்தேரின் மீதேறி
பொற் கனகத் தேரேறிப் பூமாரியுஞ் சொரிய
சொர்க்க வுலகெய்தித் துய்ய சடலத்துடனே

1950 காராம் பசுவும் கயிலாயஞ் சேர்ந்த பின்பு
ஆராத காதலுடனே யருகணைத்து
சீரார் திருமேனிச் செங்கையுறச் சென்றெடுத்தார்
ஆவலுடனே அய்யன்என்றே எடுக்கியபின்
பாலுஞ் சுரந்து தையா பச்சுடம்பு மாச்சுதையா

1955 ஆர்செய்த மாயமோ யறிய முடிய வில்லை
ஆலவாய்ச் சொக்கருட மாயமோ தானறியேன்
ஆரூர்த் தியாக ரருளென்றும் நானறியேன்
என்ன திருவுளமோ எம்பிரான் சோதனை யோ
ஒன்று மறியப் படுகு தில்லை உத்தமரே

---

**நோக - வருந்த; சடுதி - விரைவாக; வள்ளுவன் - முரசறைந்து செய்தி அறிவிப்போன்;**
**ஆரம் - மாலை;**
**பிறையணியும் வேதியர் - பிறைச் சந்திரனை முடியில் சூடும் சிவபெருமான்**

1960 என்ற மொழி கேட்டு இதமிய மாயிந்திரனுர்
அன்று முதற் செய்து அறிக்கையுடன்
வீற்றிருந்தார்
தார் வேந்த ரெல்லாந் தகுதியுடன்
வந்துகண்டார்
தேனே தாமைந்தர் திரு நாம மென்கொ லென்ருர்
சித்திரைக்குச் சித்திரையில் சென்மித்த பாலகற்கு

1965 பத்தி முத்தியாகப் பல்காலுங் கூறுதற்கு
சித்திர புத்திரனு ரென்று திருநாமம்
உத்தவரச் செவியிலே சாத்தினு ருத்தமனுர்
தேவேந்திரனுர் திருச்செவியில் சாத்தியபின்
தார்வேந்தர் வந்து கண்டு சந்தித்தார்
பாலர்தம்மை

1970 பாலகரு மிந்திரரும் பரமாசனத் திருந்தார்
ஏடலர் பூந் தாரனுக் கேழாங் காப்பென்று சொல்லி
காப்பரிசி குற்ற களஞ்சியத்தைத் தான் திறந்து
முப்பிகள் மேல் கட்டினுர் முப்பதுலட்சக் கலநெல்
பச்சை விதை குற்றிப் பருவரிசியாய்க் கொழித்து

1975 முத் திட்டலிட்டுக் கொடுத்தார் முறை முறையே
இந்திரா திபனுர் இனிய வொரு பூந்தேர் மேல்
வந்தார் நகரி வலமன்னர் பெருமாளேறி
காவலர்கள் வேந்தர் தனது மணித் தேரேறி
பாவ மலறச் சேர்ந்த பரிவார மீடேற

1980 எங்கும் மகமேற எல்லோரும் ஈடேற
பொங்கு கடலும் புவியும் வளர்ந்தேற

---

**புவனம் - உலகம்; பின் - முதுகு; தீர்த்தம் - தூய நீர்;**
**அண்டர் பெருமான் - தேவர் தலைவன்; உவரி - உப்புத்தன்மை;**

பெண்கள் மடலேறப் பேரரசர் தண்டேற
கண்கள் வெளிச் செறிக்கக் கன்னல் செந்நெல்
தானேற
சனன முறையேறத் தங்கப் பொன் மாற்றேற

1985 மன்னவர்கள் மன்னர் மதயானை மீதேற
ஆனைரதம் புரவி அஞ்சலஞ்ச லென்றேற
சேனை மிகுத்தேறச் செங்கோல் தழைத்தேற
கோணுச் சிவிகை சுமப்பா ரிளைப்பாற
கட்டியக் காரர் கலந்து பணி மாற்ற

1990 அரசர் புடைசூழ யானை வந்து தற் சூழ
பாசானப் பந்தடிக்கப் பாகர் வந்து தேரோட்ட
மத்த கச முத்து மலை பிடுங்கிச் சாடிவர
அட்ட குல வெற்பதிர அம்மானு ராடி வர
கொற்றக் குடை பிடிக்கக் கோமான் புடைசூழ்

1995 சுற்றிக் கொடி சூழச் சூழ்ந்து வர மந்திரிமார்
தங்கக் குடையுஞ் சகசம்பு பொற்குடையும்
திங்கள் குடையும் நின்று தேர் மேல் விளையாட
பட்டுக் குடையும் பவள நெடுங் குடையும்
முத்து குடையும் முழு மாணிக்க நற்குடையும்

2000 வெள்ளி விரிகுடையும் வெண்கல வட்டக் குடையும்
ஒள்ளிய செம் பொற்குடையும் முத்தசெழும் பூங்
குடையும்
நல்ல வயிர நவரத்தினக் குடையும்
தில்லை மன்றுளாடுஞ் சிவனுர் திருக்குடையும்
அமரர்க்கு வளித்த தொரு அய்யாயிரங் குடையும்

---

துடி - தோல் கருவி; மும்மதம் - மூன்று மதங்களையுடைய யானைகள் (ஆகுபெயர்)
ஆர்க்க - ஆராவாரித்து முழங்க;
பிதிர - உதிருமாறு

2005 அரக்கனி யிட்டதொரு ஆருயிரங் குடையும்
எடுத்து நிரைத்தார்கள் ஈரேழுலக மெல்லாம்
அடுத்து நிரைத்தார்கள் அண்ட ரெண்ட கோண
மெல்லாம்
வானவருந் தேவர்களும் மண்ணும் விண்ணும்
நின்ற திர
சேனை மன்னராற் பரவஞ் செந்தூ ளெழுந்து வர

2010 சத்த சமுத்திரங்கள் தானதிர வானதிர
சுற்று மகுடமுடி வேந்தர் சூழ் காலாளும்
ஆனைப் படையும் அடற்படையும் காலாளும்
சேனைத் தலைவர்களும் செம்பரிசைக் காரர்களும்
செம்பரிசைக் காரர் சிலம்பம் படித்துவர

2015 வெம்பரிசைக் காரர் விளையாடி ஓடிவர
ஈட்டிச் சிலம்ப மியம்பி விளையாடி வர
பூட்டிய மாபோர் பொருதி விளையாடிவர
வில்வாங்கி ரெண்டருகும் வீரர் விளையாடிவர
கை வாரங் கொண்டு கவிஞர்கள் பாடிவர

2020 முத்தாரஞ் சூட்டிவர முன்வசந்தன் ஆடிவர
வித்தாரம் பாடிவர வெண்கவரி வீசிவர
பட்டால வட்டமிடப் பாவாடை போட்டுவர
கட்டாணியா யடப்பங் காளாஞ்சிக் குஞ்சமிட
மங்கா ரிடக் கயமு மாமகரத் தோரணமும்

2025 சிங்கார மான நிலைத்தேரு மகமேரு களும்
துலங்கு மணி விளக்குந் தூள்படாத பொன்
விளக்கும்

---

**பேசாதெல்லாம் பேசி - இழித்தும் பழித்தும் பேசி; கவண் - கல்விடும் கவண் என்ற கவட்டை; நெடுமூச்சு - பெருமூச்சு; கைபுதைத்து - கையால் பொத்தி; அதிர - எதிரொலிக்க;**

இலங்கு மணி விளக்கு மிந்திர கோப தீபகமும்
ஆணிப் பொன் முத்தும் நவரத்தினுதி வச்சிரமும்
மாணிக்கப் பந்தமும் வைத்தார் வகை வகையே

2030 இந்திர வானம் எரிகதிர் போற்சோதிவிட
பொன்போல் வெளிச்செறிக்க பொம்மை கூத்தாடிவர
வங்காள மாடமணிச் சிலம்பு தான் புலம்ப
சிலம்பு புலம்பிவரச் செஞ்சதங்கை கொஞ்சிவர
கலந்து கலகலென்னக் கார் மேகம் போல் முழங்க

2035 அதிர முழங்கிவர ஆர்ப்பரவஞ் செய்துவர
மதுர வியல் பாடி மங்கலங்கள் கூறிவர
கோடி பெண்கள் ஆடிவர கோடி பெண்கள்
பாடிவர
நாடகங் களாடிவர ராக வகைபாடிவர
சிந்து வளம்பாடிவரச் சித்து விளையாடிவர

2040 பந்தி பத்தியாக நின்றும் பம்பரங்கள் ஆடிவர
பொற் பந் தெறிந்துவரப் பொன்னூசலாடிவர
நம்பவுரி கொண்டு வரலாகு விளையாடிவர
தெருக்கள் தெருக்கள்தொறும் சேகண்டி
போட்டுவர
தெருக்கள் தெருக்கள் தொறும் சின்னம்
பணி மாற

1045 ஓது திருச் சினமும் ஓலமென்ற பேரொலியும்
மேள வகையும் விருதுகளுந் தான் முழங்க
விருதுபல முழங்க வீராணந் தான் முழங்க

---

ஈனன் - இழிந்தவன்; காற்றில் என்பது திரிந்து காத்தில் என்ருயிற்று
சத்த உலகம் - ஏழு உலகம்; போனகம் செய்தல் - உணவு உண்டல்;
சமையும் - ஆக்குக.

சுருதி மறை முழங்கத் துந்துமிகள் தொந்தமென்ன
கின்னரி வீணை கிருபையுடனே முழங்க

2050 வண்ண மணிமுரசு வையக மெல்லா மதிர
ஈரே ழுலகு மதிர முழ வதிர
தாரை தகுதி யென்ன ச்சங்குகுழு மென்ன
தேரி லசைந் தாடிவர தேவரெல்லாந் தூவிவர
தேவமலர் தூவத் தெய்வக் கன்னி வாழ்த்திவர

2055 தோகை மயிலாடிச் சோபனமுங் கூறிவர
கோகுலமுந் தாராவும் கூவும்குயிலும் பயில
அன்ன நடைபயில அஞ்சுகங்கள் சொற்பயில
மன்னர் பெருமான் மணிக்கனகத் தேரில் வந்தார்
இவரார் காணென்பாரும் இந்திரர்கா
ணென்பாரும்

2060 தவறுத சத்தி அரிச்சந்திரர்கா ணென்பாரும்
சந்திரர்கள் சூரியர்கள் தம்பிகா ணென்பாரும்
ஏழைக் கிரங்கும் இராசாக்க ளென்பாரும்
ராமற் கிளைய லெட்சுமணர் காணென்பாரும்
கந்தர்கா ணென்பாரும் கற்பகங் காணென்பாரும்

2065 இந்த வடிவுள்ளா ரெங்குள்ளா ரென்பாரும்
இராச வடிவுடையா ரெங்குற்று ரென்பாரும்
எந்த வுலகி லிருந்து வந்தா ரென்பாரும்
எந்தெந்த தேசத்தி லிருந்து வந்தா ரென்பாரும்
என்ன வரிசை செய்தாலேற்கு மிவர்க்கு கென்பாரும்

---

**அனல் - நெருப்பு; தளிகை - தாம்பாளம்; முத்தீட்டல் - மூன்று தடவை அரிசி தீட்டல்;**
**தாற்றுவார் என்பது திரிபெய்தி தாத்துவார் என்னுயிற்று;**
**கொழிப்பார் - புடைப்பார்;**

2070 பொன்னும் நவரத்தினமும் போதச் சொரிவாரும்
போதமிகு பூஷணமும் பூச்சுகந்தாதிகளும்
பாற்குடமும் வைப்பாரும் பன்னீர்தெளிப்பாரும்
முன்வாசல்தன்னில் முகவாசம் வைப்பாரும்
வாசலில் தட்டு வகை வகையே வைப்பாரும்

2075 வீசு சுகந்த மலர் வெவ்வேறு வைப்பாரும்
இச்சைப்படியே இராச வரிசை யெல்லாம்
வைத்துக் கொடுத்தார்கள் வானுலகி
லுள்ளோர்கள்
இட்ட வரிசைக் கெதிர் வரிசை யிட்டருளி
சித்தி ரா வீதித் தெருவு மது கடந்து

2080 வீதியும் வீதித் தெருவு மது கடந்து
மாதேவர் கோவில் வலமாக வந்திறங்கி
வந்து புகுந்து மகதேவர் சந்நிதியில்
சிந்தை மகிழ்ந்து சிவனே யடி தொழுது
வேழமுகவனையும் விநயக பூசை பண்ணி

2085 தேனு மிளநீரும் தீங்கரும்புச் சர்க்கரையும்
பாலும் பழமும் பணியாரமும் பருப்பும்
பருப்பும் பொரியவலும் பச்சரிசித் தேங்காயும்
திருக்கச் சிறப்பளித்துத் தேரேறி வீதி வந்தார்
மேகங் குடைநிகழ்த்த வெண் சாமர மிரட்ட

2090 பாவை நல்லாள் சூழவரப் பாவாணர் வட்டமிட
வீர ரிரண்டருகும் வில்லெடுத்துச் சேவிக்க
பாவை நல்லார் வந்து பணிபொற் கலன் காட்ட

---

வழுதுணங்காய் - கத்திரிக்காய்; பதமாக - நல்ல பதமறிந்து; கறி - காய்கறி வகைகள்; அரிவாள்மணை என்பது அருவாமணை எனத் திரிந்தது

வாசமலரயனும் மாலவனும் சேச் சேயெள
ஏணிப்பந்தத் தோடே இராசதீவட்டி கையும்

2095 வீணையுஞ் சங்கு மியமுழவும் பேரிகையும்
தப்புங் குழலும் தவிலுங்கிடு பிடித்து
அப்புக் கடல் முழக்கம் போல அதிர்ந்து வர
கட்டுப் பரிகரிதேர் கட்டியக் காரர்களும்
கொட்டொலியும் பாட்டொலியுங் கொம்பனையார்
சுற்றொலியும்

2100 பொட்டலையுங் கைத்துலக்கும் போர்வெடிப்
பீரங்கிகளும்
வைத்த வெடி விருசு வாணப்பூ வாணமுடன்
ஒத்து முழங்கி ஒரு நூற்றுக் காதவழி
சித்திர வீதிகளும் செம்பவள வீதிகளும்
முத்து மணி வீதிகளும் முன் முகப்பு வாசல்களும்

2105 எண்ணெய்க் குழாங்க ளிறைத்து விளையாடி வர
மஞ்சள் பொடிகள் மகிழ்ந்து விளையாடி வர
முளைப்பயிறு பாலிகையும் முகந்து விளையாடி வர
சிலம்பு சிறு சதங்கை செம்பொன் மணிக்கால்
காரை
அமர்ந்த அரை வடமும் அரைநாறுங்கிண்
கிணியும்

2110 சிறந்தகணையாழி செம்பொன் சீராவுங் குண்டலமும்
பொருந்து கன பூஷணமும் பூணு நூல் தோள் புரள
அடிசேர் மெத்தைகளும் பசும் பொன்னுந்
தூங்கு மஞ்சம்

---

ஏகாந்தம் - தனிமையாக; சுமை பாரம் - மக்கள் பாரம்;
போசனம் செய்து - உணவுண்டு;
குவிமுலையார் - குவிந்த முலையுடைய பெண்கள்; ஐயர் - தலைவர்;

ரெத்தினக் கம்பளியும் ஏகாந்தப் பூவணையும்
பூவணையும் பூந்துகிலும் பொன்னின்குழு வண்ணமே

2115 பாவாடையும் வண்ண வண்ணப் பாய்கள்
தலையாணிகளும்
காப்பரிசி தேங்காயும் கண்டுவள முரியும்
கற்கண்டு சர்க்கரையுங் கச்சாயமுந் தேனும்
அப்ப மதிரசமும் அனந்தம் பல வகையும்
முப்பழமும் பால் குழம்பும் முத்தும் நவரத்தினமும்

2120 கற்பூர நற் சாந்துங் கத்தூரியும் புழுகும்
பொற் பூவுங் கந்தப் பொடியுஞ் சவ்வாதுகளும்
பரமஞ்சேர் குங்குமமும் பன்னீரும் சந்தனமும்
செப்பு வண்ணத் தண்டைகளும் செம்பவழத்
தாவடமும்
வெப்பிலையுங் காப்பும் வெள்ளிவளை பொன்
வளையும்

2125 இன்னவகை யென்றவர்க்கும் எண்ணப் படாத
வகை
கொண்டுவந்து கட்டில் மெத்தை தூங்கு மஞ்சந்
தொட்டிலுடன்
இட்டமுடன் வைத்து மைந்தர்க் கேழாங்
காப்பிட்டார்கள்
காப்பரிசி இட்டார்கள் காசினியோர் கொண்டாட
அற பாவஞ் செய்தார்களண்டர் முனி வோர்க
ளெல்லாம்

---

**அதிபாரம் - மிகுதியான கனம்; திக்கெனவே - துணுக்குறுமாறு; அக்கம் - உருத்திராக்கம்; மனு - மக்கள்; இற்ற கனி - அறுந்து வீழ்ந்த கனி.**

2130 பூமாரி பொன்மாரி போதமிகவே சொரியும்
தேவேந்தர் மைந்தர் திருமாளிகையில் போய்ப்
புகுந்தார்
மூப்பிகளுந் தாதிகளு முறை முறையே
கைதொழுது
தாப்பு ரிசமாகத் தடங்கையுறச் சென்றெடுக்கி
ஆன முலையா ரசைந்தாடத் தாலாட்டி

## தாலாட்டு

2135 பாவகங்கள் காட்டப் பலகா லமுதுபாடி
சீராட்டிக் கோதாட்டி செம்பொன் மணி சூட்டி
பாராட்டிப் பாலர் தம்மைப் பள்ளி கொள்ள
வேணு மென்று
பள்ளி கொள்ளும் பள்ளி கொள்ளும் பாலகரே
பள்ளி கொள்ளும்
ஒள்ளியும் பஞ்சணைமே லுத்தமரே பள்ளி கொள்ளும்

2140 தார் வேந்தே பள்ளி கொள்ளுந் தம்பியரே
பள்ளிகொள்ளும்
தேவேந்திர கண்மணியே செம்பொன்னே
பள்ளி கொள்ளும்
செந்தாமரை மலர்மேல் செல்வமே பள்ளி கொள்ளும்
இந்திராணி பெற்றெடுத்த இன்பமே பள்ளி
கொள்ளும்
ஆளப் பிறந்த அரசனே பள்ளி கொள்ளும்

2145 அஞ்ஞானந் தீர்த்த அரும் பொருளே
பள்ளி கொள்ளும்
ஏழைக் கிரங்கும் ராயரே பள்ளி கொள்ளும

---

காளகண்டர் - கழுத்துக் கறுத்த சிவபிரான்; அந்தரம் - ஆகாயம்;
அரனர் - சிவபெருமான்; மதம் - வெறி, ஆணவம்;

இந்திரனுர் கன்றில் மணிரத்தினமே
பள்ளி கொள்ளும்
அடியார்க் கெளியவரே அன்பரே பள்ளி கொள்ளும்
குடி தாங்க வந்துதித்த கோமானே
பள்ளி கொள்ளும்

2150 என்றரிய மால் பிரமர் காணு ரிறைவர் பதம்
கண்நிறையக் கண்டருளுங் காவலரே
பள்ளி கொள்ளும்
பண்டை விதிப்படியே பாரிலுள்ள நன்மை தின்மை
கண்டு கணக்கெழுதுங் காவலரே கண்வளரீர்
உறங்குறங்கும் பாலகரே உத்தமரே கண்ணுறங்கும்

2155 சித்திர புத்திரரே சீமானே கண்ணுறங்கும்
உத்தமரே பள்ளி உறங்கு மலர்ப்பஞ்சணே மேல்
பள்ளி கொள்ளுமென்று பலசாஸ்ருஞ் சொன்னளவில்
சொல்லுவதென் தாதியரே துயிலவோ வந்தோனும்
அல்லும் பகலும் அநவரதனுழிகையும்
(தாலாட்டு முற்றும்)

2160 எனக்கு முறக்க முண்டோ ஏதுநான் சொன்னுலும்
கணக்கு விளங்க வந்த காரியத்தைக் கேட்டருளீர்
சீரார் பெருங் கணக்குந் தெய்வத் திருக்கணக்கும்
ஆராய்ந் தெடுத் தெழுதி அட்டவணே சேர்க்க
வந்தோம்
பாவிகளே வெவ்வேறே பட்டோலே கொள்ள
வந்தோம்

2165 தாதியரே யாவர்க்கும் தன்மந் தலேகாக்கும்
ஊர்க்கும் உறமுறைக்கும் உற்ருர்க்கும்
பெற்ருர்க்கும்

---

உள்ளுடைந்து - மனம் வருந்தி;
இட்டுஉண்டு - பிறருக்குக் கொடுத்துப்பின் தானுமுண்டு;
என் கோ - என்தலேவன்; கன்னியிதழ் - இளமையான இதழ்.

ஆர்க்கும் சரியா எழுதுவோ மாறணங்கு
என்ற மொழி கேட்டங் கிருந்த சிலதாதியர்கள்
சென்று கண்டு தெண்டனிட்டு தேவேந்திரற்
குரைத்தார்

2170 தேவேந்திரர் கேட்டுத்தேவிமுகம் பார்த்து
மாதே யிவனினித்தான் வத்திக்கும் பிள்ளையல்ல
ஆதீனத்துக் கேற்ற அடிக்கடியாப் பிள்ளை யல்ல
சோதனை யால் நம்மை மனஞ் சோதிக்க
வந்தார் காண்
மனச்சோதனை பார்க்க வந்தவர்காண்
மைந்த ரென்று

2175 அமையு மினிப்பிள்ளை யாசையினி ஆரணங்கே
பிள்ளை யெனு மாசை அமையு மினிப் பெண்
கொடியே
மைந்த ரெனு மாசை அமையு மினி வாணுதலே
பூரையினி பூரை புத்திரர் மேல் வாஞ்சை
யெல்லாம்
ஆரம்பஞ் செய்யாதே என்றுரைத்தாரத்தியர் கோன்

2180 தாதியர்க ளெல்லாந் தகுதியுடன் வந்து கண்டு
ஆரமுலையா ரசைந்தவரைத் தாலாட்ட
எண்ணு மெழுத்து மிலட்சணமு மாகமமும்
பண்ணும் பழகி வளர்ந்தாரே பைங்கொடியே
இந்திரரை ஓதுவித்த இலட்சணிக வாத்தியார்

2185 மைந்தரையும் ஓதுவித்து வானிதியம் வாங்க
வந்தார்

---

**எரிவாய் நரகம் - நெருப்புப் பற்றி எரியும் நரகம்;**
**அத்தர் - தலைவர்; வானவர் கோன் - தேவர் தலைவன் இந்திரன்;**
**தாரணியோர் - உலகோர்; கங்காளர் - சிவபெருமான்;**
**காம தகனம் - மன்மதன் எரிப்பு;**

வாத்தியார் தன் வரவும் வானவர் கோன் கண்டருளி
போற்றி செய்து புண்டரிகப் பொற்பாதமே வணங்கி
பிள்ளைப் பெருமானைப் பெற்ற பேராசையினுல்
பள்ளிக்கு வைத்துப் படிப்பிக்க வேணுமென்ருர்

2190 அந்நேரம் நாள் கேட்டு ஆனந்த முகூர்த்தமிட்டு
பொன்மாலை பூமாலை பூஷணை மெல்லா மணிந்து
ஒப்பற்ற உடையுடுத்தி உத்த மகா வீரியற்கு
பச்சரிசி குற்றிப் பட்டணத் தெல்லார்க்குமிட்டு
தட்டி யறைந்தாரகள் சப்த லோகங்க ளெல்லாம்

2195 கொட்டினுர் பொன்மாரி கூட்டிக் குவியல் செய்தார்
பொன்னும் நவமணியும் பூந்துகிலுந் தான் சிறக்க
மன்னவர்க்கு முன்ஞக வைத்து வரிசை யெல்லாம்
வெள்ளித் தகடெழுதி மேய்ந்து பசும்பொன் னிழைத்து
பள்ளிக் குடந்தனிலே வைத்தார்கள் பாலர்தம்மை

2200 செப்பரிய இந்திரனுர் தெய்வீக புத்திரரை
ஒப்பரிய பள்ளி தன்னி லோதுவித்துத் தாரு மென்ருர்
ஆமென்று வாத்தியார் அப்போ தறிவரிய

ஓமென் றெழுதி வுரைத் தாரொரு வசனம்
ஓமென்ற அட்சரத்தை உத்தமனுர் கேட்டருளீர்

2205 நாமும் பயனறிய நன்ருகக் கூறுமென்ருர்

---

**வாய் மொழி - உண்மை; ஆக்கினை - கட்டளை;**
**புனிதர் - தூய்மையானவர்; கோழை - அச்சமுடையவன்;**
**அஞ்செழுத்து - நமசிவாய என்னும் நாமம்.**

அரியோமென் றேதுமொழி யார்பிள்ளா
யந்தனரே
சிவனு ரொருவரன்றித் தேவ தேவாதிகளும்
விர்மாவும் விஷ்டுனுவும் மிகச் சீவாத்துமமும்
நமனுரு மெந்தன் நடுக்கணக்கி லுள்ளவர் காண்

2210 நமனுக் கதிகாரம் நாமல் லோ நாடறிய
சிவனுக்கு அட்டவணை செப்பேடெடுத் துரைப்போம்
அட்டவணையு முடிப் பிரஸ்த் தாந்திரமும்
கட்டுங் கடைகூட்டுங் கைக் கணக்கும் காரியமும்
பெரும் பயனுளதும் பின்னு முன்னு மாராய்ந்து

2215 எறும்பு கடையானை முதல் எல்லாம் எழுதவல்லோம்
நம்மை எவரும் வந்து கைகட்டி நிற்பதல்லால்
நாமு மொருவர்களுக் கிடையூறு செய்வதுண்டோ
ஆபாதகேடர் அநியாயர் நெட்டூரம்
மாபாவியான மறுமாயக் காரர்களை

2220 கோளர் குறும்பர் கொடியர் கொலை பாதகரை
ஏழை எளியாரை இன்னு செய் பாவிகளை
பாவிகளை வெவ்வேறே பட்டோலை கொண்டுவந்து
ஆதி யரனுர் தமக்கு அட்டவணை வாசிப்போம்
அட்டவணை வர்க்க மனுப்படி பட்டோலை வகை

2225 பட்டோலை வாசகத்தைக் கேளுமென்ருர் பாலகரும்
கட்டேடு அவிழ்த் தார் கையருவித் தொளிவிட்டார்
தட்டி யெடுத்தார் தடம் பெரிய கையாலே
பொத்தகத்தைத்தான் விரித்துப் பொன்னேடு
கைப்பிடித்தார்
சித்திர புத்திர ரென்று பேரிட் டிருந்ததில்

---

**அமரர் கோன் - தேவர் தலைவனுகிய இந்திரன், மேதினி - உலகம்; புங்கு-புங்க மரம்; ஆதிபரமேசுரன் - உலகத்தின் முதல் தலைவனுகிய சிவபிரான்;**

2230 சிவனார் கணக்க ரென்றுபேரிட்டிருந்தததில்
தெய்வீக ஏடென்று பேரிட்டிருந்த ததில்
அவ் வேடு போட்டு மறு வேடு கைக் கொண்டார்
தேசம் விளங்க வென்று செப்பேடு வாசித்தார்
பார்த்தார் பலகணக்கும் பாரிலுள்ளார் தன்
கணக்கும்

2235 வாத்தியார் தன் கணக்கும் வந்து
வெளிப்பட்டவுடன்
எங்களுடை வாத்தியார் லெட்சணிகப் பண்டிதரே
உங்களுடை ஏட்டி னுள்விபரங் கேட்டருளீர்
தனது மனையன்றித் தலைநாளில் நீருமொரு
அஃதி மனை யிலட் சனீர் கண்டீரோ

2240 உம்முடைய செய்கை உமக் கறியப் போகாது
நம்முடைய ஏட்டி னடுக் கணக்கில் செய்து
வைத்தோம்
ஏட்டி லெழுதி வைத்தோம் எள்ளளவுந் தப்பாதே
அட்டவணைப் பட்டோலை அய்யர் முன்னே
வாசிப்போம்
அய்ய ரருளால் அதற்கான காரியங்கள்

2245 செய்யுமடவிலே செய்வார் செரு தூதர்
இவை காணிவர் பாவம் யாவருங்கே ளொன்றருள
அதுகேட்டு இந்திரனு ராலித் தெழுந்திருந்து
இந்திரனு ராசனத்தே ஏகாந்த மாயிருக்க
மைந்தர் பெருமான் மனமகிழ்ந்தங்கே துரைப்பார்

2250 தேவியார் பிக்கிருக்க நேரமுண்டோ தேவேந்தே

---

ஆமணக்கு - விளக் கெண்ணெய் வித்து; காயம் - பெருங்காயம்;
கரகம் - கமண்டலம் பாத்திரம்; மதம் - ஆற்றல்;

பூலோக சோதனைக்குப் போய் வாரேன்
புண்ணியரே
நாட்டிலே சோதனை போய் நல்லாரை தீயாரை
ஏட்டிலே சேர்த்தங் கெடுத்தெழுத நான் வாரேன்
எனக்கிருக்க நேரமில்லை யிரே ழுலகினும் போய்

2255 கணக்கெழுதி நான் வாரேன் கண்டீரோ காவலரே
தேசக் கணக் கெனத் தெரிந் தெழுத நான்
வாரேன்
பாரக் கணக்கைப் பரிந் தெழுத நான் வாரேன்
பொல்லாக் கணக்குப் புறம் பெழுத நான் வாரேன்
அமுது செய்யு மென்று அப்போ துரைத் தருளி

2260 இமையவர்கள் போற்ற இனிதிருந்தார்
மண்டபத்தே
நடனமிட ரம்பையர்கள் ராக வொலி முழக்க
சதுர்வேத சங்கீதத் தந்திரங்கள் தான்முழங்க
வித்தியா வினோத ருடன் வேந்தர் புடை சூழ
பத்மா சனந் தனிலே பாலகனார் வீற்றிருந்தார்

2265 சிங்கா தனத்தித்திருந்த சித்திர புத்திரரே
கண் காட்சி யாக வந்து கண்டார்க ளெல்லோரும்
செசெ வென்றே துதிக்குந் தேவர் சபை தனிலே
இம தன்மராசர் இனிதாகக் காணுகைக்கு
மணி வலைக் காரர்களும் மன்னவருந் தற்சூழ

2270 சிறுவலைக் காரருடன் தென்னவருந் தற்சூழ
வீசு வலைக் காரர்களும் வேந்தருந் தற்சூழ
பாச மெடுக்கும் படுவாயர் தற் சூழ

---

**ஆனை உரித் தோலான் - ஆனைத் தோலாடையுடைய சிவன்**
**குமிறி - குமுறி ஒலித்து; ஆர்க்க - பெரும் ஆரவாரம் செய்ய;**
**புலித் தோலுடையார் - புலித் தோலாடையுடைய சிவன்;**
**ஆறு சடைமுடியார் - கங்கையினைக் சடையில் சூடிய முடியுடைய**
**உற்ற என்பதன் திரிபு உத்த என்பது.**

உலக்கைக் கழுக்காணி எடுத்தோடினுர் தற்சூழ
கிலுக்குத் தடிக்கார கிங்கிலியர் தற்சூழ

2275 இருப்புத் தடிக்காரர் ஈனுதார் தற்சூழ
நெருப்புந்தான் கொண்டு நெடுமுடியார் தற்சூழ
அட்டைக் குழி கொண்டு அண்டையிலே தற்சூழ
வெட்டுக்கிடா கொண்டு வேடர்களுந் தற்சூழ
கட்டுக் கிடா கொண்டு காப்பிலியன் தற்சூழ

2280 சிட்டுப்பிடிக்குஞ் சிலதூதர் தற்சூழ
கருநாய் பிடிக்கும் கருமோடர் தற்சூழ
செந்நாய் பிடிக்கும் சிலதூதர் தற்சூழ
அறுக்கிற கத்தி கொண்டு ஆரணியர் தற்சூழ
கறுக்கிற சட்டிகொண்டு கால் கடியார் தற்சூழ

2285 கொத்துகிற கோழிகொண்டு கோலவண்ணுர் தற்சூழ
பாயுங் கிடாக் கொண்டு பஞ்சணையில் தற்சூழ
ஈயென்ற பல்லும் எரிகின்ற மூஞ்சியுமாய்
மோடேறிப் பார்த்திருக்கும் மொட்டையர்கள் தற்சூழ
எக்கிடு கத்தியரும் ஈனு இருஷிகளும்

2290 பக்குவிழிப் பறவைகளும் பற்கோரைப் பல்லிகளும்
கட்டுக் கயறுங் கடுவிடமும் தீநாகம்
அட்ட திக்கும் நின்றதிர ஆர்ப்பரிக்கும் தூதர்களும்
எத்தி யழைத்துவிடும் இடும் பரிடும் பழித்து
குத்தி யமுக்கிக் கொடுப்போற தூதர்களும்

---

**கன்மவினை - கரும வினைகள்; ஈனங்கள் - இழி செயல்கள்; திருவாய் மலர்தல் - கூறுதல்; கனகசபை - பொன்னம் பலம்; ஆதித்தர் - சூரியன்;**

2295 நாணு கொள்ள நஞ்சுதின்ன நற்றுணையாக நின்று
வேணு மென்று வஞ்ச வினை விளைக்குந் தூதர்களும்
பீடை பலபிணி நோய் பிணி மூப்புச் சாக்காடாய்
கூட உலாவிக் கொடு போற தூதர்களும்
கூட்டிக் கொடு போய்க் கொலைகளவுக் குட்படுத்தி

2300 காட்டிக் கொடுத்துக் கடக்க நிற்குந் தூதர்களும்
கொள்ளை களவுக்குக் கூடநின்று கூற்றுவனாய்
கள்வ னென்று வெட்ட கழுவேற்றுந் தூதர்களும்
ஆறுதிங்கள் போனதாங் கரை வயிறு பிள்ளையுடன்
கூறுவனாய்ச் சூழ்ந் துயிரை சூறைகொள்ளுந்
தூதர்களும்

2305 நெட்டூரக் காரருடன் நின் முடுகுத் தூதர்களும்
குறட்டிக் குறளிகளுங் கூளிகளும் காளிகளும்
நீலியும் நீலியும் நிணமுடன் நிணமலியும்
சூலியும் பாலியும் துர்க்குணச் சண்டாளிகளும்
அய்யனும் துர்க்கையும் ஆங்காரத் தேவதையும்

2310 வெய்யிலுகந்தோனும் வெறி வீர பத்திரனும்
அம்மனனு மந்தனுடனுதி வயிரவனும்
கோல முயல கண்டன் குமர கண்டன் கூற்றுவனும்
மூதேவியுஞ் சனியும் முன்னடியும் பின்னடியும்
ஆகாச கன்னியரும் அற்பப் பிசாசுகளும்

2315 வம்பியும் துந்துமியும் வம்பிகளும் தும்பிகளும்
பெண்பேயும் பூதப் பிரேதப் பிசாசுகளும்
பேயுங் கிரைதங்கும் பெருவாரியுங் குருவும்

---

**ஆதித்தர்-சூரியர்கள்; தூக்கிய பரதம் - நடமாடும் கால்கள் (குஞ்சித பாதம்)**
**இயம் - வாத்தியம்; அண்டரண்ட கோளம் - எல்லா அண்டங்களும்;**
**மன்று - அம்பலம்; கனக சபை - பொன்னம்பலம்.**

ராச மருளும் நம கோடி சித்தர்களும்
பில்லியும் சூனியமும் பிந்தநும் பிரகூமும்

2320 கொல்லவல்ல தூதர்களும் கொடிசூலேப் பாதகருந்
இப்பெரிய தூதருடன் இயமதன ராசாவும்
பொற்கனக ஈற்றின் மணிப்பூந் தெரு வாகனமும்
கட்டும் பரிமாவும் கடகரியுந் தான்முழங்க
துட்ட மிருகமுடன் தும்புருவும் கிம்புருவும்

2325 கிம்புரு நாரதர்கெணநாதர் கிங்கிலியர்
சிம்புள்ள கொரமுனி சிங்கம் கரடி புலி
சீறும்படி பாவிச் சேரத் திமி திமி யென
ஏறுங்கிடா வேறி அக்குரோணி சேனேயுடன்
அத்திபுரம் புகுந்து அப்போ 'தியம தன்மர்

2330 சித்திர புத்திரரைச் சிந்தையுறச் சென்று கண்டு
சந்திரருஞ் சூரியரும் தானஞ் செய் செய் யென்ன
இந்திரலோகத் திருந்த சபைநடுவில்
நமன் வந்தெதிர் காண நாயகனுர் உளமகிழ்ந்து
இமதன்மா வாருமிரும் என்றருள் புரிந்தார்

2335 அருளுந் திரு மொழி கேட்டப்போ தியமதன்பர்
நகரிவலம் போய் வருவோம் நாயகமே வாரு
மென்றார்

அந்த மொழிகேட் டவரு மனமகிழ்ந்து
மைத்தர் பெருமாளும் மாளிகை யினுள்புகுந்து
மாதாவின் பாத மலரடியைத் தெண்டனிட்டுப்

---

நமன் - இமயன்; பிரமா - விர்மா எனத் திரிபுற்றது;
வசமோ - எளிய செயலோ; குறுமுனிவன் - அகததியன்;
ஆழி - மோதிரம்; சேடன் - ஆதிசேடன் என்னும் அரவம்;
அய்யர் - சிவபிரான்; ஆடவரம் - ஆடுகின்ற பாம்பு.

2340 போத விடைதாரும் என்று புண்ணியனார்
தாமுரைக்க
வந்து தொழுது மகனார் முகம் பார்த்து
இந்திரனார் தேவி இடுக்கி அரவணைத்து
வானகம் போலேந்தி மடியிலே வைத்திருந்து
ஆனந்த மாரற் கருளால் முலையருளி

2345 அடிசிலமைத்து அமுது செய்து போமெனலே
இயம தன்மராயர் தம்மை ஏவினா ரிந்திரரும்
ஆனா லது கருமமா மென்றவர் மகிழ்ந்து
போனா ரிமய தன்மர்ப் போனதற்பின் பூவுலகில்
மாமிரு கண்டர் மதலை மார்க்கண்டர் தம்மை

2350 தாமுடுகிப் பாசந் தனைவாங்கி வீசி விட்டார்
அப்போது மார்க்கண்டர் அரனே அபயமெனத்
தப்பாமல் ஈசர் வந்து சண்டனைத் தாளா
லெறிந்தார்
இயம னிறந்த படியா லெழு புவியோர்
முதுமக்கட் சாடிவைத்து முந்துனாதான்
பொருத்து

2355 சாடி பதித்துத் தரணி மிகுத் தேறி மிக
பூமி பொறுத்தாலும் பொய் பொறுப் பாரமுத்து
பைந்தொடியாரும் பூமிபாரஞ் சுமந் தலுத்து
இந்திரனார் வானுலகில் ஏறி இனிதாக
தேவேந்திர புத்திரரை சென்று நான் காண
வென்று

2360 பூவார் புரி குழலாள் பூமாதேவி வந்தருள்வாள்
வந்தருளி இந்திரனார் வாய்த்த திருமாளிகையில்

---

அகிலதலமும் - எல்லா உலகமும்; திருவாசகம் - உயர்ந்த மொழி; நாரி - பெண்; பொன்றாமல் - இறக்காமல்; மன்று - அம்பலம்; பாதிமதி - பிறைச்சந்திரன்;

அந்திமிகும் பாலர் தம்மைக் கண்டு புவிமாது!
அறையா முறையா கொய்யா இராசாவே
அறைய முறையா கோதனம் இராச்சியமே

2365 மார்க் கண்டன் பொருட்டால் மறலியுயிர்
பொன்றுதலால்
தீர்க்க முள்ள பூவுலகில் சென்ம மிகுத் தேறுதலால்
கன்ம வினை சூது கவடு பாவம் பெருத்து
தன்ம செயமில்லாதே தாரணியுந் தாங்குதில்லை
முந்திய சென்மங்கள் முழுதும் முடியுதில்லை

2370 வந்து கலி முகந்து வாள் நகரி கொள்ளுதில்லை
பூமி பொறுக்கப் படுகு தில்லை புண்ணியரே
தாம முடியீ ரென்தலையால் சுமக்க லூற்றேன்
மாலை முடியீரென் மார்பாரச் சுமக்க லூற்றேன்
ஏடலர் பூந்தாரீர் எனக்குப் பால் சுமக்க லூற்றேன்

2375 தொங்கலப் பூ முடியீரென் தோளால் சுமக்க
லூற்றேன்
பங்கம் பதினுறும் படருற்றேன் பாலகரே
வந்துவிடு வென்றுன் வாழ் நகரி பாழாக்கி
போந்து விடுவேனுன் பூலோகம் பாழ் கிடத்தி
பாழ்கிடத்தி னுன் வருவேன் பாலகரே
என்றுரைத்து

2380 பூமி மெத்த னேக புண்ணியனுரே துரைப்பார்
வருவோ மென்று சொல்வதென்ன மாதாவே
இப்போது
சிறுவன் பிறக்கிலும் யான் செய்வதொரு
காரியமென்று

---

இமதன்மா - இயமதருமன்; சேவில் - காளை வாகனத்தில்;
ஆபாத - அடிமை நிலை மன்று - அம்பலம்; தஞ்சம் - பற்றுக்கோடு;
சரணுகதி:

அறையா முறையா கோவென்றாள் ஊரறியக்
கூப்பிடுகிறீர்
பிறையணியும் வேதியர்முன் போயுரையும்
பேதையரே

2385 என்றருளிச் செய்ய இருவிழிகண்ணீர் சொரிய
நின்று சலித் தங்கவள் நெடுமூச்சுத் திறனெறிந்து
ஆரமுலையாள் அலறி யூடு போக லுற்றாள்
ஆனந்த மாரி அலற வீடு போக லுற்றாள்
ஆளப் பிறந்தாள் அலறுங் குரல் கேட்டு

2390 ஏழைக் கிரங்கு வா ரின்பமணி வாய் திறந்து
சடுதியிலே தூதுவர்கள் தானோடித் தேடி யிங்கே
பறை யறையும் வள்ளுவனைப் பார்த்தழைத்து
வாருமென்றார்
ஓடி யழைத்து ஒரு நொடியில் தூதர்கள்
தேடி யழைத்து வந்தார் தெய்வவடி வள்ளுவனை

2395 இந்திரனார் கோவி லினிதாகச் சுற்றி வந்து
எழு கோல் கோல்நிலத்துக் கப்பாலே சென்று
நின்று
மெழுகாத் தின னறை புறம்பாகத்
தெண்டனிட்டான்
தெண்டன் நமக் காரமென்று சீர்பாதஞ் சேவை
செய்து
அண்டர் பெருமானே அடியேனுக் கேது பணி

2400 என்னை அழைத்தபணி யொன்று
குறைவில்லைக்காண்
பூமாது வந்து கண்டு பூலோகம் பார மென்று

---

**வானகம் - தேவருலகம்; கணநாதர் - பூதகணங்களின் தலைவர்; பதாதி - சேனைகள்; மாதீர்த்தம் - உயர்ந்த தீர்த்தம்; மகதேவர் - சிவபிரான்;**

தாமார மாறித் தயங்கியுரு போருள் காண்
ஆரமுலேயாள் அலறி யுருப் போருள் காண்
ஆனந்த மாரி அலறி யுருப் போருள் காண்

2405 புவன மிசை பிஞ்சு பிதிர் பூவிருக்கக் காயிருக்க
பழமுதிர வென்று பறை யறையும் வள்ளுவனே
பார மது தீரப் பறை யறையும் வள்ளுவனே
பாருலகில் பக்கப் பழுத்த பழம் தானுதிர
காயிதழ் பூ நிற்கக் கனியுதிரச் சாற்று மென்றுர்

2410 ஆயுளடியேன் அருளப்பெற் றேனென்று
ஏவல் பெற்றே னென்று இணேக் கடகக் கை
தொழுது
பணியப் பெற்றே னென்று விடைபெற் றெழுந்
திருந்து
உவரிப் பெருங்கடலே ஒருநொடியில் போந்தருளி
தெள்ளு திரு மைக்கடல் தீர்த்த முகந் தாடி

2415 வள்ளுவனு மங்கே மயிர் முடிந்து பின் போட்டு
சிந்தை மகிழ்ந்து திருநீறுற வணிந்து
சந்தி சதுர்வேதஞ் சாத்திரமுந் தான் மொழிந்து
வீடு புகுந்து மிகவே மனங் குளிர்ந்து
மாலே முடியோ மது மாங்கிஷங்களுண்டு

2420 கோல முடை மும் மதங்கள் கொண்டு வெறி
மிகுத்து
ஆபரண மெல்லாம்அணிஅணியாத் தானணிந்து
பறை யறையுங் கைக்குப் பல மோதிரங்களிட்டு

---

**வேழமுகம் - யானேமுகம்; ஆதித்தன் - சூரியன்;**
**பாதாதி கேசம் - அடி முதல் முடி வரை; பஞ்சக்கரம் - ஐந்தெழுத்து**
**பாகு - வெல்லப்பாகு. மந்திரம் நமசிவாய என்பது;**

பறை யறையுங் கைக்குப் பலனுங்கு தான் கட்டி
கன கணம் பொற் காப்புக் கனக வளைதான்
கட்டி

2425 தொங்கலப் பூந்தாரன் துடியிறுக்கி வாரிறுக்கி
தாம முடியான் மணி முரசைத் தட்ட யெடுத்
தெரிட்டு
வார் தோல் நரம்பெழும்பு மார் நிறையவே
போட்டு
மத்தக சந்தனனை வலமாக வந்து கண்டு
மத்தகத்தைத் தட்டி மகசானை மீதேறி

2430 ஆனைமேலேறி அழகு திரு மாலையிட்டு
மான கரி யெல்லாம் வலமாகச் சுற்றி வந்து
தீர்க்க முடன் பூலோகம் தெண்டன மாகப்
போந்து
ஆர்க்க முழக்கிட்டு அதிரப் பறை யறைந்தான்
காயிலை பூம் பிஞ்சும் பிதிர கனி யிதழ் தானி ருக்க

2435 துய்ய கனி வீழவென்று சொல்லிப் பறை யறைந்
தான்
பறை யோசை கேட்டுப் பழுத்த பழமத்தனையும்
தரை மீதுதிர்ந்து விழத் தாரணியி லுள்ளோர்கள்
வள்ளுவனை வைதடித்து மத்தளத்தைத்
தானுடைத்து
பிள்ளைகளும் குட்டிகளும் பேசா தெல்லாம் பேசி

2440 திட்டி முட்டி யோடி சிறு பிள்ளை யன் துரத்தி
கட்டிக் கவணிட்டெறிந்தார் கண்செவி வாய்
மூக்கறவே

---

கன்னல் - கரும்பு; கதலி - வாழை; கமுகு - பாக்குமரம்;
சுகந்தம் - மணம்; கந்தம் - மணம்; பங்கயம் - தாமரை;
வெறி - தேன்;

எல்லாருங் கூடி எறிந்து வரும் வாறுகண்டு
சொல்லாது சொல்லியிருந்தான் மெலப் பறை
யணிந்து
பெயநீர் வெறி மிகுத்து பெருந் துலகில்
வள்ளுவனும்

2445 காயும் கனியும் கலந்து பறி யென்றறைந் தான்
கண்ணி யித ழெல்லாம் கலந்து பறி யென்ற
றைந்தான்
பூவும் புனலு முதிரப் பறை யறைந்தான்
பூலோக மெல்லாம் அதிரப் பறை யறைந்தான்
அதிரும் பறை முழக்கம் அப்பக் கேட்டுந்தமனர்

2450 இதுவும் கலியுக மோவென்று நெடுமூச் செறிந்து
சிவ சிவா வென்று திருச் செவியைக் கைபுகைத்து
அரகரா வென்று அணிமூக்கில் கையமர்த்தி
கோபித்துக் கண் சிவந்து கொற்றவர்கள் வீரியரும்
பாவத்துக் கேது விதோ பாவி யென்னு மிவனை

2455 காயும் பழமுங் கலந்து பறியென் றேமோ
கன்னியும் பிஞ்சுங் கலந்து பறி யென்றேமோ
பூவும் புனலும் முதிரறையச் சொன்னேமோ
பொல்லாத ஈனன் புலையாட்ட மாடுவனே
ஓடியலையுமடா தூதுவர்கள் வள்ளுவனை .

2460 தேடிமழையுமடா தெய்வவடி வள்ளுவனை
போ யழைத்து வாருமெனப் புண்ணியனார்
தாமுரைக்க
கானத்தி லுங் கால் கடிய தூதர்க ளோடி வந்து

---

பத்தி - வரிசை; தராதலம் - உலகம்; அகிலதலம்-எல்லா உலகம்;
ஏகாந்தம் - தனிமை; செச்செயன - உலக வழக்குச்சொல், மக்கள்
மிகுதியாக;

உத்தமனுர் தூதர் உலகமெல்லாந் தேடிவர
சத்த உலகத்தினுக்கு மப்பாலே தானொழித்தான்

2465 தேடித் திரிந் தலுத்துத் தேசமெங்கும் காணுமல்
ஓடிப் போனுனென்று உரைத்தார்கள் உத்தமர்க்கு
உத்தமருங் கேட்டு உருக்கிமிகச் சினந்து
பொத்தகங் கொண்டெல்லோரும் போய்
வருமோ மென்றருளி
பத்தியுடன் மாதாவின் பாதமலர்த்தாள் பணிந்து

2470 புத்திரனுர் மாதாவைப் போக விடை தாரு
மென்றுர்
தேவேந்திரர் தேவி சிந்தை மிகவே மகிழ்ந்து
தாமார மாறர் தம்மைச் சந்தோஷமா யுகந்து
ஆனந்த வாளமரர் அம்பலத்தில் சென்று வர
போனகங்கள் செய்துவர வேணுமென்று
புண்ணியற்கு

2475 ஆரமுலேயீ ரடிசில் சமையு மென்று
தாதியரைத் தான் விடுத்தாள் தருமக் கருங்
குழலாள்
அடுப்பு மெழுகி அடுக்களேக ளொப்பமிட்டு
அச்சு நதக் காப்பிட்டு அணிகலங்கள் சம்பலிட்டு
மேலக் கடலில் முத்தை விடுத்து மிகக் கொழித்து

2480 கீழ் கடலில் முத்தை கிலாழிப் புடைத் தெடுத்து
வார்கடலில் முத்தைத் வரண்டி மிகக் கூட்டி
தென் கடலில் முத்தை திரட்டி யெடுத்து வந்து
வனேபலமு மாணிக்கம் வாரித்தணல் போட்டு
ஆச்சாவுந் தேக்கும் அகிலும் பிளந்தடுக்கி

---

இயமதன்மர் - இபமதருமன் என்பதன் திரிபு; களபம் - சந்தனக் குழம்பு;
விருகம் - மிருகம்; உடு - நட்சத்திரம்;

2485 காரகிலுஞ் சந்தனமும் கலந்து சிராய் மாட்டி
அக்கினி கிளப்பி அனற் கிளப்பித் தீ மூட்டி
கொந்தார் குழலார் குழலெடுந்து ஊதிறார்
செய்ய புழுகு சம்பா சீரகச் சம்பா வரிசி
துய்ய செழுஞ் சம்பாச் சொரி குறும்பை கார்
குறுவை

2490 தாத்துவா தாத்திக் கொழிப்பார் தறித்திடுவார்
தீட்டுவார் முத்தீட்டல் தெள்ளிப் புடைத்திடுவார்
ஆய்ந்தரிசி தன்னை அடைவுடனே கல்பார்ப்பார்
சேந்த பழவரிசி சேர மறுநீர் களைவார்
அரித்துப் பொகட்டுவ ரானபொன் தளிகையிலும்

2495 வடித்துப் புடையிடுவார் வாள் தடங்கண்ணார்கள்
அம்மி பதிப்பார் அருவா மணை பதிப்பார்
அருவா மணைமுன் அழகாக வந்திருப்பார்
வாழைக் காய் கொய்வார் வழுதுணங்காய்
காம்பரிவார்
பாகற் காய் வெண்டை பயித்தங்காய் நாருரிப்பார்

2500 ஈரப் பலாக் காய் இடைமுள்ளுக் கொய்திடுவார்
சோலைப் பலாக்காய் சுளை திருத்தி ஏறிடுவார்
நல்ல பலாக்காய் நலமா யரிந்திடுவார்
வெள்ளரிக்காய் மாங்காய் விருப்பமுடனே
அரிவார்
தாதறக் காய்த்த தனியவரை நாருரிப்பார்

2505 மாதரிளங்கத்தரிக்காய் வகையா யரிந்திடுவார்
ஆரமுலையார் அமுதரிக் காயரிவார்
கீரை யரிவார் கிளாய்க் காய்கள் ளூறிடு வார்

---

**நடுவெழுதி - நடுவு நிலைமையோடு; பாதகம் - தீயசெயல்கள்;**
**அத்தியர் கோள் - சித்திரபுத்திரன்; பொல்லார் - தீயவர்கள்;**

உப்பிஞ்சி யோடே புளியிஞ்சி ஊறிடுவார்
பொற் பூசணிக்காய் புடலங்காய் தானரிவார்

2510 மாங்காய் வழுநுணங்காய் வளமா யரிந்திடுவார்
வற்றல் வடகம் வகையேதான் பொரிப்பார்
தேங்கா யரிவார் சிறுகிழங்கு தானரிவார்
கற்பகமான கருணைக் கிழங்கு தன்னை
பொற் பதமாகச் சமைத்துப் புளி யிடுவார்

2515 ஆயிரத் தெட்டு அருங்கறியுஞ் சேர்வை செய்து
காயம் மிளகு கடுகு பலசம பாகம்
சேர நிறையளித்துச் சீரகமுந் தாளித்தார்
தாளி தமும் பச்சடியும் சார்ந்த பருப்புப்
பொறிக்கறியும்
ஆயிரத் தெட்டு அருங்கறியுந் தான் சமைத்தார்

2520 பதினாயிரக் கலப்பால் பத்தொன்றாகக் காய்ச்சி
அழகாகச் சேர்த்தங்கடுக்கினா ரத்தனையும்
இன்பரச வர்க்கத்துள்ளே துண்ட துவகையும்
அன்புடனே கச்சாயமான வகை நூறளித்தார்
ஒக்க வடுக்கினார் உத்தரணிக் காலுடனே

2525 முட்ட வடுக்கினார் முத்து மாணிக்கத் தூணோடே
சேர வடுக்கினார் செம்பவளக் காலோடே
இந்திரனார் மைந்தர் இருந்த பெருஞ்சபையில்
கூடலடுக்கிக் குவிமுலையார் வீற்றிருந்தார்
போசனம் செய்து புறப்படும் புண்ணியரே

2530 நந்தியுடன் நாரணரும் நான்முகனும் வந்திருந்தார்
என்றரிய மாலயனோ டேகாந்த மாயிருந்து

---

நந்தவனம் - பூஞ்சோலை; கொந்தளகம் - கற்றைக் குழல்;
புறம்பு - வெளியே; கடுநரகு - கொடிய நரகத்தில்;
ஆதித்தன் - சூரியன்; அந்தியடுகையில் - மாலைநேரத்தில்

புன்றியனு ரப்பொழுது பொத்தகம் பார்த்
துரைப்பார்
மார்க்கண்டையர்க்காக யமன் மாண்டான்
சிவபாதத்தால்
தீர்க்க முள்ள பூமி சுமை பார மாற்றுமல்

2535 வந்து முறையிட்டு மயங்கி யுடுப் போவதனுல்
அந்த வுலகில் அதிபாரந் தீர்த் தருள
வள்ளுவனே ஏவி மணிப்பறையைச் சாற்றுமென்ன
கள்ளு வெறியோ டறைந்தான் காய்கனி பூ
பிஞ்சுதிர
இக்கரும மெல்லாம் இயலராய் அடவடவே

2540 மிக்க சிவனுர்க்குகந்து விண்ணப்பஞ் செய்யு
மென்று
திக்கெனவே வந்து கண்டு சீர்ப்பாதந்
தெண்டனிட்டு
அக் கரவம் பூண்டார்க் கயன்
திருமாலேதுரைப்பார்
ஈசரே கேளீர் இயமன் இறந்தமையால்
காசினி யோர்க் கெல்லாங் கவடுபட துட்டமுற

2545 வையம் பெருத்து மனுப் பெருத்து சாடி வைத்து
பொய் மிகுத்து மெய் சிறுத்துப் பூமி மிகச் சலித்து
சித்திரபுத் திரர் முன் சென்று முறையிட் டருளி
உத்தமருங் கேட்டவுடன் ஓநம சிவாய மென்று
வள்ளுவனே அங்கழைத்து மைந்தர் திருவாய்
மலர்ந்து

2550 தெள்ளு தமிழ்ப் பூவுலகில் சென்று முறைப்பட்
டறிந்து

---

கூளமயிர் - தலேயினீங்கிய மயிர்; தன்மம் - தருமம்; எரி-நெருப்பு;
நத்தாரை - விரும்பிச் செய்யாதவரை; சண்டாளி - பாவஞ்செய்
தோர்;
கபடர் - வஞ்சனேயாளர்;

முற்றின காய் பிஞ்சு பிதிர் மொட்டிதழ் பூவங்
கிருக்க
இற்ற கனி வீழ்ந்தருள வென்று பறைசாற்று
மென்ன
ஆமென்று தான்போய் அவனிமிக வள்ளுவனும்
நானென்று சொல்ல அவனென்று செய்து
வந்தான்

2555 றொட்டி மது மாங் கிஷங்களுண்டு வெறி மிகுத்து
தட்டி யறைந்தான் சகலசனரு மிறந்தார்
அந்தரமே நின்று அலையும் வகை யாம்படியே
வந்த வரலாறு வகைப்படியே தப்பாமல்
சித்திர புத்திரனர் தேவரீர் பாதமிசை

2560 உற்ற திரு வசனம் ஓதி வரச் சொன்ன தென்று
மெய்யாகவே அயன்மால் விண்ணப்பஞ் செய் தருள
அப்போது கேட்டரனர் உளமகிழ்ந்து
தெள்ளு தமிழ் வள்ளுவனைத் தேடியழையு மென்ன
வள்ளுவனும் வந்து மலர்ப்பாதந் தெண்டனிட்டு

2565 எந்தன் பிரானே எனை யழைத்த தேது பணி
உந்தன் மத மோடு ஒன்று சொல்ல ஒன்று
செய்தாய்
அரக்குக் குடித்தாயோ ஆனைமத முற்றாயோ
உருக்கி அறைந்தாயோ உலகமெல்லாம் நின்றதிர
என்ன வகையாலே எல்லா மிறக் கடித்தாய்

2570 கண்ணைப் பிடுங்குங் கோளென்றாரே காளகண்டர்
அப்போது வள்ளுவனும் அடிபணிந்து
தெண்டனிட்டு

---

**சென்மித்து - பிறந்து; ஈனர்கள் - இழிந்தவர்கள்;**
**காட்சிபிடுங்கு - கண்ணைப் பிடுங்கு; மிண்டு - இடையூறு;**
**பிறர்தாரஞ் சேர்பவர் - பிறன்மனை நயந்த பெரும் பாவிகள்**

இப்போது நாயடியேன் ஏருது விண்ணப்பம்
சித்திர புத்திரர் முன் திண்புவியோ ரெல்லாரும்
பத்தி யுலகில் பறையறைய வேணு மென்ன

2575 பெண்சாதி ஆண்சாதி இரண்டும் பிரியுமென
இடங்கை வலங்கை யிரண்டும் பிரியுமென
கட்டை விரலில் எண்சாண் காட்டி விடுக்க நிதப்
பத்தி யெறியப் பழுத்த பழம் தானுதிர
பூவிருக்கக் காயிருக்கப் பூப்பிஞ்சி தளிரிருக்க

2580 மேவு கனியுதிர வென்று பறை சாற்றென்ன
அந்தப்படியே அடியேன் பறையறைய
விந்தைப் புவியில் விளையாடும் பிள்ளைகள் தான்
சின்னச் சிறுபிள்ளை சீறித் துரத்தி என்னை
கல்லுஞ் சில்லுங் கவணுங் கட்டிகளும் விட்டெறிய

2585 செங்க லெறிக் காற்றுமல் தீவினையே
னுள்ளுடைந்து
கண்கலக்கப்பட்டடியேன் கைகால் மெய் வாய்
செவி போய்
திறங்கொண்ட மும்முதம் போல் சேறெ வறிமிகுத்து
வாக்கும் பெயர்ந்து தய்யா மாலயனே தேவர்களே
அரக்கு வெறிகள் ளறலெகிறியாயடியேன்

2590 உருக்கி முழக்கிட்டுதிரப் பறை யறைந்தேன்
கன்னியிதழ் காய் பழம் பூக்கண்ட தெல்லாம்
தானுதிர
இன்ன தென்றும் பாராதிறக்கடித்தேன் என்கோவே

---

**அண்டர்பிரான் - தேவர்கள் தலைவன்; நோமைகள் - தீங்குகள்;**
**ஓரம் செல்லுதல் - ஒரு பக்கம் சேர்ந்து தீமையுரைத்தல்;**
**பொசிக்க - உண்ண;**

இறப்பதனந்தம் பிறப்பதுவுந் தானனந்தம்
ஏழுபிறப்பிலும் இட்டுண்டு வாழ்வதன்றி

2595 இந்த நரகில் விழுவார் பல கோடி
எரிவாய் நரகம் புகுவார் சிலகோடி
கன்னி கருவழிந்து காய்த்தவடு தானுதிர்ந்து
மண்ணும் புனலும் மரமுந் தலை யழிந்து
தண்ணீர் தரைபுழுத்துச் சாணிதழைப் புழுத்து

2600 உள்ளே உடல் புழுத்து ஊத்தப்பிணம் நாறி
ஆங்கார தம கன்மம் ஆகாத்தியம் பெருத்து
தாங்காத பாரம் தலையழிய வந்ததையா
தம்மாலே தாமிரந்தார் தாரணியோர் தங்
கொடுமை
நம்மாலே வந்ததல்ல நாயகமே இந்தவினை

2605 நாயடியேன் செய்கருமம் நன்றுமிது தீதுமிது
தாயகமே யென்றருளப் தம்பிரானுள் மகிழ்ந்து
ஞானமிகு வள்ளுவனே நங்கருமம் பாராமல்
வானவர் கோன் மைந்தர் தமை மன்றாடிக்
கொள்ளுமென்றார்
அத்த ரருள்படியே அந்நேரம் வள்ளுவர் தான்

2610 சிந்திர புத்திரரைச் சென்று கண்டு
தண்டனிட்டான்
தெண்டனிட்டு வாய்புதைத்துதெய்வ வடி
வள்ளுவன்தான்
தெண்டனுக்குத் தொண்டனென்று தூரநின்று
ஏது சொல்வான்
கங்காளர் வாரார் காண் காமதகனஞ்செயல்
போலே

---

நோன்பு - மடுமையான விரதம்; நிந்தை - பழிச் சொல்;
சென்மம் - பிறவி; கன்ம வினை - கரும வினை;
பிரமதாயம் - பிராமணர் கட்கு அளித்த மானியம்.

எங்கோவே நாயடியேன் என்று விண்ணப்ப
மையா

2615 தேவரீர் சொற்படியே சென்று பறை சாற்ற
லுற்றேன்
பூவுலகோ ரென்னைப் பொடிபடவே சாற்றலுற்றார்
அப்போது நாயடியேன் ஆற்றமுடி போகாமல்
செப்பாத வாய்மொழியை செப்பினேன்
தீவினையேன்
புத்தி யறியாப் புலையடியேன் செய்த பிழை

2620 அத்தனையுங் கொண்டு பெரும் ஆளவந்த நாயகனே
அய்யா அடியேனை முனிந் தாக்கிணையைச்
செய்வனென்றால்
வைய முழுதுடையீர்! மன்றாடிக் கொண்டருளும்
கோழையனைத் தற்காத்துக் கொண்டருளும்
கொற்றவரே
ஏழையடியேன் தனக்காய் எப்பிழையுங் கொண்டு
பாரும்

2625 பொறு மென்றடி பணியப் புண்ணியனு
ரஞ்சலென்று
செறிவினுடனே சிவன் பாதம் போற்றி செய்து
அரனும் உமையும் இனிதிருந்த அத்தலத்தே
சரணம் சரணுகதி என்று தாள் பணிந்து
வந்து பணிந்தருள மாதேவ ருளமகிழ்ந்து

2630 சிந்தை மகிழ்ந்து திரு நீற்றுக் காப்பணிந்து
அஞ்ச லஞ்ச லென்றருளி யஞ்செழுத்து முச்சரித்து

---

**பேதகம் - தீமை; வரடர் - தீயோர்கள்; லோபி - உலோபத் தன்மையர்;**
**ஊன் தின்பவர் - புலால் உண்பவர்;**
**ஆயத்துறை - அரசியல் சுங்கத்துறை;**

பஞ்ச வண்ண மேனியனுர் பஞ்சக்கர மளித்து
புத்திரரைப் பார்த்துப் புனிதர் திருவாய் மலர்ந்து
உத்தமரே நீர்தா ஞெரு நொடியில் வள்ளுவனே

2635 ஆக்கினே செய்தனும் அந்நேரந் தீருமென்ன
ஆக்கிய மென்றருளிப் பாலகனு ரப்பொழுது
அன்று மவன் தன்னே அடியே னனுப்பு தலால்
சென்று பறைசாற்றச் சீறிச் சினந் துலகோர்
அறியாமற் செய்தங் கடித்துத் துரத்துதலால்

2610 வெறியுடுற வறைந்தான் விண்ணுமண்ணு
நின்ற திர
வள்ளுவர்மேல் குற்றமில்லே வையகத்தோர்
செய்தவினே
உள்ளபடி யிதய்யா உகந்தடியேன் விண்ணப்பம்
என்தன் பெருமானே எனக்காய் பொறுக்க
வென்று
சிந்தையுறப் பணிந்தார் சித்திர புத்திரனுர்

2645 அறிவானவரே அமரர் கோன் புத்திரரே
வெறி யாவ தேது விளங்க வுரையு மென்ருர்
அப்போகணக் கடவே ஆராய்ந் தெடுத்
தெடுத்து
செப்பேடு தன்னிலுள்ள சேதி விரிவாம் படியே
மேதினியி லுள்ள வெறிமருந்து கள் மதுவும்

2650 ஆதி பரமே சுரனுற் கன்பா யடை வடைவே
கள்ளு மதஞ் செய்யுங் கணக்கு வகுத் துரைப்பார்
வெள் வேல் வெதுப் படக்கி வெள்ளறுகு பேய்
மருட்டி

---

நாணழிவு செய்வர் - நாணம் நீக்கியவர்; கவடு - சூது;
காலன் - இயமன்; புறம் பேசி - புறம் கூறுதல்; வாகு பெற - மிக்க அழகு பெற;

கஞ்சா அபின் மருந்து கள்ளி முள்ளிக் காஞ்சுரை
மஞ்சள் கொடு வேலி சங்கு மாவிலங்கைப்
பாலொருவி

2655 அத்தி மரம் மா பலா ஆலரசு புங்கு புளி
உத்தம தாளி மருளுமத்தை ஆமணக்கு
சித்த மட்டி பேர மட்டி சீந்தி செங்கத்தாரியிவை
இத்தனையுங் கூட்டி இடித்துப் பொடியாக்கி
தூள் மருந்திளேடே துவைமருந்து சாறுகளும்

2660 காயஞ் சேங் கொட்டை கடுக்காய் தானிக்காயும்
அரக்கும் அவலு மளிசோறு வெல்லமும் பலமும்
சரக்கு வெறிமருந்துஞ் சாராயக் கோசலமும்
ஆறுவகை விதை நெல் முளையும் அரிசிகளும்
ஊரு மதுநீரும் உருக வடித் திருந்து

2655 அரித்ததே கள்ளங் கரிசி யரித்துப் புகட்டி
வடித் தெடுத்துக் கொண்டால் மத்ததுக்கு
அற்புதமே
ஒரு பானைக் குட்பானை ரெண்டே ஒன்று நொங்கே
யொன்று கள்ளே
அருவருப் பில்லா தருந்தி லப்போது நொசரியே
சால் கரகம் மொந்தை பெருஞ்சட்டி மதுக்கும்
பகுடம்

2670 சேர நிறைத்துக் கறைத்து சிந்தா தெடுத்து வந்து
பளப்பறை கீழ் சாதி பரிந்து கந்து கொண்டாடி
கொக்கரித்துக் நிட்களித்துக் கொண்டு மொண்டு
கொண்டளவில்

---

ஏரூசை - அதிக ஆசை; அய்யமின்றி - பிச்சையிடாது;
பொய் ஆணை - பொய்ச் சத்தியம்; பாழ்வாய் - தீயசொல்;
சென்மி - பிறத்தல்;

ஊத்தை வாய்நாற உதரத்துட்போமளவில்
உம்மை யெம்மை அம்மை தம்மை யோமிகிக்
குறந்த மதம்

2675 அந்த மதங் காணும் அவனைப் பகட்டிறது
இந்த மதுவின் பெருமை யாம் பார்ப்போ
மெனறருளி
ஆறு சடை முடியார் அந்தமதம் தானறிய
சீறு புலித் தோலுடையோர் சித்திரபுத்திரற்
குரைத்தார்
உத்தமருந்து கேட்டு ஒரு நொடியில் வள்ளுவனை

2680 வைத்தாக்குங் கள் மதுவை வாங்கி வரப்
பார்க்க வென்றார்
சென்றந்த வள்ளுவனும் திக்கெனவே
தன்னகத்துள்
அன்றந்த மும்மதங்க ளவைத் தங் கடை வடவே
பெயநீறு கள் மதுவும் பிசலறவே வடித்து
ஆனை யுரித்தோலா னந்தத் துருத்திகட்டி

2685 துருத்தி நிறையச் சுலாபாணியம் புகட்டி
எறிக்குங் கதிரருகே யீசர்திரு முன்னுக
வைத்தானே கொண்டுவந்து வள்ளுவனுங்
கள்ளதனை
குத்தாலத் தையர்முன்னே கூத்தாடுந் தோல்
துருத்தி
பூரித்தறக் கொதித்து வுறக்க மூழ்கக்கிக்கு முறி

2690 ஆலித்துறக் குற்று ஆர்க்க முழக்கிக்குமுறி
துருத்தி படும்பாடு கண்டு துய்ய சிவனுருமங்கே

---

**எரிவாய் நரகு - தீப்பற்றி எரியும் நாகம்; காணுடிடால் என்பது காண விட்டால் என்பதன் திரிபு;**
**திண்டு முண்டு - தீய செயல்; அர்ப்பசலம் - குறைவான நீர்;**

சிரித்து மனகிழ்ந்து தேவரைப்பார்த்
தேதுரைப்பார்
முப்பத்து முக்கோடித் தேவ ரிருஷி களே
முடிகொடுத்த வேந்தே மும்மூர்த்திகளே கண்டீரோ

2695 தோல்பட்டபாடு கன்றல் துட்டனென வள்ளுவனை
கோபிப்பதோ நீதி கூறினீர் கொற்றவரே
அரக்குப் பொறிகள் மது அன்றளிக்க
உண்டுமிழ்ந்து
குடித்துப் பொறுத்தார் களல்லோ பெரியோர்கள்
வள்ளுவர் தானே பெரியார் வானுலகில்
தேவர்களே

2700 கள்ளு வெறியே துலகோர் கன்மவினை
மாள்வ தென்றார்
மானினது தும்பை கொன்றைமான்
மழுவுந்தரித்தார்
ஈனங்களே நீதி லென்றீசர் திரு வாய்மலர்ந்து
தானந்த மில்லாதார் தானும் மனமகிழ்ந்து
ஆனந்த மாடி நின்ற ரன்பரும் பொன்
னம்பலத்தே

2705 கனகசபை மண்டபத்தே காளியுடன் வாதாடி
தூக்கிய தாளுஞ் சிலம்புந் தொதி நதி மான்
மழுவும்
வியாக்கிர பதஞ்சலியும் வித்தியா விநோதர்களும்
கெருடருங் கெந்திரா சங்கீதா சானத்தியரும்
வருணரும் வாசுகியும் வாயுபகவானும் மைந்தர்

---

**வீணி - வீணர் (பெண் பால்); மூதேவி - முகடி; ஏசல் - வசை மொழி**
**விஷமி - துட்டர்கள்; நஞ்சு - விஷம்;**
**நிர்மூடர் - தீயமடையர்கள்.**

2710 ஒருபதினறு பெயரு முராரிகளும்
அரியயனு மிந்திரனு மாதித்தர் சந்திரனும்
முனிவர்களும் முப்பத்து முக்கோடி தேவர்களும்
கிம்புருவுந் தும்புருவுங் கிங்கிலியருநு கணமும்
அம்புலி பதஞ்சலியு மம்பிகை திரியம்பிகையும்

2715 அரகர புத்திரரும் ஆகாச கன்னியரும்
பதினொருருத்திரரும் பன்னிரண் டாதித்தர்களும்
அறுபத்து மூவர்களும் ஆன முதலிகளும்
திரு நடன மாளிகையில் தேவ தேவாதிகளும்
துந்துமியுந் தொந்தமென்னதூக்கிய பாதந்
தொனிப்ப

2720 நந்தி பிரம்பா லடிக்க நான்மறைக ளோல
மென்ன
திண்டியங்கள் கொட்டத் திமிதிமென்று
தித்தியென
தொண்டர்கள் கொண்டாடத் துடியுடுக்கை தாள
மொத்த
அண்டரண்ட கோளம் அதிர நடனம் பயில
கண்டுபல ரெற்றினர் கனகசபை மண்டபத்தே

2725 அனவாத தாண்ட வமாய் அன்று தில்லை மன்றுள்
நின்று
திருநடமே புரிந்தார் செயதருவாம் சிதம்ப
ரேசுரனர்
மண்ணும் விண்ணும் நின்றதிர வானவர்கள்
செச்செ யென

---

இருசிகள் - குழந்தை பெருமலடிகள்; சிதள் - கரையான்;
ஊன் பொசித்தோர் - ஊன் உண்டோர்; பேதங்கள் - வேற்றுமை,
பிரிப்பு வேலை

அன்று பதஞ்சலிக் கங்காடினு ரம்பலத்தே
சித்திரக் கூத்தாடி நின்றார் தேவர்சபை நடுவே

2730 பொத்தகமுங் கைப்பிடித்துப் புண்ணியருங் போந்தருளி
கட்டேடவிழ்த்துக் கயிறுருவித் தோளிலிட்டு
செப்பேட் டினுள்பதிந்த செய்தொழிலுங் காரியமும்
உள்ள துளதாக உகந்து கணக் கோதும் வகை
எல்லவருங் கேளு மென்று ஏடெடுத்து வாசித்தார்

2735 அரிய பெரியவரே அம்பலத்தி லுள்ளோரே
பெரிய வகை ஏதுபேசுகிறீர் பெற்றியரே
திசைமுகனும் செந்தாமரை மலரிற் றோற்ற மென்றார்
செங்கண் நெடுமாலத் திருக்கடலிற் றோற்ற மென்றார்
கடலோ குறுமுனிவன் கையிலடக்க மென்றார்

2740 கார் முனியோ கும்பக் கலசத்திற் றோற்ற மென்றார்
குடமோ புவிமீதிற் கொஞ்சமா மண்ணெனன்றார்
கோலப் புவியுஞ் சேடனுக் கங்கோர்தலையிற் பாரமென்றார்
சேடனோ அம்மைச் சிறுவிரலுக்காழி யென்றார்
ஆடரவம் பூண்ட வம்மை அய்ய ரிடப் பாக மென்றார்

2745 அய்யரும் அன்பா யிருதயத்துள் வாழ்வ ரென்றார்
அன்பர் பெருமை அளவிடவென்றால் வசமோ
விர்மாவு மிப்படியே கிடக்கக் கருத்தென்றார்

---

தாள் - தாழ்ப்பாள்; ஓரி - நரியின் வகை; சென்மி - பிறக்க; வேசி - இருமனப் பெண்டிர்; நாலிரண்டு - பிறர்மீது அவதூறு கூறல்;

விட்டுனுவோ மாயை அழிக்கக் கருத்தென்றார்
சிவனுல் கிருபை யருளக் கருத்தென்றார்

2750 சென்மச் சனியன் அழிக்கக் கருத்தென்றார்
நமனுருயிரை வதைக்கக் கருத்தென்றார்
யாமிவை யெல்லாம் எழுநிச் சேர்க்க கருத்தென்றார்
எழுதுங் கணக்கடவும் எம்பிரான் கற்பனையும்
பழுதிலா வாசகத்தின் பண்பும் பலநடவும்

2755 சிவனொருவ ரல்லாது சேரவுக மடையும்
பிரளயமும் கொத்து விட்டுப் பின்னும் வகுத்து
விடும்
அகில தலமும் புரக்கும் ஆதி பர மேசுரர்பால்
எவரெவர்கள் செய் தொழிலும் யாமெழுது
வாறீ தெனவும்
செவ்வாய் திறந்து திரு வாசகம் மொழிந்து

2760 அவ்வேடு போட்டு மறுவேடு கைக் கொண்டார்
நாரி பங்கர் முன்னே நமனுர் கணக்கடவும்
செப்பேட்டி லுற்பவித்த செய்தொழி லுங்
காரியமும்
காரியங்க ளாம்படியே கூறினுர் காவலரும்
நமனுர் பிழைத் திலராய் நாட்டமா மாலயனே

2765 சிவனு ரருள்படிகாண் தேவ தேவாதி களே
உரு மாற்றி ஈரே முலகுமிறக்கும் புவனம்
இரு நூற்றிருபத்து நாலு மிருக்கு மப்போ
எந்தன் கணக்கி லொன்று மேருது தாளாது
பொன்றுமலே முடித்துப் போகாம லெல்லோரும்

---

பர்த்தா - கணவர்; நாணுவுயிர் - பலவகையான உயிரினம்;
கன்மங்கள் - கருமங்கள்; சூழும் - உண்டாகும்;

2770 மன்றாடு மீசர் தம்மை மன்றாடு மென்றுரைத்தார்
அப்போது மாலயனும் அண்டர் முனிவோ
ரனைத்தும்
தப்பாது மன்றாட்டுத் தாருமென்று தாள்
பணிந்தார்
பாதி மதிசூடும் பரம ரருளங் களித்து
ஓதியருளுங்கள் உங்களுடை பாடெலாங்
கேட்டு

2775 சித்திர புத்திரரை சிந்தைமகிழ்ந்தே நான்
தம்பிரானே
உற்றகரும முமக்கேது கூறுமென்றார்
சிவனார் களிகூர சித்திர புத்திரனார்
எமராசன் தன்னை எழுப்பி வருள்செய்வ தென்றார்
ஆமென்றருளி அரனெழுப்பு மப்போதியமன்

2780 ஓமென் றெழுந்திருந்து உகந்துதிருத்தாள்
பணிந்தான்
இமதன்மா வாருமென்று ஈசர் திருவாய் மலர்ந்து
தன்மந் தவம் பொறுமை சார்ந்தவர் பால் நீ
அணுகில்
இன்னம் படும்பாடி திலும் பெரிய தென்றார்
அப்படியே ஆமென் றறுதி யுறுதியுடன்

2785 செப்பிய மன்றீசன் திருத்தாளைப் பூண்டு கொண்டு
அறியாமை செய்தமையாலன்று பட்டபாடறிந்து
பெரியோர்கள் பாலணுக பேய்கொண்டேனே
வடியேன்

---

**கமலபதம் - தாமரையோன்ற திருவடி; வைகுந்தநாதன் - திருமால்; விமலர் - மலமற்ற இறைவன்; கோதாளம் - பசுதானம்; தெய்வபதம் - தெய்வப் பதவி;**

அய்யரடியா ரடியார்க்கு நாயடியேன்
செய் கரும மேது மறியேன் இனிச் சிறியேன்

2790 ஆபாத நாயேனை அஞ்சலென்று காத்தருளும்
சீர் பாதந் தஞ்சஞ் சிவனே சிவாயமென்ன
பார் பதி யாரும் பரமேசுரனுரும்
சேவிலுகந் தேறித் திருஞானக் கண் சாத்தி
அடியாருக் கருளும் விடையருளும்

2795 காட்சி கொடுத்துக் கயிலாயஞ் சென்று புக்கார்
ஈசர் கயிலாயத் தெய்தியபின் னெல்லோரும்
வாச மலர்ப் பூந்தேனு வானகமுஞ் சென்றேறி
வாரி கடலதிர மண்ணதிர விண்ணதிர
சேரத் திமிதிமெனத் தீர்த்தக் கரை போனூர்

2800 வானேர் முனிவர்களும் சிவகுமர ருஞ் சுரமே
நவ கோடி பூத கணநாதர் சிவதூதர் களும்
எமராசர் கிங்கிலியர் எக்கு ரோணி சேனைகளும்
அத்தி புரத் துள்ளா ரனேக பதாதி களும்

2805 சித்திர புத்திரருந் தீர்த்தத்துறை போந்து
போந்து சிவகெங்கை தனிற் புண்ணிய தீர்த்தங்கரையில்
சேந்த திருவாபரணஞ் செம் பொன்மணி முத்து வடம்
ஆடை வகை பூங்கச்சு அணி முத்து அலர் தாரான்
பாளை கொடு பல்விளக்கி ஓலைகொடு நாவழித்து

2810 தீர்த்தமும் வாங்கித் திருவாயுங் கொப்பளித்து
போற்றி செய்து கங்கை புகுந்து புனல் புகுந்து

---

**சொர்ணம் - பொருள், நாணயம்; அவகாலம் - தீய பஞ்ச காலம்; வைபோகம் - விழா; அடவி - சிறுகாடு; நந்தவணம்-பூந்தோட்டம்**

மாதா பிதாவை நினைந்தாடினர் மாதீர்த்தம்
மகதேவர் தம்மை நினைந்தாடினர் மாதீர்த்தம்
ஈரேழுலகை நினைந்தாடினர் மாதீர்த்தம்

2815 ஏழை யெளியாரை நினைந்தாடினர் மாதீர்த்தம்
பாதாதி கேசம் விளங்க ஆடினர் மாதீர்த்தம்
பஞ்சக் கரத்தை நினைந்தாடினர் மாதீர்த்தம்
பூலோகம் வாழ வென்று ஆடினர் மாதீர்த்தம்
பூமி தழைத் தோங்க வென்று ஆடினர்
மாதீர்த்தம்

2820 தந்தை தாய் தன்னை நினைந்தாடினர் மாதீர்த்தம்
மாதீர்த்த மாடி மயிர் முடிந்து பின் போட்டு
ஆதித்தன் பூசை அநுட்டா னம் சந்தி பண்ணி
சிந்தித்து நின்று சிவனைத் தியானித்து
ஆனைமுகனே அறுமுகனே போற்றியென்று

2825 வேழமுக நாயகனே விநாயக பூசை பண்ணி
குட்டுங் குடு குடுப்பை காரா மணிப் பயறும்
கட்டுப் பலாச் சுளையும் கண்குழிஞ்ச மாங்கனியும்
பாலும் பழமும் பணியாரமும் பாகும்
தேனு மிளநீருந் தீங்கரும்புஞ் சக்கரையும்

2830 பருப்பும் பொரி யவலும் பச்சரிசித் தேங்காயும்
திருக்கைச் சிறப்பளித்துத் தேவாதி களுடனே
பொற்கைப் பூந் தேரில் புண்ணியனு ரேறிவர
தற்சூழத் தற்சூழச் சாமந்தர் தற்சூழ
முப்பத்து முக்கோடி தேவர்களுந் தற்சூழ

---

பஞ்சகலிதீர்த்தோர் - பஞ்ச காலத்தில் வறுமை நீக்கியோர்;
புண்டரிகம் - தாமரை மலர்; பஞ்சாட்சரம் - ஐந்தெழுத்து மந்திரம்
'நமசிவாய என்பது; ஆதிகுருநாதர் - ஆதிமூர்த்தியாகிய சிவபிரான்

2835 நாற்பத் தெண்ணாயிரம் இருஷிகளும் தற்சூழ
முன்னூறு கோடி முதற் கணக்கர் தற்சூழ
நானூறு கோடி நகரத்தார் தற்சூழ
அஞ்னூறு கோடி அருங்கணக்கர் தற்சூழ
எண்ணூறு கோடி எழுங் கணக்கர் தற்சூழ

2840 மூணு லெட்சங் கோடி முடிமன்னர் தற்சூழ
நாலு லெட்சங் கோடி நடுக்கணக்கர் தற்சூழ
அஞ்சு லெட்சங் கோடி அரசமக்கள் தற்சூழ
ஆறு லெட்சங் கோடி அல்லகண்டர் தற்சூழ
ஏழு லெட்சங் கோடி இயம தண்டர் தற்சூழ

2845 எட்டு லெட்சங் கோடி இயமதூதர் தற்சூழ
பத்து லெட்சங் கோடிதமிழ்ப் பாவாணர் தற்சூழ
கந்தருவர் பூத கணநாதர் தற்சூழ
மந்திரி ராசாக்கள் மகாசேனை தற்சூழ
நல்லோர் பெரியோர் நவகோடி தற்சூழ

2850 எல்லோருந் தற்சூழ வெங்கும் முழவதிர
ஈரேழுலகு மெழுந்தார்ப்பரவம் நின்றதர
ஆகோ வெனச்சீவாத்துமாக்கள் நின்றலைய
ஆதார மண்டபத் திலண்டங் கிடுகிடென
வேதாந்த வோல மென விண்ணோர் மலர் சொரிய

2855 இந்திர பாணரத பாண மீதேறி
எங்கள் பெருமாள் வருவீதி கடோறும்
சித்திரமணி மண்டபமுஞ் செம்பொன் மதில்
மேடைகளும்

---

**பரகதி - உயர்ந்த மோட்சம்; தீராவினை - நீங்காத வினைகள்;**
**செயமாக்கி வரும் - வெற்றியுண்டாக்கும்; இன்மை - வறுமை;**

கொத்தளமும் பொற்சிகர முங்குலவு
பொம்மைகளும்
பொற் கனக பாரமும் பூவாலே மகமேரும்

2860 கன்னற் கதலி கமுகு கொடி மஞ்சளிஞ்சி
செந்நெற் கதிர் நிரைப்பார் செம்பொன்மணி
மூவுரைப்பார்
சந்தனமுங் குங்குமமுஞ் சாந்துஞ் சவ்வாதுந்
தெளிப்பார்
கந்த சுகந்தாதி கந்தப்பொடி பூத்தெளிப்பார்
கற்பூரமுங்களப கஸ்தூரியுஞ் சிறந்த

2865 பொற்பூவும் பூந்துகிலும் போதமிகவேசொரிவார்
பூக்கள் சொரிவார் புதுப்பன்னீர்தான் றெளிப்பார்
தூக்கமுடன் பாளைகளும் தோரணமுங் கட்டு
விப்பார்
குங்குமப் பூபாளைகளும் கூர்கமுகின் பாளைகளும்
பங்கயப் பூந் தேரூர்ந்த பாணமும் பவ்வந்திகளும்

2870 பவ்வந்திச் சேலைகளும் பட்டுப் பட்டாவளியும்
செவ்வந்தி மாலைகளுஞ் செங்கழுனீர் மாலைகளும்
வேருங் கொழுந்தும் வெறிகமழுஞ் செண்பகமும்
செறுவை மாலைகளும் செய்ய முத்து மாலைகளும்
செம்பவள மாலைகளுஞ் சிறந்த வகை மாலைகளும்

2875 தங்க வகை பூஷணமு மஞ்சனன பின்னத்
தாவடமும்
வச்சிர மணி மாலைகளும் மாணிக்க மாலைகளும்
நல்லவகை வகையே நாற்கோடியும் நிரைத்தார்
நடை காவணத்தில் நவரத்தின சிங்கா தனமும்

---

**புள் - பறவை; ஊர்வன - ஊர்ந்து செல்லும் பிராணிகள்;**
**சிருஷ்டித்தார் - படைத்தவர்; காசினி - உலகோர்;**

இடையொழுகாப் பந்தல்களும் இந்திரர்
மந்திரமும்

2880 ஏகாந்த லோகம் எமலோக மெங்கணுந் தான்
ஆகாசப் பூப் பந்தலிட்டா ரணி யணியாய்
சல்லி சவரந் தூக்கித் தட்டவரை மேற்கட்டி
பல்வித முங் கட்டிச் சமைத்தார் பலதிசையும்
பொற்பூச் சொரிவாரும் பூமாரி பெய்வாரும்

2885 கற்பூர ஆலாத்தி காட்டி வந்து நிற்பாரும்
ஆலத்திக் காப்பும் அபூர்வமாம் பால் குடமும்
பாலித் திருபுறமும் பத்தியணி வாரும்
அவ்வீதி யெங்கும் அகில தலங்க ளெங்கும்
தெய்வாலயத் திலுள்ளோர் செச்செ யென வரவே

2890 கொட்டி முழக்க குளிர்சங்கம் நின் றூத
எத்திசையுஞ் சின்ன மெடுத்துப் பணி மாற
பதினெட்டு வாக்கியமும் பல்லியமுந்தான் முழங்க
அறுபத்தி னாலு கலக்கி யானமும் முழங்க
சரணம் சரணமென்று தராதலத் தோர்
கொண்டாட

2895 இயமன் திருநகரில் எங்கோன் எழுந்தருளி
தருமபுரத்து இமயதன்மர் முந்தி வந்து கண்டு
கதுமை பெறவே கை காணிக்கை கட்ட லுற்றார்
உடுகுறையுப் பாகுடங் களுள்ள தெல்லா முன்
வைத்து
அழகு திருவாளராகி அங்கங் கணி வகுத்து

2900 ஆலத்திக் காப்பிட் டபூருவ மெல்லாம் படைத்து
கோலக் கண களபங் குங்கும கஸ்தூரி செம்பொன்

---

பாலித்து - காப்பாற்றி; பாதாதி கேசம் - அடிமுதல் முடி வரை;
மகா தேவர் - சிவபெருமான்; ஆலித்து - தழுவி.

மாணிக்க முத்து வயிர வயிடூரிய வகை
காணிக்கை வைத்துப் பணிந்தா ரியமதர்மர்
செழுங்கனக ரத்தினமணிச் செம்பொன்னின்
முத்தாசனத்தே
2905 எழுந்தருளி வீற்றிருக்க வெங்கோவே
என்றுரைத்தார்
பொருது நவரத்தினஞ் செம்பொன் மணி
முத்தாசனத்தே
இருந் தருளுமென்ன இனிதாக வீற்றிருக்க
கித்திர புத்திரர் முன் சிங்கா தனத் தருகே
பொத்தகமுங் கொண்டுவந்து பொற்பலகைமீதில்
வைத்தார்
2910 இறந்த பிராணிக் கெல்லா மதுரமுகமாகு
மப்படியே
பறந்து திரியும் பறவாய விருகமதாய்
அந்தரத்தே நிற்கிற சீவாத்மாக் களத்தனையும்
சிந்தை யுறக் கண்டருளிச் சித்திரபுத்திரனார்
பொத்தகமும் பொன்னலகும் புண்ணியனார்
கைப்பிடித்து
2915 கட்டே டெடுத்துக் கயறுருவித் தோளிலிட்டு
செப்பே டெடுத்துத் திருக் கணக் கெல்லாம்
பார்த்து
தப்பாத சொல்லுடையான் தாமங்கே வாசித்தார்
தேசம் விளங்கத் திருக்கணக்கு வாசித்தார்
செங்கோல் விளங்கத் திருக்கணக்கு வாசித்தார்
2920 பூமி விளங்கப் புதுக் கணக்கு வாசித்தார்
பூலோகம் வாழப் புதுக் கணக்கு வாசித்தார்

---

**ஆதித்த பூசை - சூரிய வழிபாடு; ஆனைமுகன் - விநாயகன்; பதினாறும் - பதினாறு பேறுகள்.**

அவ்வேடு போட்டு மறுவேடு கைக் கொண்டார்
பொன்னே டெடுத்துப் புகழ்சேர வாசித்தார்
நல்லார் கணக்கும் நடுவெழுதி வாசித்தார்

2925 பொல்லார் கணக்கும் புறம் பெழுதி வாசித்தார்
எல்லார் கணக்கும் எடுத் தெழுதி வாசித்தார்
ஈயாதார் தன் கணக்கை ஏட்டடைவே வாசித்தார்
பலபேர் கணக்கும் பாதகமுங் தான் பார்த்து
பாதகருக் கவ்வடவே பாரபத்தியம் வகுத்தார்

2930 கார்த்திகை மாதம் அடைமழையில் செல்வதற்
கோ
பாயக் கிடைத்தானு மிடமில்லை யெனும்
பாதகரை
எண் சாண் விறகில் லெரி சேரும் நோயுடலை
மண் தான் சதம் போலிருந் திடுவன் பாவிகளை
மண்ணோடே தான் மடிந்து மண்ணுண்டு
போகவென்று

2935 அன்றோர் கணக்கி லறுதி யிட்டா ரத்தியர் கோன்
கோவில் குளம் நந்தவனம் போந்து குலைகாமம்
வைகி
தாய ரொடு தந்தை தான் பசிக்க உண்பவரை
ஆயமணியங்க ளறக் கொடுமை செய்பவரை
காயம் புழுக்கக் கடுநரகில் தள்ளு மென்றார்

2940 ஏழையடியார்க் கிடும்பை செய்யும் பாவிகளை
கேள்வி முறையில்லாத கெம்பீர மன்னவரை
கோயிலுடைமை கொடு போய் பொசிப்பவரை

---

இந்திரபதம் - இந்திரப் பதவி; ஆலத்தி - சுற்றிக் காட்டல்;
மூப்பி மார் - வயது முதிர்ந்தோர்; சாலகம் - கால் அதர், காற்று வரும் வழி.

தாயை யடிப்பவரைத் தந்தை தன்னை வைபவரை
வாயில் புழுத்து வயிற்றல் புழுச் சொரிய

2945 அப்பாவி யேடு அறவெழுதிப் போட்டதற்பின்
மற்றேடு தானெடுத்து வாசித்தார் வாழ்வேந்தர்
வந்த விருந்து தனை வாசல் புறம்பு வைத்து
வெந்த திருக்க வெறுந்தண்ணீர்தான் கொடுத்தார்
அந்த அரும்பாவிகளை அப்பாலே கொண்டு சென்று

2950 செம்பையற வுருக்கிச் சென்னியின்மேல்
வார்த்துடலில்
தும்பிகளை விட்டுத் தொலையு மென்று ருத்தமரை
பின்புமொரு ஏடெடுத்துப் போடவே வாசித்தார்
பேராளர் தன்கணக்குப் பின்னு முன்னுந்தள்ளு
மென்றார்
அந்தி படுகையிலே ஆதித்தன் சாயலிலே

2955 கொந்தளகப் பாரமயிர் முடிவிட்டுக் கோதி
கூந்தல் விரித்து தறிக் கூளமயிர் தான் களைந்து
வீழ்ந்திடுமா மையர் விளங்குந் திருக் கலத்தில்
அந்தமயிர் வீழ்ந் தொருவர் அன்றிரவு
பட்டினியாய்
சந்தியன்றிப் பூசையன்றி தன்மம் செய்யு
மென்றிருந்தார்

2960 அரிய வயிறு எரி செய்த அரும்பாவிகளை
எரிவாய் நரகுக் கிரையாயிடுவ தென்ன
கயிறது கொண்டு கடிநாய்கள் விட்டுசுப்பி
மயிரி கழியில் வைத்திழுத்து மாநரகிற்றள்ளு
மென்றார்
அப்பாவி ஏடு அறவெழுதிப் போட்டதற்பின்

---

**கிடாரம் - நீர் வைக்கும் பாத்திரம்; அமராபதி - அமராபதியின் ஓதுகினும் - படித்தாலும்; பெண்மதி - பெண்பித்து தலைவன்'**

2965 மற்றுமொரு ஏடெடுத்து வாசித்தார் வாழ்வேந்தர்
தன்மம் தவம் பொறுமை சத்தியமே நத்தாரை
முன்னென்றும் பின்னென்றும் மோசவகை
சொல்வாரை
இல்லாது சொல்வாரை ஈயாரைத் தீயாரை
கல்லாத புல்லர்களைக் கற்பாவி லோபிகளை

2970 கட்டாக் கொடியோர் கசடரு லோபிகளை
துட்டக் கபடர்களை துர்ச்சன சண்டாளிகளை
கன்மச் சண்டாளர்களை காறகொடுலுத்தர்களை
துன்மிருகமாய் வகுத்து தொல்லைவினை மூளவைத்து
அம்மியிலே தானிட்டரைத்து வழித்துச் சேர்த்து

2975 கிண்ணியிலே தான் கரைத்து கீழ்நரகில் தள்ளு
மென்றார்
அப்பாவி ஏடு அறவெழுதிப்போட்டதற் பின்
மற்றேடு எடுத்து வாசித்தார் வாழ்வேந்தர்
பூனைவளர்த்தோர் புதுமைதனைப் பார்த்தளவில்
சோறுகஞ்சி ஈயார் துரத்தியடித்தோடி நிற்பார்

2980 பூனை யறியாதே பாலைக் குடித்த தென்று
கூடியடித்தே யிழுத்துக் கொன்ற கொடும்பாவிகளை
ஏழு பிராமணரைக் கொன்ற பழி ஈந்ததற்பின்
வீழும் நரகிலென்று வேறே யோர் ஏடெடுத்தார்
ஆசாரி யாளை அரியோர் பெரியோரை

2985 கூசாமல் கொல்பவரைக் குண்டையுட ன்
சேர்ப்பவரை
மானிடற் கீனமா வழிவு செய்பவரை

---

**சந்ததமும் - நாள் தோறும்; சிறுக்கி - குறுக்கி; செகதலத்தோர் - உலக மக்கள்; வதை செய்தவர் - கொலை செய்தவர்;**

ஈனர்களா சென்மித் தெழுநரகில் தள்ளு மென்றூர்
அட்டூழிக் காரர்களை ஆசார மீனர்களை
இட்டாரைப் பட்டாங்கு சொல்லு மிடும்பர்களை

2990 மிண்டு பண்ணி வாழ்பவரை வேசி மனை சேர்பவரை
பெண்டுகளை வைத்துப்பிறர் தாரஞ் சேர்பவரை
மொண்டா துரோகிகளை மோடர்களை வேடர்களை
கொண்ட கடன் வேலை செய்த கூலிகொட
வீணர்களை
வட்டிக்கு வட்டியிட்டு வாங்கு மாபாதகரை

2995 கட்டி யடியு மென்றூர் காட்சிப் பிடுங்கு மென்றூர்
வெட்டிக் கழுவேற்றி வெயிலிலே வையு மென்றூர்
அட்டைக் குழியி லமுத்து மென்றூர் அண்டர்
பிரான்
அறுத்துத் தெறியுமென்றூர் ஆழ்நரகில்
தள்ளுமென்றூர்
மற்றுமொரு ஏடெடுத்து வாசித்தார் வாழ்வேந்தர்

3000 முட்டிக்கு வந்தவரை நோமைகள் சொல்பவரை
பிச்சைக்கு வந்தவரை பின்னை வா வென்பவரை
அய்ய மென்று வந்தா லடித்துத் துரத்துவரை
தள்ளிக் கதவடைத்துத் தாள்பூட்டி நிற்பவரை
இடுவா ரருகிருந்து ஏடுதங்கள் சொல்பவரை

3005 கொடுப்பா ரருகிருந்து குற்றங்கள் சொல்பவரை
சொல்லாத சொல்வோரைக் சூதாட்டம்
செய்வோரை
இல்லாத பொல்லாப்பை இட்டு முடிப்போரை

---

**வேசியர் - இருமனப் பெண்டிர்; குலமாது - கற்புடைப் பெண்; ஆலம் - விஷயம்; ஆத்தானம் - கச்சேரி;**

பெண்ணோரம் மண்ணோரம் பெண்பாவங்
கொள்பவரை
கண்ணாரக் காணக்கடும் பிழைகள் சொல்பவரை

3010 கேளாச் செவி தனிலே மூளாத் தீயிட்டோரை
காணப் பிணமாய் கழுகு நரி நாய் பொசிக்க
ஊண யுடல் புழுத்து ஊத்தைப் பிணநாறி
எழா நரகத்தில் கீழாகத் தள்ளு மென்றார்
அப்பாவி ஏடு அறவெழுதிப் போட்டதற்பின்

3015 மற்றேடெடுத்து வாசித்தார் வாழ்வேந்தர்
மாயமாம் ஞாலம் மறுமாய வித்தை கற்றோர்
நோயல்லா நோய் செய்தார் நோன்பு விரதந்
தவிர்த்தார்
பில்லியும் சூனியமும் பேயும் பிசாசும் விட்டோர்
கொள்ளை கொலைகாரர்களை கொள்ளைபறி
பாதகரை

3020 கள்ளுண்டு காலை களவு காம நிந்தை சொல்பவரை
கொள்ளா வியாதி குறைநோய் குட்டம் பிடித்து
சென்ம பரியந்த மட்டும் தீராவியாதி கொண்டு
கன்ம வினை பூண்டு கழுத்தோடே கை பூண்டு
கழுவாப் பிணமாகக் கட்டுடலைப் பட்டழிக்க

3025 எழுவா நரகுக் கிரையாகத் தள்ளுமென்றார்
அப்பாவியேடு அறவெழுதிப் போட்டதற்பின்
மற்று மொரு ஏடெடுத்து வாசித்தார் வாழ்
வேந்தன்
சித்து வித்தை கற்பவரைச் செய்யாது செய்பவரை
பத்தி முத்தியில்லாத பஞ்சமாப் பாதகரை

---

**காவாலி - கயவர்கள்; கடுந்தோஷகாலிகள் - பெரும்பாவிகள்; இல் - வீடு; எல்லைக்கல் - எல்லைகாட்டும் கல்;**

3030 தெய்வ தாயம் பிரமதாயம் சிதைத்தவரை
பொய்வசனஞ் சொல்வாரைப் புத்தியற்ற
கள்வர்களை
வம்பர் மறு மாயக் காரர் மருந்தர்களை
கும்பிடு கள்வர்களைக் குழைத்திடு கள்வர்களை
அழு கள்ளர் தொழு கள்ளர் ஆசாரக் கள்ளர்களை
3035 கழுகும் பறந்து கருங் காகமுமாய்ச் சென்மி
யென்றார்
பெண்சாதி சொற்கேட்டு பேதகமே செய்பவரை
தந்தை தாய் மிக்கோர் சகோதரத்தை வைபவரை
வம்புக்கு மாரேற்றுக் கொள்ளும் வரடர்களை
அன்பற்ற பாவிகளை அக்கிரமக் காரர்களை
3040 தன் புத்தி தானறியாச் சண்டாள லோபிகளை
பெண்புத்தி கேட்பவரைப் பேயாய்ச் செனியு
மென்றார்
நெல்லிற் பதர் கலந்தோர் நீள்கூலிக் கால்
குறைத்தோர்
அல்லும் பகலும் அகவிலைதான் குறைத்தோர்
உண்மை மறுத்தோர் உதாசீன தூஷணரை
3045 பெருவயிறு கொண்டு பின்னு முன் னடையு
மென்றார்
பிதாவை இகழ்ந்தோர் புலாலுகந்துரன் தின்பவரை
உவா விறுத காலத்தில் ஒண்ணுதல் பால்
சேர்பவரை
எண்ணெயிட்டுப்பல புள் கறி ஏற்றுக் கொள்பவரை

---

பர்த்தா - கணவன்; தீத்தினர் - சுத்தப்படுத்தியவர்;
ஆயத்துறை - சுங்கத்துறை; செல்லாதார் - அதிகாரம்
ஆவேசமாக - கோபமாக; செல்லாதவர்;

பன்றி யெனச் சென்மித்துப் பாழ்நரகில் தள்ளு
மென்றார்

3050 புது வாய்க்கால் வெட்டிப் பழவாய்க்கால்
தூர்ப்பவரை
கதி மோடர் தம்மைக் கெடுநரகில் தள்ளுமென்றார்
ஆயத் துறையிலிருந் தனியாயஞ் செய்பவரை
ஈயத்தைக் காச்சி இரையு மென்று ரெம்பெருமாள்
நம்பி வந்து சேர்ந்தவர்க்கு நடுக்கஞ்
செய்பாவிகளை

3055 தும்பிகளைவிட்டுத் தொலையு மென்றார் துய்யபிரான்
விருந் திருக்க உண்டவரை வேதியர் சோரங்
கொண்டவரை
அரிந் தரிந்து நின்றிடுங் கொள் ளென்று
ரமரர்பிரான்
பற் கொம்பிடு மிடத்தில் நடந்து வந்த பாவிகளை
செக்கிலே போட்டுத் திரியு மென்றார் தேவேந்தர்

3060 நந்தவனம் கோயில் குளம் நாணழிவு செய்பவரை
சந்து சந்தாய் பேர்த்தெடுத்து சந்தி தொறும்
வையுமென்றார்
செத்த பிணங்கிடக்கச்சென்று சோறுண்பவரை
குத்தி யமுக்கிக் குடல் பிடுங்கிப் போடு
மென்றார்
காலத்தாற் சொங்களுக்குக் கையாசைப் பட்டரரை

3065 சூலத் தால் குத்தி வெட்டிச் சுட்டுப் பொசுக்கு
மென்றார்
கன்ம வினை சூது கவடு செய்யும் பாவிகளை

---

**கீழ்க் கன்று - அடிக் கன்று; பாலடிசில் - பரற்சோறு;**
**அமுது பொலிந்தார் - உணவுண்டனர்; செய்ய - சிவந்த;**

அம்மியிலே யிட்டு அரையு மென்று ரத்துரார்
கோன்
அடித்துப் பறித்து அநியாயஞ் செய்பவரை
அறுத்துத் தெரித்து அணுக் குலையப் பாரு
மென்றார்

3070 பெண்ணைப் புறம் பேசிப் பெண் பாவங்
கொல்பவரை
வண்ணக் கழுவிலே வாகுபெற வையு மென்றார்
பாலகனை ந் பால்பசுவைப் பார்ப்பாரைக்
கொல்பவரை
காலன் விறுமாற்றிக் கைப்பற்றிக் கொள்ளு
மென்றார்
கன்றுக்குப் பாலறவேகட்டிக் கறப்பவரை
3075 பொன்றிப் பொடியாய்ப் பொருக் கெழுந்து போக
வென்றார்
பட்டிக்கு விட்டுப் பசும்படைக்கும் பாவிகளை
அட்டைக் குழியி லமிழ்த்து மென்று ரத்தியர்கோன்
குடிமக்கள் செய் தொழில் கூலி கொடாதவரை
அடிமைத் தொழிலாய் அவர்க்குப் போய்ச்
செய்யுமென்றார்

3080 இட்டபடி பொழிந்து ஏருசைப் பட்டவரை
பட்ட மரமாக நில்லுமென்றார் பார் வேந்தர்
பிச்சை முட்டி அய்யமின்றிப் பேசாம லுண்பவரை
நச்சு மரமாக நில்லு மென்றார் நாயகனார்
கையார வாங்கிவிட்டு கைக் குத்தாய் நின்றவரை
3085 பொய்யாணையிட்டவரைப் பொற்குழியில் பாய்ச்சு
மென்றார்
கண்ணேறு பட்டவரைக் கண்ணழிவு சொல்பவரை

---

**வீரியர் - வீரமுடையவர்; பழுக்காய் - பாக்கு; கமுகு - பாக்கு;**

புண்ணோடு வேதனையைப் போவுழையுமென்றார்
நாவேறு ஞவுழலே நஞ்சுடைமை செய்பவரை
பாழ்வா யுரைப்பவரை பட்சியாய் சென்மி
யென்றார்

3090 செய்யாக் கருமங்கள் செய்த அரும்பாவிகளை
பொய்யாயப் பாய வண்டாய்ப் புழுவாய்ச்
செனியுமென்றார்
கோயிலுடைமை தனைக் கொள்ளவு தின்பவரை
நாயின் வயிற்றில் செனியு சென்றார் நாயனார்
தன்கடமை நீக்கிப் பிறர் கட மை வாங்குவரை

3095 சண்குருடாக் கழுதையாய்ச் சென்மி யென்றார்
சிவத்துரோகி குருத்துரோகி சென்மத் துரோகிகளை
சாமத் துரோகிகளைச் சன்னபின்னலாயறிந்து
எரிக்கிற கட்டியிலெரி யெழவே தானெரித்து
கருக்கிப் புழுக்கிக் கடுநரகில் தள்ளு மென்றார்

3100 அப்பாவி ஏடு அற எழுதிப் போட்டதற்பின்
மற்றேடெடுத் தருளி வாசித்தார் வாழ்வேந்தன்
தெள்ளு புனலாற்றில் திருக்குளத்தில் பொய்கை
தன்னில்
உள்ளுடை யில்லாமல் குளித்திடும் ஊதாரிகளை
அர்ப்ப சலம் பண்ணி அடிக்கழுவா லோபிகளை

3105 துறப்பாவு சுற்றந்தனை யழியுந் தூவைகளை
கட்டிச் சமணர் கையில் காட்டிக் கொடுத்தடித்து
அட்டைக் குழியிலழுத்து மென்றாரத்துயர் கோன்
கர்ப்பம் மனைவாழ்வு கிணறழிவு செயபவரை
கற்புடைமையில்லாத காமரவு தாரிகளை

---

மணிக் கச்சு - அழகிய சட்டை; மாவுத்தர் - பாகர்;
அயிராவதம் - இந்திரனின் யானை; கம்பம் - மதநீர்ப் பெருக்கு;
பணி - ஆபரணங்கள்; பூஷணம் - ஆபரணம்;

3110 திரியா யுருபமுந் திண்டுமுண்டுஞ் செய்பவரை
எறியா நரகுக் கிரையாகத் தள்ளு மென்றார்
ஏசலுந் திட்டும் வசவும் இடும்புகளும்
பூசலுமில்லாது பொல்லாது சொல்பவரை
கண்டால் முறை சொல்லிக் காணுட்டால் பேர்
சொல்லி

3115 சண்டாளிகளைச் சலகுவாய் வீணிகளை
வீணிகளை வம்பிகளை வெட்கமில்லா லோபிகளை
மானீபமுங்கற்பும்உறவுமில்லா மாரிகளும்
மிண்டாட்ட மான விஷமிகளைக் கள்ளிகளை
வண்டாய்ப் புழுவாய் வலுநரகில் தள்ளுமென்றார்

3120 எச்சிலுந் தீட்டும் துடக்கு மிகழ் முகடிகளை
முச்சிலியச்ச மறியா மூதேவிகளை
கற் சுன காரிகளைச் சொல்லொடு பாவிகளை
அச்ச மறியா வடை வறியாப் பாவிகளை
பிள்ளை யழிப் போரைப் பிணங்கிடக்க
வுண்டோரை

3125 கள்ளிகளை யெல்லாங் கடுநரகில் தள்ளுமென்றார்
நஞ்சு மருந்தோதியிட்டு நாடோறும் ஏசல் செய்து
பஞ்ச மாப்பாதகி வன்பாதகியுட் பாதகியை
பாதகியைத் தோதகியைப்பாவியை மூதேவிகளை
சாதியறியாத தயவறியாச் சண்டிகளை

3130 சண்டிகளை வண்டிகளைச் சாமத் துரோகிகளை
மிண்டுமதங் கோபம் விஷமளிக்கும் சூதிகளை
கோபிகளை லோபிகளைக் கும்மாயக் காரிகளை

---

**அட்சரம் - எழுத்து; முதலிகள் - படைத் தலைவர்கள்;**
**தாமம் - மாலை; போற்றி - வாழ்க;**
**வெள்ளானை - இந்திரனது வெண்ணிற ஐராவத யானை.**

பாவிகளை யெல்லாம்படிநரகில் தள்ளுமென்றார்
தீதுவினைசூது திண்டுமுண்டு செய்பவரை

3135 நீதி நெறி முறைமை யில்லா நிர்மூடர்களை
பேதகங்கள் செய்பவரை பிள்ளை வதை
செய்பவரை
பாதகங்கள் செய்பவரைப் பாழ் நரகில்
தள்ளுமென்றார்
அப்பாவி ஏடு அறவெழுதிப் போட்டதற்பின்
மற்றே டெடுத் தருளி வாசித்தார் வாழ்வேந்தர்

3140 பிணத்தில் நகைப்பவரைப் பேதகங்கள்
செய்பவரை
மணத்தில் வெறுப்பவரை வாழ்வளித்து
வாழ்பவரை
வாழ்ந்தாரை வாழ்வளிக்கும் மாமாயக் கள்ளிகளை
காந்தாரிகளை கழுவனை நெய் ஊத்திகளை
இல்லிடு கள்ளிகளை எக்கு சிக்கு கில்லாளை

3145 கல்லு மரமு முள்ளுங் கள்ளியுமாய்ச் சென்மி
யென்றார்
நாய் பன்றி கோழி வளர்த்தோர் நல்லூன் மிகு
பொசித்தோர்
தாய் தந்தை சொல் மருத்தார் தனி மரமாய்
நில்லுமென்றார்
மிண்டர்களை யெல்லாம் விறகா யெரியு மென்றார்
குண்டணிகளை யெல்லாங் கொசுவாய்ச் செனியு
மென்றார்

---

**இருஷிகள் - இருடிகள், முனிவர்கள்;**
**ஈரேழு உலகம் - பதினான்கு உலகம்; மையாழி - கருங்கடல்;**
**தார்வேந்தர் - மாலையணிந்த மன்னர்கள்;**

3150 பெற்றோர் பிறந்தாரைப் பேதகங்கள் சொல்பவரை
சிற்றெறும்பாய் அந்தாய்ச் சிதளாய்ச் செனியு
மென்றார்
கொண்டவனைப் பேணாமல் கூசாமல் நாணாமல்
பெண்களை நாயகமாய்ப் பெண் மூப்படிப்பவரை
ஈனு விருசிகளை இட்டுண்ணு மோடிகளை

3155 பேய் நாயாய் பெய் நரியாய் பேய் வெருகாய்ச்
சென்மி என்றார்
கண்டாசை கொள்பவரைக் கணமாயஞ்
செய்பவரை
உண்டாயிருக்கையிலே இல்லையெனச் சொல்பவரை
இல்லாப் பாழ்சொல்லி எதிரே நடப்பவரை
தள்ளிக் கதவடைத்துத் தாள்பூட்டி நிற்பவரை

3160 அந்திக்கு முன்னே அடைத்துத் தாளிட்டவரை
மந்திக் குரங்காய் மரநாயாய்பூச்சி பொட்டாய்
ஓநாய் கழுதையாய் ஓரியாய்ச் சென்மி யென்றார்
மன்னர் பெருமான் மறுவேடு வாசித்தார்
பிள்ளை யொருபாவி பிச்சையிட்ட நோக்கேளீர்

3165 அடக்கிய பாக்கு மிடுக்கியவெற்றிலையும்
இடக்கையிலே அய்யமுமா யிட்டா ளொருபாவி
பிச்சை யிட்ட நன்மை நன்றி பெண் ணுருத்தல்
லியனாய்
அச்ச முற்ற கானகத்தில் ஆனையாய்ச் சென்மி
யென்றார்
கொல்லி கொடுமை வினை குண்டணி பொய்
சொல்பவரை

---

**அடல் சேனை - பிறரைக் கொல்லும் ஆற்றல் மிக்க படை;**
**நித்திலம் - முத்துக்கள்; சத்த சமுத்திரம் - ஏழுகடல்;**
**லோகம் - உலகம் என்பதின் திரிபு; சப்த என்பதின் திரிபு;**

3170 பல்லி எலி அரணை பச்சோந்தியாய் வகுத்தார
குத்திரம் பொய் பாவ மிகுத்த கொடும்பாவிகளை
நத்தை நண்டுமீன் தவளை நாகறவண்டா வகுத்தார்
காசு பண மென்றளவில் கணமாயஞ் செய்பவரை
வேசிகளை நாற்கால் மிருக மாயேவகுத்தார்

3175 நாலிரண்டு சொல்பவரை நன்றி மறந்தோரை
பாவிகளை எல்லாம் பறவையாய்த் தான் வகுத்தார்
பர்த்தாவை வைபவரை பட்சியாய்த் தான் வகுத்தார்
உற்றுரை வைபவரை ஊறவண்டாய்த் தான் வகுத்தார்
கொலைப் பறத்திகளைக் குடிகேடிகளை யெல்லாம்

3180 அலையாத வானரமா அலையுமென்றார் ரத்தியர் கோன்
பல விருகமாய் யூர்வனவாய் பறப்பனவாம்
தொல்லை யெழு பிறப்புஞ் சுற்றித் திரியு மென்றார்
கையார வாயாரக் கண்ணாரக் காதாரச்
செய்தோரும் நல்வினையும் தீவினையுஞ் சூழு மென்றார்

3185 காதினால் கேட்ட தெல்லாங்காதேயனுபவிக்கும்
கண்ணாரக் கண்டதெல்லாம் கண்ணே அநுபவிக்கும்
வாயினாற் போந்த தெல்லாம் வாயே அநுபவிக்கும்
மனதினா லுற்ற தெல்லாம் வஞ்சவினை மூளுவிக்கும்
நாவினாற் சொன்ன தெல்லாம் நாவே அநுபவிக்கும்

---

சுத்து - சுற்று என்பதன் திரிபு.
வேதவிதி - வேதத்தில் கூறும் விதித்தன செய்தல், விலக்கியன ஒழித்தல்;
அகரம் - குடியிருப்புக்கள்;
நவகோடி - ஒன்பது கோடி; சங்கரியும் - அழித்து விடுக;

3190 நல்வினையுந் தீவினையும் ரெண்டும் நிறையாகி
நிற்கும்
நன்மை செய்ய நன்மை யுறுந்தின்மை செய்யத்
தின்மையுறும்
நாளு வுயிர்த் தொழிலுங் கணக்கின் செய்தி
யென்று
கன்மங்கள் பார்த்துக் கணக்கறுப்புச் செய்தபின்பு
தன்மங்கள் பார்த்துத் தவங்கொடுப்பார் தார்
வேந்தர்

3195 ஆறு தொழி லந்தணர்கள் ஆசாரிகள் அரசர்
தேறு தொழில் முறைமை செங்கோல் வழுவாதார்
நீறு நியமபதம் நேசமுற வுத்தனிலோர்
ஏறு கயிலாய மீதென்று ரெம்பெருமாள்
சன்னாசிகளே தபோதனரே பூசுரரே

3200 மெய்ஞானிகளே விரதநெட்டியுற்றோரே
சரியை கிரியைத் தவஞான யோகிகளே
அரிய பெரியவரே அய்யர்பதஞ் சேருமென்றும்
பொய்யுரையா மெய்யரே பூபாலராதிபரே
மாதவரே வேதவரே மாமுனிவரே மறைநூல்

3205 வேதியரே நீரும் விமலர்பதஞ் சேருமென்றார்
பூதானம் கோதானம் பூமிதானம் வேள்வி
மாதானம் செய்தவரே வைகுண்டஞ் சேருமென்றார்
சதவச மளித்தவர்கள் தெய்வபதஞ் சேருமென்றார்
இஷ்டம் பொறுத்தார்கள் ஈசர்பதஞ் சேருமென்றார்

---

**வேளாளர் என்பது வெள்ளாளர் எனத் திரிந்தது;**
**கன்னல் முத்து - கரும்பில் தோன்றும் முத்து;**
**செந்நெல் முத்து - செந்நெல்லில் தோன்றும் முத்து;**
**பஞ்சகலி - வறுமைத்துன்பம்; காராளர் - வேளாளர்;**

3210 முழுக எண்ணெய் வார்த்தவரே முகத்தை
என்றே தேய்த்தவரே
கழுக்குன்ற நாதர் கமலபதஞ் சேருமென்றார்
சைவ புராணஞ் சகலகலை நோற்றோரே
வைகுந்த நாதன் மலர்ப்பாதஞ் சேருமென்றார்
தன்ம மறச்சாலை மடஞ்சாத்திரமுந் தான் வகுத்தார்

3215 பொன்பணி முத்தாடை செம்பொன் பூணூநூல்
பூட்டுவித்தோர்
கன்னிகா தானங்கனகத் தானங் கொடுத்தோர்
அன்ன தானங் கொடுத்தோர் அன்பால் அறம்
வளர்த்தோர்
உத்தம தானம் ஒரு செம்பொற் காசளித்தோர்
வஸ்திரதாளம் மனைபூமி தானளித்தோர்

3220 அன்னங் கொடுத்தோர் அரிசி கறிகாய்
கொடுத்தோர்
சொர்ணங் கொடுத்தவரே சொர்க்க லோகஞ்
சேரு மென்றார்
சிவபூசை குருபூசை மகேஸ்வரர்தன்பூசை
அபிஷேகப் பிரதிஷ்டை அந்தரியர் பூசைகளும்
தீர்த்த விசேடத் திருமஞ்சனக் குளமும்

3225 பூந்தாமரைத் தடமும் பூங்காவும் நீழல்களும்
ஆறும் புனலும் அடவிகளும் பொய்கைகளும்
தேருந் திருநாளுந் தேவர் திருவீதிகளும்
தேவாலயமும் திருக் கோவில் கோபுரமும்
வைபோக மாக மனுநீதியும் புரிந்தோர்

3230 சிவகாரியத்தைச் சிதறாமற் செய்தருள்வோர்
அவகாலப் பஞ்சத்தி லன்னம் பகிர்ந்தருள் வோர்

---

**வண்மை - வள்ளல்தன்மை; பாதகம் - பாவச்செயல்;**
**தலைசாய்தல் - பூமியில் படுதல்; அதிபிழை - மிகுதியான தவறு**
**பாசம் - பற்று, கயிறு.**

கிளை வாழ வாழும் கெதி மோட்சம் பெறும்
பேறும்
இவை நாழிகாலம் இறைவர் பதஞ் சேரு மென்றார்
நந்த வனம் சால்கரகம் நல்ல தண்ணீர்ப்பந்தல்
வைத்தார்

3235 தந்தையும் தாயும் குருவும் தெய்வமும் சான்ருய்
நினைந்தோர்
நீதிநெறி தவரு நெஞ்ச முற்ரோர் வஞ்ச முற்ரோர்
ஆதி குருநாதர் அன்புபெற்று வாழுமென்பார்
அன்பும் அறமும் அறிவும் பொறையும் உள்ளோர்
பண்பினுடனே பரகதிகள் சேரு மென்ருர்

3240 பஞ்சாட் சரத்தைப் பலகாலஞ் செபித்தருள்வோர்
அஞ்செழுத்தை ஓதிடு வோ ரய்யர் பதஞ் சேரு
மென்ருர்
தீர்த்தம் புகழ்வோர் திருவிழாச் சேவை செய்தோர்
போற்றரிய புண்டரிகப் பொற்பாதஞ் சேரு
மென்ருர்
ஏழை எளியார்க் கிரங்கி மனம் பொறுப்போர்

3245 பாடி பரதேசிப் பஞ்சை கலி தீர்த்தருள்வோர்
பஞ்சகலி தீர்த்தோர் பாரத் தறங்கள் செய்தோர்
தஞ்ச மென்று வந்தவரைத் தாபரித்துக்
காத்தருள்வோர்
அன்னப்பால் வார்த்தவர்கள் ஆன பிணி
தீர்த்தவர்கள்
பிள்ளைப் பால் வார்த்து பிள்ளைத் தாகம் தீர்த்தோர்

---

**வாய்மதம் - வாயால் தருக்குற்றுப்பேசும் பேச்சு;**
**சாவி - அவிந்துஅழிந்து போதல்; நாழி - படி; நீலி - வஞ்சகி;**
**பாவகன்ம தோஷம் - பாவ கருமச் செயல்கள்;**

3250 உண்கிற சோற்றில் குடிக்கிற கஞ்சிகளில்
திண்கிற பாக்கில் பகிர்ந்து கொடுத்தவர்கள்
கீர்த்தியு மன்பும் புகழுங் கிருபையுள்ளோர்
தேகத்தை மற்று திடுவோர் நடுவுரைப்போர்
நன்றி நனையுரைத்தோர் நன்மை செய்தோர் தீ
திகழ்வோர்

3255 திண்ணமுடனே சிவலோகஞ் சேரு மென்றார்
அய்ய ரருள் பதமும் அன்பாக மோட்ச மதும்
துய்ய கயிலை சொர்க்கஞ் சூழ் பரகதியும்
வானுலகில் வாழ்வும் கிழ விடையம் பொறியும்
ஆன வரம் பெரும் அநுபோக போக்கியமும்

3260 மீண்டும் பிறப்போர்க்கு வேண்டுந் தவப்பொருளும்
வேண்டுவோர் வேண்டும் வரமு மிக வருளி
ஈண்டுலகி லேகி யினி தூழி வாழு மென்றார்
வட்டமறச் சென்மித்து மாநகரில் வந்தருள்வோர்
கேட்டவரமெல்லாங் கொடுத்தோர் கிருபையுடன்

3265 எல்லையற்ற சென்மம் எடுக்கினும் யாவருக்கும்
நல்லவர்க்கு நல்லனவுந் தீயவர்க்குத் தீயனவும்
நன்மை நினைப்போர்க்கு நல்லதவப் பொருளும்
தின்மை நினைப் போர்க்கு தீவினையப் பொருளும்
இன்மை வறுமை எழு பிறப்புஞ் சூழ்ந்த ருளும்

3270, தின்மை செய்ய தின்மையுறும் நன்மைசெய்ய
நன்மையுறும்
சித்திர புத்திரர் தன் செல்வ மிக வுண்டாகும்
சிவாயநம வென்றவர்க்குத் தீராவினை தீரும்

---

**அந்தரி - உமாதேவி; மாதேவர் - சிவபிரான்; பரதேசி - ஏற்போர்; தாழி - குடம்; துன்று குழல் - நீண்ட நெருங்கி அடர்ந்து வளர்ந்த கூந்தல்**

தப்பாது தப்பாது தன்மஞ் செய மாக்கிவரும்
எப்போதும்நன் கணக்கில் ஏருது தாழாது

3275 பாவ முறப் பண்பும் பலனுளதும் பார்த்திடுவோர்
மேவு நிலம் பூண்டும் விலங்குடன் புள்ளூர்வனவும்
ஏழேழு செல்வமும் எடுக்கும் எழுபிறப்பும்
தாழாது பேரறிவும் தன்மஞ்செய் மானிடரும்
இடங்கை வலங்கை ரெண்டுவகைச் சாதிகளும்

3280 அடங்கலுஞ் சென்மித்தருளென்று ரண்டர்பிரான்
அருந்தவசு செய் தருள்வோர் ஆணுருவாய்ச்
சென்மி யென்றூர்
பெரும் பாவம் செய்யுமவர் பெண்ணுருவாய்ச்
சென்மியென்றூர்
சென்று சென்று 'சென்மியுங்கோள் சீவாத்துமாக்க
ளென்று
புண்ணியனுர் சொற்படியே போய்போய்ச்
செனிக்கலுற்றூர்

3285 சேனைபலவகையுந் சிருஷ்டித்தார் நான்முகனுர்
ஆமென்ற செசனர் களப்போது சென்மமென்றூர்
தேவேந்திரன் பதியில் தெய்வரம்பை தானெருத்தி
மாவேந்திரிதன் பொருட்டால் மான முற்றுள்
இயம லோகஞ் சென்று இயமன் திருவருளால்

3290 அமரர்பதி யென்றவனியுள்ளோர் வந்துதித்தார்
தெய்வரம்பை வந்துதித்தார் தேசமெங்குந்
தான் தழைக்க
வையகமுஞ் செங்கோலும் வாழ்வுங்கிளர்ந் தோங்க
காசினியோர் மெச்சக் கதித்த கனபவுசாய்

---

**ஆழி - படி; சிறப்பு - சிறப்பான பூசை வேள்வி;**
**தலவாசம் - திருத்தலயாத்திரை; சந்தி - விரதம்;**
**காதங்கள் - பல்காததூரங்கள்; சீமைகள் - நாடுகள்;**

தேசிகர் கொள்வாழ் மனையில் தேன்மொழியாள்
வீற்றிருந்தாள்

3295 ஆன்ற அமராபதியார் அன்புபொறை நீதியுடன்
தானதவம் தன்ம நெறி தப்பாமல் செய்யலுற்ருர்
அப்போதவன் செய்தறமும் பெருந்தவமும்
செப்பேட்டினுள் பதித்தார் சித்திர புத்திரனுர்
பழுது படாச் செப்பேட்டில் பலகணக்குச் சேர்வை
செய்து

3300 எழுதியே தீயிலேத்திட்டாரே யெம்பெருமான்
எக்கணம் பார்த்து எடுத்தெழுழிச் செத்தபின்பு
பொற்கததேரேறிப் பொன்னுலகஞ் சேர்ந்து
புக்கார்
பானு வெனுங்கங்கை பகீரதி கோதாவரியும்
கான லெனு மலிந்தாள் கடல் நம்பிராட்டி நம்மை

3305 பாலித் திருபுறமும் பாற்குடங்கள் தாவிரைத்து
ஆலித்துறப் பணிந்தாளானந்த வாழ்மாரி
அன்று திருப்பாற் கடலில் அத்துயர் கோன்
புத்திரனுர்
சென்று திருமஞ்சனமாந் தீர்த்த முகந்தாடி
மாதா பிதாவை நினைந்தாடினுர் மாதீர்த்தம்

3310 மகாதேவர் தம்மை நினைந்தாடினுர் மாதீர்த்தம்
ஈரேழுலகை நினைந்தாடினுர் மாதீர்த்தம்
ஏழையெளி யாரை நினைந்தாடினுர் மாதீர்த்தம்
பாதாதி கேசம் நினைந்தாடினுர் மாதீர்த்தம்
பஞ்சாட்சரத்தை நினைந்தாடினுர் மாதீர்த்தம்

---

அண்டம் - உலகம்; ஏடு - நூல்; ஏந்திழை - சிறந்த ஆடையணிந்த மகளிர்

3315 பூலோக வாழ்வென்று ஆடினர் மாதீர்த்தம்
பூமி தழைத் தோங்க வென்று ஆடினர் மாதீர்த்தம்
நாத ரெல்லாம் வாழ்க வென்ருடினர் மாதீர்த்தம்
தன்மந் தழைத்தோங்க வென்ருடினர் மாதீர்த்தம்
மரதீர்த்த மாடி மயிர்முடித்துப் பின் போட்டு

3320 ஆதித்த பூசை யனுட்டானஞ் சந்தி பண்ணி
சத்தி சிவபூசை தர்ப்பணங்கள் தான்முடிந்து
சிந்தை மகிழ்ந்து திருநீற்றுக் காப்பணிந்து
ஆனை முகனை அறுமுகனைப் போற்றி செய்து
பூசனைகள் செய்தருளி புஷ்பவனமே போந்து

3325 மாதாவுக் கேற்ற மலரெடுத்துக் கைக்கொண்டு
மாதாவின் கோவில் வலமாக வந்து சென்று
மாதாவின் பாதமலர் தூவித் தெண்டனிட்டு
மாதாவு மைந்தர் தம்மை வாரி யெடுத் தணைத்து
வாயார வாழ்த்தி மனத்தே பிரிய முற்ருர்

3330 வாய்வீர் வளருவீர் வற்றிப் பீறுற்றரிப்பீர்
நிற்பீர் நிலத்தரிப்பீர் நீடூழி வாழ்ந்திருப்பீர்
கற்பதித்த தூண் போலக் கலங்கா தரசாள்வீர்
எல்லையற வாழ்ந்தருளி யல்லாசை யாண்டருளீர்
பாலகரைத் தானும் பதினறும் பெற்றருளீர்

3335 பதினறும் பெற்றுப் பெருவாழ்வும் வாழ்ந்திருப்பீர்
அமராபதிக்கு அரசான ஆண் பெறுவீர்
இந்திர பதத்துக்கு விளக்காகப் பெண் பெறுவீர்
என்னைப் பெறுவீர் இராசமுடி பெறுவீர்
பின்னைப் பெறுவீர் பெருவாழ்வு வாழ்ந்திருப்பீர்

---

**நோன்பு - விரதம்; காந்தாரி - வாழப் பொறுக்காதவள்;**
**சீர்கேடி - புகழை அழிப்பவள்; மனு - மக்கள்;**

3340 வாழ்ந்திருப்பீரென்று மனமகிழ்ந்து வாழ்த்தினர்
ஏகரந்தமாகி யிருந்தா ரெழுந்தருளி
எழுந்தருளி வீற்றிருந்த இந்திரனர் புத்திரற்கு
சோற்றுலே ஆலத்தித் தோகைமார் கொண்டு
வந்தார்
முத்தாலே ஆலத்தி மூப்பிமார் கொண்டு வந்தார்

3345 செம்பவழ ஆலத்திச் சேயிழைமார் கொண்டு
வந்தார்
தண்பனி நீராலத்தி தையல் நல்லார்கொண்டு
வந்தார்
கற்பூர ஆலத்திக் காரிழையார் கொண்டு வந்தார்
பொற்பூவால் ஆலத்திப் பூவைமார் கொண்டு
வந்தார்
ஆலத்திக் காப்பும் அழகாலாத்திக் காப்பும்

3350 பாலித்துச் சுற்றிப் பணிந்தார்கள் பைந்தொடிமார்
மணி முத்தின் சாலகத்தே மங்கைநல்லார்
போய்ப் புகுந்து
நிலமுத்தின் சாலகத்தே நீங்கியங்கே தாள் திறந்து
பூத்தநீர் விண்டநீர் பூவோடலை தருநீர்
வாய்த்த செழும்பனி நீர் மங்கை நல்லார்
தாமெடுத்தார்

3355 அம்பொன் தளிகை அடைவுடனே சாம்பலிட்டு
செம்பொன் கிடாரத்தே சேந்த நீர் பூரித்தார்
பொன்னின் கிடாரத்தே போத நீர் தானளித்தார்
வெள்ளிக் கிடாரத்தே வேண்டிய நீர் பூரித்தார்
போனக சாலையிலே பொற் கம்பளி விரித்தார்

---

**பூணநூல் - பூணூல்; கூறை - ஆடை; கலம் - உண்ணும் பாத்திரம்**
**சந்ததமும் - நாள்தோறும்; தன்மக்குடை - தருமக்குடை;**

3360 ஆசனங்களிட்டார் அமராபதி யார்க்கு
எழுந்தருளுமென்று இமையோரடி பணிந்தார்
புகுந்து திருமாளிகையில் புண்ணியனார்
வீற்றிருந்தார்
ஆனந்த மாரற்கமுது படைத்தருளி
வானவர் கோன் தேவியரும் மாதீர்த்த மாடிவந்து

3365 ஈனுத வாழை இளவாழைக் குருத்ததனில்
தானே யறுத்து வந்து தங்கக் கலத்தி லிட்டார்
பொற் கலத்திலிட்ட புதுக் குருத்தைப் பார்த்தருளி
இக் குருத்தைக் கொய்வதிது மகாப் பாதகங்காண்
தலைவாழையின் குருத்தைத் தானறிந்த பாதகங்
காண்

3370 கொலைபாதக மென் றெழுதினார் கொற்றவனார்
எழுதிய வாறு கண்டு இந்திராணி யாரும் வந்து
பழுதில்லாப் பத்தினி தான் பாலகரோடே
துரைப்பாள்
எண்ணறவே எண்ணி எழுதறவே யோதுகினும்
பெண் மதி யெல்லாம் பிழைவரும் பிள்ளாயே

3375 வந்த பிழை யேது மாதா பிதா வினுக்காய்
சந்ததமுங் கொண்டு பொருந்தப்பாத வாசகரே
அறியாமல் செய்த பிழை அத்தனையும் தான்
பொறுக்க
பொறி காணு முங்களுக்குப் பூமேவு புண்ணியரே
மலையத்தனை பாவம் செய்வார்கள் வானிலத்
தோர்

3380 தினையத்தனையாகச் சிறுக்கி யெழுதிடுவார்
தினையத்தனையாகச் செய்வார்கள் செகதலத்தோர்

---

**கன்னல் - கரும்பு; வேய் - மூங்கில்; கதலி - வாழை;**
**காரா - கரியநிறமுடையபசு; கதிர்சூடு - நெல்கதிர்கட்டுக்கள்;**

மலேயத் தனேயாக வளர்த்தி எழுதிடுவீர்
திறகொ லிறுமவதை செய்த கொடும் பாவிகளே
எரிவாய் நரகுக் கிரையா யெழுதி விடீர்

3385 பெற்ற பிதா அன்னே சுற்றம் பிள்ளேவதை
செய்பவரை
ஆழ் நரகிற்கே யழுந்த எழுதி விடீர்
பாழ்வாய்ப் பறப்பவரைப் பஞ்சமா பாதகரை
ஏழா நரகுக் கிரையா யெழுதி விடீர்
தீட்சை யுபதேசம் சிலசமய மற்ருரை

3390 அஷ்ஷ மா நரகத்தி லழுந்த எழுதி டுவீர்
பட்டைக் கரையில் படு பாவிகளே யெல்லாம்
அட்டைக் குழிக் கிரையா யட்டவணே கொண்டு
விடீர்
தொழு பாவங் கண்டு சொல்லி விலகாதாரை
ஏழை யழுத குரலே தென்று கேளாதாரை

3395 பாச்சுச்கு திரைப் பயணத்தைப் பாதகரை
நீசரற்ற பாவிகளே தினமோ டுலுத்தர்களே
அநியாயங் கண்டு விலக்காதிருந்த வரை
அநியாயக் காரரவ ரென் றெழுதி விடீர்
மூத்தா ரிருக்கையிலே முன்னரங்க மேறிச் சென்று

3400 ஆத்தான மேறி அழி வழக்குச் சொல்பவரை
வழக் கில்லா வழக்குக்கு மாரேந்திக் கொள்பவரை
கணக்கழிவு சொல்பவரைக் கையோரஞ்
சொல்பவரை
தள்ளி வழக்குரைத்துத் தள்ளி விடுபவரை

---

**ஆடவடவே** - முற்றிலுமாக; **அகதி** - யாரு மற்ருேர்
**அகோராத்திரி** - நள்ளிரவுப்போது;
**கனஉபசாரம்** - மிகுதியான வரவேற்பு

எல்லே நரகுக் கிரையாய் எழுதி விடீர்

3405 குடியிற் பிறந்தாரைக் கோத்திரத்தி லுள்ளாரை
வடிவுக் கினியாரை வங்கிஷத்து நல்லாரை
பூண்ட நெறி யன்பு பொறை கற்புடையாரை
ஆண்டாலம் பூண்டங் கழகா யிருப்பவனை
அலர் தோளணுகாமல் கன்னியர் தோள்
சேர்ப வரை

3410 குலமாதைக் கொண்டு வைத்துக் கூத்திமனை
சேர்பவரை
விரதத் துரோகம் விசுவாச பாதகரை
நரகக் குழிதனக்கு நாற்று யெழுதி விடீர்
மாதர்மனை யேறிமுனை மாணவா வழித்தோரை
காசு பணம் நேராமற் கன்னியர் பாவம்
புரிந்தோர்

3415 வேதியர் சொம வேசியர் சொம வீணை
பறிப்பவரை
காவாலிகளை கடுந்தோஷ காலிகளை
மூவா நரகில் முழுக எழுதிவிடீர்
காமனேய் கொண்டு கதவடியில் நிற்பவரை
கள்வனிவ னென்று காட்டிக் கொடுப்பவரை

3420 தீமைகுடி கொண்டிருக்கு மந்த தீயோரை
தீநரகில்வீழ எழுதிவிடீர் செப்பேட்டில்
ஆண்ட கிணற்றிலறைத் தோண்டி நீர் கொண்டு
தோண்டி நீராலே தொட்டுத் துடைப்பவரை
பாத மிருக்கமுகங் கழுவிக் கொள்பவரை

---

துணியும்-வெட்டுங்கள்; கிங்கிலியர்-இயமதூதர் யேன்ற கொடியோர்
அண்டப்பயந்து - நெருங்கப்பயப்பட்டு;
தாம்பூலம் - வெற்றிலே பாக்கு (அடைக்காய்)

3425 பாழ்நரகில்வீழ எழுதிடுவீர்
நீற்றிலையு மூக்கும் நெடுநரம்புக் காம்புகளும்
தீர்த்துப் பிறவிலையாம் வெற்றிலை தின்பவரை
இலை சிறிதென்று கிழியாமல் தின்பவரை
அவரை யற வெழுதிரண்டை முழுதுடையீர்

3430 இல்லிடுகள்ளி எதிரே வரும் பொழுது
எல்லைக் கல்லாக எழுதிவிடீர் எம்பெருமான்
இல்லோரங் கட்டி யிறப்போரங் கட்டாரை
கல்லாய் மரமாய் எழுதிவிடீர் காவலரே
உற்றூர் பசித் திருக்க உண்போர் தங்களையும்

3435 உள்ளூரில் கோவில் அடைத்திருக்க வுண்போரை
பர்த் தாவைத் தாய் தமரைப் பண்பழியச்
சொல்பவரை
பட்ட மரமாக எழுதிவிடீர் பாலகரே
உட்சுவரை வைத்துப் புறச் சுவரைத் தீத்தினரை
நச்சு மரமாக எழுதிவிடீர் நாயகரே

3440 அழுக்குந் துடக்கும் சுற்றமுமாய் வாழ்பவரை
புழுக்குப் புழுவாய் எழுதிவிடீர் புண்ணியரே
தீமை யறுத்தோரை தீயோர் கொடியோரை
நன்மை மறுத்தோரை நாலா யெழுதி விடீர்
ஆயத் துறையில் அநியாயஞ் செய்பவரை

3445 நாயிற் கடையா யெழுதி விடீர் நாயகமே
ஆவேச மாக எழுதி விடீரப்பாரே
காவல் சிறை வேல் விலங்கு கூட்டழிவு
செய்பவரை

---

**மாய்மாலரூபிகள் - பொய்வாழ்க்கையுடையோர்; குஞ்சரம் - யானை; மும்மதம் - கன்ன, கபோல; பீஜ மதமுடைய யானை; சேய்ப்பசு - கன்றினையுயை பசு**

பாவிகளை வெவ்வேறே பட்டோலை கொள்ளு
மென்றார்
கல்லாதார் கேளாதார் கற்புடையார் சொற்
பெரியார்

3450 இல்லாதார் செல்லாதா ரேழை எளியா ரடியார்
ஏழை செய்த பாவம் எழுதாதே யெம் பெருமான்
என்னைப் புறம்பாய் எழுதாதே எம்மு டைய
ஏட்டுக்குள் ஒக்க எழுது வித்தா ரெங்கோவே
எப்பாவஞ் செய்தாலும் ஏதுபிழை செய்தாலும்

3455 தப்பாத வாசகரே தற்காத்துக் கொண்டருளும்
காத் தருளிச் செய்யு மெனக் காவலனு
ருள்மகிழ்ந்து
ஆத்தியா லணைத்து அன்னையர்க்கங் கேதுரைப்பார்

ஏதுபிழையானலும் மென்றாயே யுன்றனுக்காய்
நீதியுடன் நாம் பொறுப்போம் நிச்சயங்காண்
இப்போது

3460 காயாத வாழையில் கீழ்க்கன்றிலை கொய்து வந்து
தாயாரே பந்தி யெங்குந் தான்போட
வென்றுரைத்தார்
அமுது கறியருளிச் செய்தாரடைவடவே
இத்திரரும் பாலரும் எதிருமொழியுமாக
பந்தி நடுவே யிருந்தார் பரிவுடனே

3465 சேனைக் காலவைத்தார் வாகாக நீர் வார்த்தார்
வாழைக் குருத்து வைத்தார் வாகாக
நீர் வார்ந்தார்

---

**நெருஞ்சி வனம்-நெருஞ்சிக்காடு; சீழ் - இரணத்திலிருந்து ஒழுகும் நீர் துஞ்சி - மங்கலமொழியாகவந்தது இறந்தது என்ற பொருளில்.**

ஆயிரத் தெட்டு அருங்கறியும் போனகமும்
செய்ய பால்பாயசமும் சீனி கண்டு சர்க்கரையும்
பருப்பு நெய்யும் பாகும் பணியாரவர்க்கமுடன்

3470 செலுத்திய பாலும் திருத்திய முப்பழமும்
காட்டுச் சிறுதேனும் கண்டு வளைமுறியும்
ஊட்டிப் படைத்தார் குரும்பை வரிமுலையார்
பதினாயிரக் கலப்பால் பத்தொன்றாய் காய்ச்சியபின்
அமுது பொலிந்தார் அனைவோரு மற்புதமாய்

3475 பாலடிசி லுண்டு பன்னீரால் கைபூசி
வியலார மாகத்திமிர்ந்த உத்தம வீரியரும்
பொடியிட்டுக் கை திமிறிப் புண்ணியரும்
வீற்றிருந்தார்
வாச விலைத் தட்டு வருக விரைய வென்றார்
கோல வரிப் பிளகுங் கொத்தோ டிளம் பாக்கும்

3480 வாச விலைச் சுருளும் வண்ணப் பழுக் காயும்
நாற்றமுஞ் செம்பிளவும் நந்திவனப் பிளவும்
ஈக்குருவி மூக் கரிந்த யின்பமுள்ள வெற்றிலையும்
ஏகாந்த வெள்ளிலை யோடெட்டு மினிதாக
ஆகாச வெள்ளிலை யேடஞ்சு முடன் கூட்டி

3485 முத்திட்ட சுண்ணாம்பில் மும்மூன்றித மழிந்து
சுற்றிட்ட வெண்மடலுக் குள்ளே சுருளமைத்து
வாச விலைத் தட்டு வகை வகையே கொண்டு
வந்து
மோதிரங்கள் மின்ன முகவாசந் தான்
கொடுத்தார்

---

**ஆகாசம் - விண்ணுலகம்; பிராணன் - உயிர்;**
**உசுப்பெற்று - உயிர்பெற்று; அற்ற - அறுந்துவிழுந்து;**
**கனல் - நெருப்பு; கறி ரத்தம் - மாமிசம், இரத்தமிரண்டும்;**

வந்த முக வாசம் வாங்கி மன மகிழ்ந்து

3490 இன்றயிலை பிளவு தின்றங் கிருந்தார்
ஏகாந்த மாக எழுந்தருளி வீற்றிருந் தார்
மாதாவும் மைந்தருகாக வீற்றிருந்தார்
பாதகங்கள் பாவங்கள் பண்டு முன்பு செய்தபிழை
ஏதொன்றுங் கொண்டு பொரு மெல்லார்க்கும்
நல்லவரே

3495 கூர் கமுகின் பாக்கும் கொழுந்தினிய
வெற்றிலையும்
தீர்க்க முடன் வாழ்வீர் தின்னுமென்று
கைகொடுத்தார்
மைந்தர் பெருமாள் மடியேந்தி வாங்கினார்
வாங்கிப் பெருமாள் மணிக்கச்சினுள் வைத்தார்
போக விடை வாங்கிப் புறப்பட்டார் புண்ணியனார்

3500 ஆனை கொடுவாருமென்று ஆனந்த வாழ்வீரர்
அந்த மொழிகேட்டு யானை மாவுத்த ரெல்லாம்
வந்து கண்டு தெண்டனிட்டு வாய்புதைத்தங்
கேதுரைப்பார்
வானுலகு சேரமதம் பொழிந்து சேருடும்
ஆனைகளின் பேரை அடவடவே தான்கூறி

3505 எவ்வானை கொண்டு வருவோமென மொழிந்தார்
அவ்வானை யெல்லா மறிவோம் அலர்தாரிர்
வானவர் கோனானை வருக விரைய வென்றார்
ஆனையெனு மானை அயிராபத யானை
செம்பொற் கிரீடந் தரித்த தொரு வெள்ளானை

---

**மணிக்குடல் - சிறுகுடல்; மரித்த - இறந்துபட்ட;**
**மறுக - திரும்பவும்; துஞ்சி விழுந்தார் - இறந்துபட்டார்**
**(மங்கலச்சொல்)**

3510 கர்பத்துயானைக் கயிறுருவிச் சேவை செய்து
கன்று மதயானைக்குக் கவளமிகக் கொடுத்து
நின்ற மதயானை தன்னை நீர் மடுவில்
நீராட்டலாடி நிறையப் பணிபூண்டு
கோதாட்டுக் குலிசம் பல சாற்றி

3515 பூண நல்ல பூஷணங்க ளெல்லாம் மிகப்பூட்டி
ஆனைநீரால் எழுதி அட்சரத்தா லொப் புவித்து
நப்பத்த வானைக் கொள்ளீய வனப் பட்டணிந்து
பட்டணிந்து மெத்தை செழும் பஞ்சணையுந்
தானணிந்து
வானவர்கோன் வெள்ளானை வத்து நின்றதப்
பொழுது

3520 எல்லாரும் வாரு மென்று வந்தா ரெழுந் தருளி
ஆனைப் பணி கை யென்று ராசனே போற்றி
யென்றார்
மாலை முடியார் மத யானை ஏறி வந்தார்
ஏறினு ரானை எடுத்தார் நெடுங்குடைகள்
கூறினர் கட்டியங்கள் குங்குமப்பூத் தோள்குலுங்க

3525 தாங்கிக் குடோரி யிட்டார் தாம நெடு முடியார்
மத்தகத்தைத் தட்டி மதயானை வீதி விட்டார்
பொத்தகத்தைக் கொண்டு புறப்பட்டார்
கிங்கிலியர்
பொற் சூல வண்டிகளிற் பொத்தகத்தைத்
தானேற்றி
தற்சூழத் தற்சூழ சாமந்தர் தற்சூழ

---

**ஆகாசம் போச்சு - உயிர் நீங்கியது; பாடகம் - சிலம்பு;**
**சூடகம் - வளையல்; நோன்பு - விரதம்;**

3530 முக் கொட்டக் காரர் முதலிகள் தற்சூழ
எகருறுக் கால எமதூதர் தற்சூழ
மூணு லட்சங் கோடி முதற்கணக்கர் தற்சூழ
நாலு லட்சங்கோடி நடுக்கணக்கர் தற்சூழ
அஞ்சு லட்சங் கோடி அருங் கணக்கர் தற்சூழ

3535 ஆறு லட்சங் கோடி அரசர்கள் தற்சூழ
ஏழு லட்சங்கோடி இளவரசர் தற்சூழ
எட்டு லட்சங்கோடி இராசாக்கள் தற்சூழ
ஒன்பது லட்சங்கோடி உத்தமர்கள் தற்சூழ
பத்து லட்சங்கோடி படைமன்னர் தான்சூழ

3540 முடி பொறுத்த ராசாக்கள் முக்கோடிதற்சூழ
முப்பத்துமுக்கோடி தேவர் புடைசூழ
நாற்பத் தெண்ணாயிரம் இருஷிகள் செசெயென்ன
சந்திரருஞ் சூரியரும் தார்வேந்த ரிந்திரரும்
மந்திரங்கள் வாக்கியங்கள் மந்திரங்கள் கூறிவர

3545 கெருடருங் கெந்திரருங் கின்னரர் கிம்புருடர்களும்
வருணனும் வாசுகியும் வாயு பகவானும்
அஷ்டதிக்கு பாலகரும் அக்கினி பகவானும்
சத்த மகாரிஷிகளுஞ் சந்தானம் கூறிவர
வேதம் முழங்கிவர விண்ணோர்களோதிவர

3550 சாத்திரமும் வேதமுஞ்சங்கீதமு முழங்க
அற்ப பாவஞ் செய்ய அரவொமாலமென்ன
மையாழிக்குள்ளே வலம்புரிச்சங்கோலமென்ன
தெய்வாலயச்சங்கு திருச்சின்னமு முழங்க
சங்கு முழங்கச் சமுத்திரமேமு முழங்க

---

**அபயம் - பாதுகாப்பு; நோற்காத - விரதம் அநுசரியாத;**
**செங்குருதி - செந்நிற இரத்தம்**

3555 எங்கு முழங்க வுலகீரேழுந் தான் முழங்க
கின்னரி வீணை கிருபையுடனே முழங்க
வண்ண மணி முரசு வையக மெல்லா முழங்க
வானவருந் தேவர்களும் மண்ணும் விண்ணும்
நின்றதிர
ஓ நமசிவாய மென்று லோக மெல்லா மோலமிட

3560 ஆனை நெருங்க அடற் சேனை ஆர்ப்பரிப்ப
சேனை மன்ன ரார்ப் பரவஞ் செந்தூள் எழும்பிவர
சத்த சமுத்திரமுந் தானெருங்க வானதிர
சுத்துப் பிரம்படிக் காரர் தொடர்ந்து தொடர்ந்
தடிக்க
மாரிப் பிரப்படிக்க வந்தா ரெழுந்தருளி

3565 வையக மெல்லாம் புரக்க வந்தா ரெழுந்தருளி
எச்சக்கிற வாள மென்ன வந்தா ரெழுந்தருளி
ஏகாந்தச் சேர்வையாய் வந்தா ரெழுந்தருளி
நிறை வீதியாக வந்தார் நித்திலஞ் சேர்
மும்முடியார்
மறையோர்கள் வீதியிலே வந்து கண்டா
ரந்தணர்கள்

3570 நால்வேத சாஸ்திரரும் நல்ல புரோகிதரும்
செசெ யெனப் பணிந்தார் சித்திர புத்திரரை
ஆசீர்வாதம் பண்ணி அட்சதையுந் தான்
கொடுத்தார்
வாச லிலேச் செம்பிளவும் வைத்து நமஸ்கரித்தார்
அய்யா அடியேன்கள் அன்பு பொறை
நன்பறியோ

---

இறை - நிலவரி; மாநிலம் - சிறு அளவுடைய நிலப்பகுதி:
அபயம் அபயம் - அடுக்குத் தொடர்;
கைக்கூலி - கையூட்டுப் பொருள்;

3575 கையேற்போம் யாதுகரை சேற்றருளு மென்றூர்
ஏதுடைமை என்று மிரந்து பரந் தெரிந்து
சாதி மறைவேதவீதி தப்பாது வாழு மென்றூர்
அந்தணர்கள் வீதி அகரம் பலகடந்து
இந்திரனூர் மைந்தர் இராசதெரு வீதி வந்தார்

3580 தேசதேசம் பிரியார் சித்திரபுத்திரனூர்
ராச ராசாக்கள் நவகோடி வந்துகண்டார்
நாகமணி ரெத்தினமும் நல்ல அபுருவமும்
பால்குடமும் வைத்துப் பணிந்தார்கள் பார்வேந்தர்
தாகமுடன் வாய்புதைத்துத்தார் வேந்த
ரேதுரைத்தார்

3585 நாடு திரை கொள்வோம் நடுநடுங்கப்
பொன் பெறுவோம்
கோடி குலே செய்வோங் கொடுமை செய்வோங்
கொண்டுபொரும்
சிஷ்டர்களேத் தாபரியுஞ், செங்கோல் முறைமை
செய்யும்
துஷ்டர்களேச் சங்கரியும் தேர்வேந்தே
யென்றுரைத்தார்
வேந்தர் திருவீதி கடந்தந்த வீரியனூர்

3590 சேந்த குல வணிகத் தேசிகர் வீதி வந்தார்
மையம் புகழ வணிகர் நவரெத்தினமும்
ஐயஞ் சிறு பத்தஞ்சாந் திரவியமும்
வானிதியமுஞ் சகல மான சரக்கும்
சீனிசீனும் பரமுந்தேசிகர் வைத்துப் பணிந்தார்

3595 தேசிகர் வைத்துப் பணிந்து தெண்டனிட்டங்
கேதுரைப்பார்

---

**இத்தனே பாடும் - இத்தனேத் துன்பமும்; தன்மம் - தருமம்; அஞ்ஞானம் - அறியாமை; திருவசனம்-இறைவனது உபதேச உரை.**

வாசகரே நெஞ்சறிய வஞ்சகம் பொய் சூதுரைப்
போம்
குத்திரஞ் செய்தே எற்க கொள்வோம் குறைய
விற்போம்
நற்றியினுப்பிப் பிழைப்போ மீடேற்றிக் கொள்ளு
மென்றார்
செட்டு வியாபாரம் திருவரவு ரூபமிதே

3600 கட்டளை காணுங்களுக்குக் கனமாயஞ் செய்வ
தெல்லாம்
உண்மை கபடு பொய் சூதுள்ள தொழில்
செய்தாலும்
வண்மையுடனே மகிமையுடன் வாழு மென்றார்
மிகவும் புகழுடையார் வேளாளர் வீதி வந்தார்
சீராட்டி வீதிவருஞ் சித்திரபுத்திரரை

3605 காராள ரெல்லாம் கடுகி வந்து தெண்டனிட்டார்
சென்னெல் முத்தும் கன்னல் முத்துந் தேன்கதலி
மூங்கில் முத்தும்
வண்ண முத்து மாலைகளும் மஞ்சளிஞ்சி
வான்பயிரும்
முத்து முளையோடு முதிர்ந்துதிருங் காய்கனியும்
வித்து வகையு மளந்து வெள்ளாளர்
தெண்டனிட்டார்

3610 தெண்டனிட்டு வாய்புதைத்துச் செம்பொன்னடி
பணிந்தார்
தொண்டருக்குள் தொண்டரென்று சூத்திரங்க
ளேதுரைப்பார்

---

**போசனங்கள் - உணவு வகைகள்; நாழி - படி (அளவுகோல்)**
**விலைப்படுமோ - விற்கப்படுமோ; ரெட்டி - இரண்டு மடங்கு;**

புஞ்சை நஞ்சை செய் வோம் பொலி மறைப்போம்
போர் மறைப்போம்
பஞ்ச கலி தீர்ப்போம் பரகதி தாரு மென்றார்
சாமைப்புல் சென்னெல் சிறு தானிய வர்க்கம்
விதைத்து

3615 பூமிதனைக் கிண்டி பிழையு மென்றார் புண்ணியனார்
பணித்த குடிமக்கள் பன்னிரண்டு பேர்களையும்
இடங்கை வலங்கை இரண்டும் பிரியு மென்றார்
வலங்கைக்குச் செய்தொழிலும் வண்மை
வரிசைகளும்
இடங்கைக்குச் செய்தொழிலு மின்ன தென்று
சொல்லுமென்றார்

3620 அருமைத் தொழிலா யவர்க்கு உழையல்
செய்யு மென்றார்
ஆங்கவற் கெல்லா மடவடவே புத்திசொல்லி
சங்கர சாதித்தெருவே தான் வந்தார் தார்
வேந்தர்
அவ்வவர்கள் பால தறம் ஆராய்ந் தெடுந்தெழுதி
தெய்விக மாஞ் செப்பேட்டில் சேர்வை செய்து
போகையிலே

3625 மலடி இருசியவள் மற்றொருத்தி பிள்ளை தன்னை
பாசமுட னெடுக்கச்சாயத்துதவி மூத்திரத்தை
மூத்திரத்தைத் தொட்டு முகந்தாளவள் பாவி
பார்த்திருந்த பாலகனார் பாவி செய்த பாதகமே
ஆனாலும் பாவி யமப்பாவி யென்று சொல்லி

3630 ஈனு மலடாயெழுபிறப்புஞ் சென்மி யென்றார்
தாய் சோறு மகள்சோறு தனித்தனியே வேகையிலே

---

**மாதவம் - உயர்ந்த தவ ஒழுக்கம்; மட்டு - தேன்;**
**திட்டாந்திரமாக - (வழக்குச் சொல்; ) அனுமானமாக.**

ஒருசோற்ருே டொரு சோரு
முகந்திட்டாளொருபாவி
அப்பாவி செய்த அதிபிழைகண்டு அத்தியர்கோன்
கற்பாவை யாக்கக் கணக்கி லெழுத ஓற்ருர்

3635 தனது வயல் செந்நெல் விளைந்து தலைசாய்கையிலே
அருதி வயலதனைப்பார்த் தலைத்தா ஞேர்பாவி
ஆறலைத்த பாவிதனை அத்துயர் கோன் கண்டருளி
வாய் மதத்தைப் போக்கும் வகை மாயமேது
செய்தார்
வித்திட்டுப் பாழாய் விலைநிலமுஞ் சாவிகளாய்

3640 சத்தும் விளையா தெழுதிஞர் தார்வேந்தர்
வகுத்த புருஷனையும் மைந்தரையும் வஞ்சமுற்று
தலைப் பண்டம் வாங்கி யவள் தன்வாய்
தனிலிடுவார்
தாழிதனில் பால் காய்ச்சி சங்குப்பாலில்லை
யென்பாள்
நாழிமரக் கால் நடு நடுங்கவே அளப்பாள்

3645 நன் மணிக் கோர்வை நடு நடுங்கவே அறுப்பாள்
தன் மணி யென்று தன் கழுத்தில் கோர்த்திடு
வாள்
பாலகர் தன் பண்டம் பலகால் திருடினவள்
நீலி யவளாய் எழுதிஞர் நீடுலகில்
பாவ கன்ம தோஷம் பதி பசு பாசம் விளங்க

3650 ஆகம நூல் சாஸ்திரங்க ளப்போ தருள்புரிந்தார்
சாஸ்திரம் வேதாகம நூல் தப்பாத தடவடவே
பார்த்து வருகையிலே பட்டோலை கொள்கையிலே

---

**திகவடிகள் - தொல்லைகள்; துன்பங்கள் (வழக்குச் சொல்)
அளவறுக்க முடியாது - அளவிட முடியாது; பர்த்தா - கணவன்;
நிர்ப்பந்தம் - தொல்லைகள்.**

உபதேச மான கணக்கு ஓதிவருகையிலே
அமராபதி யாள் அறச்சாலை தோன்றியதாம்

3655 சத்திய வாசகங்கள் தப்பாத மென் மொழியாள்
உத்தமியாள் புண்ணியங்கள் மேற்பட்டிருந்து
தங்கே
சிவபூசை குருபூசை மாகே சுரபூசை
அபிஷேகம் சம்பிரதிஷ்டை அர்ச்சனைகள்
பண்ணுறதும்
அந்தரியாள்பூசை செய்ய ஆதித்த பூசைகளும்

3660 சந்தியாவந்தனமும் தர்ப்பணங்கள் பண்ணுவதும்
தேனுறு மென்மொழியாள் தேபூசை பண்ணுவதும்
மானுகங் கொண்டாள் மகாதானம் பண்ணுவதும்
அன்னநடையா ளனுஷ்டானம் பண்ணுவதும்
துன்னுகுழலாள் துலாபாரந் தூக்குவதும்

3665 பூதானங் கோதானம் பொன்தானம் பண்ணுவதும்
உயர்வான புண்ணியங்க ளோங்கி வளர்ந்த
தங்கே
உத்தமியாள் புண்ணியங்க ளோங்கி வளர்ந்த
தங்கே
பத்தினியார் தன் கணக்கைப் பார்த்தார்
பலகாலும்
பாலில்லாப் பாலகர்க்குப்பால் பசுக்க ளீந்ததுவும்

3670 தாழியுடன் தன்மப்பால் சங்குப்பால் வார்க்கிறதும்
தன்மத்தைக் கேட்கிறதும் சாத்திரங்களோதுவதும்
பாடி பரதேசி பஞ்சை கலி தீர்க்கிறதும்

---

அங்காடி - பொருள் விற்கும் கடைத்தெரு;
ஊழி - பலகோடி ஆண்டுகள்; கனகாபுரி - இந்திர உலகம்.

மாலைக் கருங்குழலாள் வண்மைசீர் செய்குவதும்
வைதாரைத் திட்டினரை வாழ்த்தினர்கா
ணென்பதுவும்

3675 பொறுமை பொறுக்கிறது போதகங்கள்
செய்குவதும்
அறை யறையாக இருந்த திது அவ்வேடு
ஆவ்வேட்டு போட்டந்த அண்டமுழு துடையார்
மற்று மொரு ஏடெடுத்து வாசித்தார் வாழ்வேந்தர்
மன்னர் பெருமாள் வகை வகையே வாசித்தார்

3680 சிறைச் சோறளித்துச் சிறைத் தலைகள் மீட்டதுவும்
அறச்சாலை சத்திரங்க ளங்கங்கே வைத்ததுவும்
கோவில் திருமடங்கள் கோபுரங்கள் கட்டினதும்
சீமைகள் தோறும் திருக்குளங்கள் வெட்டினதும்
காதங்கள் தோறும் கனத்தசுமை வாங்கினதும்

3685 தேசங்கள் தோறும் சுமைப்பாரந் தாங்கினதும்
வேற்றொரு சந்தி விரோதமாய் நோற்றதுவும்
கார்த்திகை மாதங் கறுக்கறுவா ளீந்ததுவும்
மார்கழி மாதம் மகா தீர்த்த மாடினதும்
தை மாசி மாதம் தலவாசம் பண்ணினதும்

3690 பங்குனி மாதம் பரிசக் குடை ஈந்ததுவும்
சித்திரை மாதம் சிறப்பு நடத்தினதும்
வைகாசி மாதம் மகா யாகம் பண்ணினதும்
ஆனியு மாடியு மாரமுதம் ஈந்ததுவும்
ஆவணி மாதம் அருந்தவங்கள் செய்ததுவும்

3695 நிறை யாழி நிறை மரக்கால் நித்தங்
கொடுப்பதுவும்

---

சந்ததமும் - நாள்தோறும்; பொன்னுலகு - மோட்ச வுலகு;
எந்தம்பிரான்-எமது தலைவன்; துஞ்சுதல்-இறத்தல் (மங்கலமொழி)

அறையறையாக இருந்தது! அவ்வேடு
அவ்வேடு போட்டந்த அண்ட முழுதுடையார்
மற்று மொரு ஏடெடுத்து அண்ட முழுதுடையார்
மன்னர் பெருமாள் வகை வகையே வாசித்தார்

3700 வெட்ட வென்ற போறதலை மீண்டங்கே
விட்டதுவும்
கட்டியிட்டுப் போரவரை கட்டவிழ்த்து விட்டதுவும்
அடைக்கலம் புக்கவரை அஞ்சலென்று காத்ததுவும்
அண்டிவந்த பேர்கள் தமை அஞ்சாதே
காத்ததுவும்
சுற்ற மெங்கும் காத்ததுவும் சொல்லுக்குத்
தாழ்த்ததுவும்

3705 குற்றங் குறை யேதும் கொண்டு பொறுத்ததுவும்
அறம் பொருளின்பம் பெருமைகளுண் டானதுவும்
நெறி முறைமை தப்பாமல் நீடுழி வாழ்ந்ததுவும்
அறை யறையாக யிருந்தது அவ் வேடு
அவ் வேடு போட்டந்த வண்ட முழுதுடையார்

3710 மற்று மொரு ஏடெடுத்து வாசித்தார் வாழ்வேந்தர்
மன்னர் பெருமான் வகைவகையே வாசித்தார்
பாடி பரதேசி பசித்தார்க் களிப்பதுவும்
பண்ணுகிற புண்ணியங்கள் பார்க்கத்
தொலையாமல்
எண்ணத் தொலையாது ஏட்டுக் கடங்காது

3715 எல்லை கரை கொள்ளாது ஏந்திழையார்
புண்ணியங்கள்
சொல்லிமுடி போகாது தோகையார் புண்ணியங்கள்

---

**மெழுகி - தூய்மை செய்து; ஆதித்த வாரம் - ஞாயிற்றுக்கிழமை; பவுரணை - பௌர்ணமி என்பது வழக்கில் இவ்வாறு வந்தது; பேரிகை - பெரு முரசு.**

என்ன தவங்கள் செய்தா ளேந்திழையாளிப்போது
என்னை நினைந்தறியாள் என்னேன்பு
நோற்றறியாள்
எந்தன் திருவுரையை யிங்கொருநாள்
கேட்டறியாள்

3720 எழுதுங் கணக்கருக்கு எள்பொரி ஈந்தறியாள்
காலறுவானேடெழுதிக் கண்குறை போகுது
காண்
காந்தாரி யேடெழுதிக் கைசோந்து போகுதுகாண்
சீர்கேடி யேடெழுதிச் செங்கரங்க ணோகுதுகாண்
செங்கை சிவக்குதுகாண் திண்டோள்
கடுக்குதுகாண்

3725 கட்ட துட்டமான கடிய கொடுந் தூதர்களே
திட்டெனப் போய் கொண்டுவந்து தீநரகில்
பாச்சுமென்றார்
அப்போது தூதரடிபணிந்து தெண்டனிட்டு
இப்போ துமை நினையா ளீடழிவாள் சீர்கேடி
கோயிலிருக்குங் குறிப் பறியுங் கொற்றவரே

3730 வாசலிருக்கும் வகையறியோம் வாழ்வேந்தே
அன்னமின்னார் வாச லடையாள மீதென்றார்
என்னவகை மார்க்க முரைத்தீரியம தூதர்களே
(எ)மனறியா வுயிருண்டோ யெவ்வுலகும்
நம்மை யறியாமனுவுண்டோ நற்புவியில்

3735 என் கணக்கி லுள்ளபடி ஈரேழுலகு முண்டு
செங்கணக்கி லுள்ளபடி செப்பேடு
பார்த்துரைப்போம்

---

நாற்றாணி - நான்குபடி; சுளகு - முறம்; பவுசு - அழகு;
கன்னல் - கரும்பு; தூபம் - மணப்புகை;

கார்மலைபோல் நின்ற கடிய கொடுந் தூதர்களே
ஓமமுடன் சாந்தி உபநயனம் பண்ணுவிப்பள்
பூமரமுஞ் சாலைகளும் போற்றுவிப்பள்
பண்ணுவிப்பள்

3740 புண்ணியங்கள் பண்ணிப் பூணநூல்
போட்டுவிப்பள்
கன்னிகாதானம் கலியாணம் பண்ணுவிப்பள்
நந்த வனம் போடுவிப்பள் நல்ல தண்ணீரப்
பந்தல் வைப்பள்
சந்தி தொறும் சோறும் தயிர்த்திரளை
போடுவிப்பள்
தாயில்லாப் பிள்ளை தலை தடவித் தான் வளர்ப்பள்

3745 பாலமுத மீந்து தினம் பள்ளி தனி லோதுவிப்பள்
தன்மக் குடை செருப்புச் சந்ததமு மீந்திடுவள்
உண்ணக் கலங் கொடுப்பாள் உண்டிருக்கும்
சோறிடுவள்
உண்டிருக்கச் சோறு உடை மானமுங் கொடுப்பள்
கொண்டு விற்கப் பொன்தாலி கூறை முதல்
முத்திடுவள்

3750 உத்திர தானம் அன்னதான முடை மானம்
வஸ்திர தானம் மனைதானம் தான் கொடுப்போர்
ஏற்ற கை மாறும லிட்டுண் டினி திருப்பள்
கீர்த்தி சொல்லுவார்மேல் கிருபைமிக
வாயிருப்பள்
ஏழை எளியாரை எப்போது மாதரிப்பர்

3755 ஆர முலையாள் தன்னடையாளங் காணுமிது

---

**சிங்காரம் - அழகு; பாலடிசில் - பாற்சோறு;**
**சத்தஉலகம் - ஏழுஉலகம்;**

இன்னமும் நீர் கேட்டருளீரேந் திழையாள்
கோவில் வளம்
கன்னல் செந்நெல் வேய்கதலி காரானை முத்தீனும்
தோணிபடகு சம்பான் சொங்கு கப்பலோடிவரும்
சீனி கிரும்பரமுந் தீவிலுள்ள வான்சரக்கும்

3760 சேர்ந்து திமிதிமி என்னச் சேரமுழங்குமங்கே
வாச லெனும் வாசல் வழக்கமுள்ள வாசலதே
அச்ச மறவாத வடையாளங் கேட்டருளீர்
ஊருக்கு மேற்கே உயர்ந்த தலைவாசல்
பேருக்கு நல்லாள் பெரிய தலைவாசல்

3765 தேங்கும் பலாமரமும் தேன்கமுகும் சூழ்ந்து நிற்கும்
செம்பொன்னும் முத்தும் கொழிக்கும் தலைவாசல்
தன் தொட்டில் தொட்டிலர்கள் தொட்டில் பிள்ளை
தொட்டில்
முத் தொட்டில் கட்டி முழங்கும் அவர் வாசல்
முத்திறமுங் கட்டிக் காக்கும் மனைவாசல்

3770 காராவுங் கன்றும் கதறு மவள் வாசல்
மூவாஷஷி கட்டி முழங்கு மவள் வாசல்
முன்முகப்பு வாசல் முகந்தமுள வாசல்
எள்ளாட்டி எண்ணெய் இறைக்கு மவள் வாசல்
ஏட்டுக் கணக்கும் எழுது மவள் வாசல்

3775 கதிர் சூடு கட்டி யடிக்கு மவள் வாசல்
ஏணிமே லேணி எட்டிப் பார்க்கு மவள்வாசல்
ஏதப் புராண நூல் கேட்கு மவள் வாசல்
பூணூ நூல் பூஷணங்க ளார்க்கு மவள் வாசல்
பூண்டு புரக்கப் பொது வாந் தலைவாசல்

---

**தானவர் - தேவர்கள்; சந்ததம் - நாள்தோறும்;**

3780 இந்த அடையாளம் எவர்க்குந் தோணு மென்ருர்
அந்த மொழிகேட்டு அரனுடைய தூதர் சொன்ஞர்
பாதி ராத்திரியில் பதினைந்து நாழிகையில்
மாது தனி வாசல் தனில் மாய்கையாய்
வந்திருந்தார்
வந்த எமதூதர் மனுவேஷங் கொண்டிருந்தார்

3785 இந்த விபரமறியாள் இளவஸேயாள்
அல்லும் பகலும் அகோராத்திரி தோறும்
மெல்லி நல்லாளு முடி தீறகங் காரணத்தால்
அகதி பரதேசி யாருமற்ற நோயாளர்
பசியாளருண்டோ வெனப்பார்த்து வந்தாள்
கைவிளக்கால்

3790 கை விளக்கால் பார்க்கையிலே கரிமலேபோல்
தூதுவரை
சேயிழையாள் கண்டங்கே சென்றழைத்து
அன்பிஞெடு
பந்தி தனே வைத்துப் பணித்த இலே விரித்தாள்
கைக்கு வெந்நீர் வார்த்தாள் கனஉபசார
முரைத்தாள்
அமுது கறி நெய் பால் அடவடவே தான்
படைத்தாள்

3795 கூட்டியமுது செய்யு மென்றங்குபசரித்தார்
ஊட்டம் பெரிதுடையா ருண்டு களித் தேப்ப
மிட்டார்
தாம் பூலந் தந்தாள் தலேகாணி பாய்
கொடுத்தாள்

---

நட்டவர் - நட்புச்செய்தவர்; சொர்க்க லோகம் - வீடுபேறு;
ஊழி - பல்லாண்டுக்காலம்; புவி - பூமி.

தேன் போல் மொழியாள் திரு மாளிகை
புகுந்தாள்
வண்டுற்ற பூங்குழலாள் மாதாயிவ ளெனவே

3800 அண்டப் பயந்து அடிபணிந்தார் தூதுவர்கள்
வேண்டி முனிவராலும் மெல்லியர் பாற் சொல்
வோமென்றார்
ஆணழகர் தூதுவரும் அப்போ திரும்பி வந்தார்
வந்த தொரு தூதுவரை மாந்தர் கண்டு
தான்முனிந்து
கிங்கிலியர் பெருஞ் சிறையி லடையு மென்றார்

3805 சிறையி லடையு மென்றார் சீர் பாதங்கள் மாற்று
மென்றார்
அறையி லடையு மென்றார் ஆபரணம் மாற்று
மென்றார்
கட்டு மென்றார் வீசு மென்றார் கால்கைகள்
துணியு மென்றார்
வெட்டி யெறியு மென்றார் வெயிலிலே போடு
மென்றார்
நீலக் கருங் குழலாள் நீலிகளே வாரு மென்றார்

3810 நீலிகளைத் தான்கூட்டி நெருப் பெறிந்த
கோபமுடன்
சூலமும் பாசாங் குசமும் சூல் மழுவும்
வேல்மழுவும்
பொன்னிழைத்த வாங்கும் புலிமுகச்
சொட்டையமும்
மின்னி இடித்தாற்போல் எரிஎரித்த மேல் மூச்சும்
அக்கினியாய் மீண்ட அனலெழுந்த ஆவிகளும்

3815 பக்கு விழியும் பனைமரம் போல் கை காலும்
சூறை போல் பல்லும் சொலியும் சுடுமுகமும்

ஈஞ விருஷிகளும் மிக்கிடு கத்திகளும்
மாய்மாலரூபிகளும் வந்துகண்டு தெண்டனிட்டார்
தெண்டனிட்ட நீலிகளைக் கண்டந்த உத்தமனுர்

3820 ஒண்டொடியைக் கொண்டு ஒரு நொடியில் வாருமென்ருர்
ஆர்ப்பரித்து நீலிகள் தான் அலறிவிட்டுக் கொக்கரித்து
கோவென்று கொக்கரித்து குவளையிட்டு ஆர்ப்பரித்து
வண்டுறையும் பூங்குழலாள் மாளிகையினுள் புகுந்து
விளக்கு நிழல் தனிலே ஒதுங்கினுள் மெல்லியலாள்

3825 நிழலி லொதுங்கிய பின் நின்றதொரு நீலிகள்தான்
பசுவினுட கொம்புதனிலேறினுர் பைந்தொடியார்
தாமக் குழலார் தலையிறுகக் காராவும்
ஈனுயெட்டு நாளா யினங்கன்றுக்கு மிரங்கி
கன்றுக் கிறங்கி கூதறுச் சேய்ப் பசுவும்

3830 கோரை போல் பல்லுகளும் குஞ்சரம் போல்மும்மதமும்
சூறை கொண்ட கன்றும் சொவியுஞ் சுடுமுகமும்
கதறும் பசுவதனைக் கண்டந்தக் காரிழையும்
பதறித் திடுக்குற்று பசுவினருகே வந்து
வெள்ளிப் பரிகயறும் வெங்கலத்தாற் பாற்குடமும்

3835 பொன்னின் கழிகோலும் போடு மென்ருள் பொற்கொடியாள்
கன்று தனை யூட்டவிட்டுக் காலுடனே சேர்த்தணைத்து
வண்ண முலையார் மடியிலே கையிடவே

கயிறு கலசங் கழிகோல் பொடி படவே
இடறிப் புதைத்து இடிபோலே தான் முழங்கி

3840 தன் குணத்தை விட்டுத் தனியே வொரு குணமாய்
விண் பறக்கச் சீறி விலா வோடிப் பாய்ந்திடுமாம்
பாச்சலுறப் பாய்ந்து பதை பதைக்கக் குற்றியபின்
ஆச்சி யடி யென்று அலறி யங்கே போய் விழுந்தாள்
நீலிகளாய்ச் சூழ்ந்து பிடித்தந்த நேரிழையை

3845 காலதனிற் கச்சுக் கயிறு கட்டித் தானிழுத்தார்
கட்டி யிழுத்தார்கள் காடுசெடி கான்க ளெல்லாம்
முட்டியிழுத்தார் முகங் கீழாய்ப் போட்டிழுத்தார்
நெருஞ்சி வனமெல்லாம் நின்றெறியுங்
கானலெல்லாம்
தன்றீ ருழலை தவனம் பெரிதானர்

3850 சித்திர புத்திரரை நினையாத நெஞ்சினுள்
சீழு மிரத்த முமாய் வார்த்தார் திறுதிகென்ன
வார்த்த விரத்தஞ் சீழெல்லாம் வயிறு முட்டு
எற்றுக் குடித்தாளிணைவளைக்கை மாது நல்லாள்
ஆவியற்றுச் சீவனற்று ஐம்புலன்கள் தானுமற்று

3855 சோபமுற்று மெய் சோர்ந்து துஞ்சியே
போய் விழுந்தாள்
ஆயிழையார் தன்னுயிரு மாகாசமேபோக
வாதராய னென்று மொரு காற்றுவந்து வீசிற்று
கமலவல்லி யென்று மொரு காற்றுவந்து வீசிற்று
பிராண உபகாரி யென்றோர் காற்று வந்து
வீசிற்று

3860 மரித்த பிராணன் மறுகாலுமீள வந்து
உறுப் பெல்லாங் கூட்டி உசுப் பெற் றெழுந்
திருந்து

அறையா முறையா கோ எமதூத ராசாவே
நாளே யிது படுவேனையகமே தஞ்ச மென்றார்
தேனர் மொழியாரை திரும்ப வங்கே
போட்டிழுத்தார்

3865 காடும் புனலுங் கருமலையுங் கல்லு முள்ளும்
ஓடுங் கனலுமுவரக் கொதிப்புக் கானங்களும்
ஈரறு வாள் போலிரு புறமும் பூண்டறுக்க
ஆர முலையா ரற்று விழுந்து விட
அற்ற முலை யிரண்டும் அக்கினியாய்
மூண்டெழுந்து

3870 முத்து முலையிரண்டும் பற்றி யெரிந்துவிழ
அவ்வனத்துக்குள்ளே அலைகுலையப்
போட்டிழுத்தாள்
கண்ணீருங் கண்மலரும் கறி ரத்த மாயுதிர
தண்ணீர் தண்ணீ ரென்று தாகம் பெரிதானாள்
சித்திர புத்திரரை நினையாதாள் வாய் தனிலே

3875 செம்பு தனைக் காய்ச்சிச் சேர்த்துருக்கி
வாருமென்றார்
செம்பு மிரும்புந் திராவகமும் பித்தளையும்
வம்பி னுடனுருக்கி வார்த்தார்கள் வாய் தனிலே
மார்பும் விலாவும் வயிறு மணிக்குடலும்
ஈரலும் பிச்சும் இருபாலும் நின்றுருகி

3880 உண்ணாவுந் தொண்டையும் வாயு முதடும் வெந்து
கண்ணாலே சீவன்போய் விழுந்தாளே காரிழையும்
ஆயிழையார் தன்னுயிரு மாகாசம் போன பின்பு
வாதராயனென்று மொருகாற்று வந்து வீசிற்று
கமல வல்லி யென்று மொரு காற்று வந்து வீசிற்று

3885 பிராண னுபகாரி யென்றோர் காற்று வந்து வீசிற்று
மரித்த பிராணன் மறுக வந்து உள்புகுந்து

உறுப்பெல்லாங் கூட்டி உயிர் பெற்றெழுந் திருந்து
அறையா முறையாகோ எமதூத ராசாவே
யானே இது படுவேன் எமதர்மராசாவே

3890 ஆகோ முறையாதோ அன்னமனியாயமென்றார்
சீர்கேடி சொற்கேட்டு சித்திரபுத்திரனர்
எள்ளளவும் நம்மை நினையாத ஏந்திழையே
கண்ணளவும் மூக்களவு காதளவு வாதகிடென்றார்
வாந்தி கிழியு மென்றார் வாயில் முளை தாக்கு
மென்றார்

3895 சோர்ந்து நினைவழிந்து துஞ்சியே போய் விழுந்தாள்
ஆயிழையாள் தன்னுயிரு மாகாசமே போச்சு
வாதராச னென்று காற்று வந்து வீசிற்று
கமலவல்லி யென்று மொரு காற்றுவந்து வீசிற்று
பிராண உபகாரி என்றோர் காற்று வந்து
வீசிற்று

3900 மரித்த பிராணன் மறுகா வந்து உள்புகுந்து
உயிர்ப் பெல்லாங்கூடி உயிர்பெற் றெழுந்திருந்து
அறையா முறையாகோ எமதூத ராசாவே
யானே இது படுவேன் எமதரும வாசலிலே
ஆகோ முறை யபயம் அன்ன மனியாய மென்று

3905 சீர்கேடி சொற்கேட்டு சித்திர புத்திரனர்
நம்முடைய தோன்புதனை நோற்காத நாகிலியை
அம்மியிலே யிட்டு அரையுமென்று ரப்
பொழுது
அரைத்து வழித்துக் கரைத்தா கிவிட்டபின்பு
உயிர்ப் பெல்லாங் கூடி உயிர்பெற் றெழுந்
திருந்து

3910 நீந்திக் கரையேறி நின்ற தொரு நேரிழையே
பாம்புக் குடத்தி லமுத்து மென்றார் பாடுபட

அட்டைக் குழியிலழுத்து மென்று ரப்பொழுது
செக்கிலே போட்டுத் திரியுந் திரியு மென்றார்
சூடகமுங் கையும் சுழற்றித் திருகி விட்டார்

3915 பாடகமுங் காலும் பதைக்கத் திருப்பிவிட்டார்
கொங்கை இரண்டும் குலுங்க அங்கே
கூறுகொண்டார்
செங்குருதி எண்ணெயாய் செக்கு நிறைந்தபின்பு
எண்ணெயும் பிண்ணாக்கு மேற்றி
இறைத்தெடுத்தார்
கொள்ளுமிவை யென்று தெருக்கள்தொறும்
கூறுவித்தார்

3920 சித்திரபுத்திரரை நோற்காத பாவி என்னை
அத்தெருவார் வாச லடைத்து ரெட்டைத்தாள்
போட்டார்
தெற்குத்தெருவார் தெருவடைத்து வாடிவிட்டார்
வடக்குத் தெருவார் வழிதனிலே வேலியிட்டார்
கீழத் தெருவார் கேட்டுக் கத வடைத்தார்

3925 மேலத் தெருவாரும் வேண்டாமலே அடைத்தார்
நாலுதெருவார்கள் கொள்ள நடுநடுங்கித்
தள்ளிடவே
ஆயிழையார் தம்முயிரு மாகாசமே போச்சு
வாதராய னென்று மொரு காற்று வந்து வீசிற்று
கமலவல்லி யென்று மொரு காற்று வந்து வீசிற்று

3930 பிராண உபகாரி யென்றோர் காற்று வந்து வீசிற்று
மரித்த பிராணன் மறுகால் வந்துள் புகுந்து
உயிர்ப் பெல்லாங் கூடி உயிர் பெற்றெழுந்திருந்து
அறையா முறையாகோ எமதர்ம ராசாவே
யாளோ இதுபடுவேன் எமதன்ம ராச்சியமே

3935 என்றபயச் சொற்கேட்டு எமதன்ம ராயர் வந்து
சபையில் வர வழைத்துத் தன்மக் கணக்கர் முன்னே
உத்தமனுர் நோன்பை உணர விரும்பாமையினுல்
இத்தனை பாடு மிருந்துது காண் நேரிழையே
எம்பெருமான் நோன்பு தன்னை ஏந்தி
வந்தீராமாகில்

3940 இந்த நிர்ப்பந்தம் ஏன்படுவீர் ஏந்திழையே
ஏழைபங்கர் பேருரையைக் கேட்டு வந்தீராமாகில்
இந்த எம தண்டம் வாரா திளங்கொடியே
அபய அபய மென்ரு லாராலு மாகாது
அவையாற் கபய மென்ரு லன்று வருமன்ருட்டு

3945 என்று சயிக்கினையாய்ச் சொன்ன ரெம தன்மர்
அன்று முறையிட்டவையார்க் கபய மென்ருர்
ஏன்ற மொழி கேட் டவையா ரேந்திழையர்
அஞ்சாதே
தானதவஞ்செய்தென் தவஞ்செய்தென் தாயாரே
பாவ மொன்றுஞ் செய்தறியேன் பாரவினை
சூழ்ந்து தம்மை

3950 என்ற மொழி கேட்டவையே யெடுத்துப்
பார்த்தருளி
புண்ணியரை நோற்றுப் பொருளறிந்து
வாழலையோ
உன் கணவன் உன்னூர்க்கிறைவரியொன்
றீந்திலனே
ஒரு மாநிலமும் உழுதுண் டிருந் திலையோ
கணக்கனுக்குங் கைக்கூலிகட்டி யறிந்திலையோ

3955 கட்டுச் சுருளை பச்சை கைத்தூக் களித்திலையோ
சித்திர புத் திரரை நினையாத தீமையினல்

இத்தனைபாடும் எளிபாவம் வந்தது காண்
தீராவினை தீர்க்குஞ் சித்திர புத்திரரை
ஆராதனைகள் பண்ணுமாரணங்கே
யென்றுரைத்தார்

3960 ஓதுந் திருவசன முபதேச மாய்க் கொண்டு
பாதந் தொழு தேததிப் பற்றி யடிபணிந்தார்
அஞ்ஞான மெல்லா மகற்றி யந்த அத்தியர்கோன்
மெய்ஞானக் கண் சாற்றி மெல்லியரைத்
தானழைத்து
மாதே அவையாருக்காக மனம் பொறுத்தோம்

3965 ஏடெடுத்துப் பாவஞ் செய்தீரெனக் கேட்டு
தேவரீர் பாதம் நினையாத தீமையினுல்
தீவினையேன் செய்த தன்மஞ் செய்ததுவீணுகாதோ
பாவியேன் செய்தபிழை பாராட்ட சாதகமோ
தேவரீர் நோன்பெனது மில்லுடக் கொற்றியென

3970 பாவியடியேன் பரவுபகாரங்கள் செய்தேன்
அன்னை சொர்ணம் ஆடை அரிசி கறி தட்டுமுட்டு
இன்ன தென்றியான் கொடுத்தேன் இல்லறங்கள்
தானளித்தேன்
ஏற்பார்க் கித மளித்தேன் ஏழைகளைத் தாபரித்தேன்
பார்ப்பார்க்கும் பங்குமனை பட்டவிர்த்தி
தானமிட்டேன்

3975 பிச்சை ஐயமுட்டிப் பெருந்தவசு தானதர்மம்
இச்சையாய்ப் போசனங்க ளெல்லா மளித்தா லென்
அன்பாலறம் அளந்து ஆவதென்ன உன்னருளால்
என்பாவி பாவமெல்லா மிப்போ வெளியாச்சே
ஆனாலும் பாவி அறப்பாவி யா யிருந்தேன்

3980 வானோர் பெருமாளே மங்காமல் தற்காக்க
எந்தன் பிரானே இயமன் பிணையாக
உந்தன் திருநோன்பு உரையடவே நோக்கும்வகை
நன்னோன்புந் திருக்கதையு முலகமெல்லாந்
தானோங்க
போந்தங்கிருந்து வரப்போக விடை தாருமென்றார்

3985 ஆமென்றனுப்பி யருள்புரிந்தா ரப்பொழுது
ஆமென்றவனிமிசை சென்றொருநெடியில்
மாலைக்குழலாள் மறித்த தலை வாசலிலே
ஆலித் துக்குத்தி அழுது அங்கனைவோரும்
நங்கைப் பொருட்டாலே நாம் பிழைத்தோ
மென்பாரும்

3990 நங்கை யருகிருந்து நாம் வாழ்ந்தோமென்பாரும்
நங்கை எதிர்கண்டால் நாம் பிழைப்போ
மென்பாரும்
நங்கை மரக்கால் பெரிது நாழி பெரி தென்பாரும்
எதிரப் பண்டார பண்டம் விலைப்படுமோ
யென்பாரும்
விலைப்பட்டா லாப மிகுதி காணென்பாரும்

3995 ஒட்டிக்கு ரெட்டி பொருளுண்டு காணென்பாரும்
செட்டுக்குப் பொன் கொடுக்குந் தேன் மொழியே
யென்பாரும்
துள்ளி யுயிர் புகுந்து தொண்டைக் குழி துடித்து
உச்சிமுத லுள்ளங்கால் எல்லா முயிர் புகுந்து
அச்ச மறத் தும்பி யரகரா வென் றெழுந்து

4000 உத்தமியார் வந்து உதறி யெழுந்திருந்தார்
அத் தல மீதுள்ளோர்அதி சயித் தங்கே துரைப்
போர்
தார் குழலாள் தன்மம் தலைகாத்த தென்பாரும்

தையல் நல்லாள் தன்மம் தலைகாத்த தென்பாரும்
காரிழையாள் செய்தபலன் கைகூடிற் றென்பாரும்

4005 கட்டழகி செய்த தன்மங் கைகூடிற் றென்பாரும்
மாது நல்லாள் புண்ணியமே வந்துதவிற்
றென்பாரும்
மங்கை நல்லாள் புண்ணியமே வந்துதவிற்
றென்பாரும்
தேன் மொழியாள் தானதன்மஞ் செய்தபல
னென்பாரும்
சேயிழையாள் மாதவங்கள் செய்த பல
னென்பாரும்

4010 தையல் நல்லாள் மாதவங்கள் தானதன்மஞ்
செய்த பலன்
கை யுதவி யானபடி காணலாச் சென்பாரும்
திட்டாந் திரமாகக் காணலாச் சென்பாரும்
சென்மம் பிழைத்துத் திரும்பலாச் சென்பாரும்
மட்டாருந் பூங்குழலே மாதே நீரிப் புதுமை

4015 பொன்னுலகு தன்னிலும் நீ போனதுவும்
வந்ததுவும்
இன்னபடி யென்றுரைக்க வேண்டுமென்று
ரெல்லோரும்
அப்போ தமராபதி ஆரணங் கேதுரைப்பாள்
அன்னைபிதா மக்கள் சுற்றமான பேர் தன்மமல்ல
என்னுடைய தன்மம் எனக்குதவி யானதல்ல

4020 பத்தாவின் தன்மமல்ல பாரிலுள்ளோர் தன்மமல்ல
பெற்றோர் இறந்தார் பெருந்தவங்கள் செய்ததல்ல
சித்திரபுத்திரனார் தெய்வீக மானவர் தான்
உத்தமனார் நோன்பை உரையவுகந் தேற்றாமல்
செத்துமியான்பட்ட திகலடிகள் மெத்தவுண்டு

4025 நினையா திருந்து பட்டநிர்ப்பந்த மெத்தவுண்டு
மதியாதிருந்து பட்ட மாதுயரம் மெத்தவுண்டு
கட்டதுட்டப்பட்டு வந்த கண்கலக்க மெத்தவுண்டு
பட்டபட்டபாடு தன்னைப் பார்க்கத் தொலையாது
அறியாமல்பட்டதுயரானாலும் பார்க்கரிது

4030 அடியென்றன்சங்குலக மார்க்குந் தெரியாது
ஆற்ற முடியாது அளவறுக்கப் போகாது
சாற்று கிறேன் எல்லோருந் தான்
கேளுமென்றுரைத்தார்
வெள்ளாள ராளனாலு மெய்க்குலத்தோ ராளனாலும்
கன்ருள ராளனாலும் கல்வியுள்ளோ ராளனாலும்

4035 செங்காற்குழவி எடுத்திருந்தோ மென்னுதே
அங்காடி போனேம் அசந்திருந்தோ மென்னுதே
அசந்தோ மறந்தோ மறிந்திலோ மென்னுதே
அத்தியர் கோன் புந்திரனை அன்பாய்த்
துதியுமென்ருர்
ஆன திரு நோன்பை யடைவாக நோற்றிடுங்கோள்

4040 உத்தமனர் பெருமையை உகந்திருந்து
கேளுங் கோள்
ஊழியோ டூழி உலகமெய்க்க வாழுங் கோள்
கொத்தோடு மாங்காய்க்குலையோடு செவ்விளநீர்
பத்தாவுந் தானும் பரித் திருக்கப் பாவித்தாள்
எள்ளுடனே எண்ணெய் போலெப்போதும்
வாழ்ந்திருக்க

4045 எள்ளு மொருபக்கம் பாலித்தாளேந்திழையாள்
கருதின காரியங்கள் கைகூட வேணுமென்று
கடுகு மிளகும்மிக்கப் பாலித்தார் காரிழையார்
அமராபதி போல்ஐசுவரியமாகு மென்று
அவரை துவரை யெல்லாம்
பாலித்தாளாயிழையாள்

4050 கனகாபுரி போல் கனபவுசுண்டாகவரும்
கடலை சிறு பயிறு பாலித்தா ளேந்திழையாள்
பூமி தனி லுள்ள புதுப் பண்ட மத்தனையும்
பொன்னி னெழுத் தாணியுடன் பொத்தகமுந்
தானிரைத்தாள்
சேரப் படைத்தருளி செச்செயெனப் பணிந்தார்

4055 பாடிக் கதை யுரைத்தார் பார்ப்பாரப்
பெண்களெல்லாம்
கற்றவரும் நோற்றவரும் காதலித்துக்
கேட்டவரும்
பெற்றிடுவோ ரெப்பதமும் பேரும் பெருந் தவமும்
சந்ததமும் வாழ்வரென்று சாற்றினர் சாற்றியபின்
எந்தம்பிரா னேன்பை யெவரெவரு மாசரித்தார்

4060 உற்றிருந்து கேட்டார்க்குங் கதையடவே
தானுரைத்தார்
கற்றிருந்து சொல்பவர்க்குங் காணிக்கையுங்
கொடுத்தார்
பாலித்த பச்சைப் படைப் பெல்லாந்
தானமிட்டார்
மாலைக் குழல் மடவார் மாளிகையிலுள் புகுந்தாள்
ஆரமுலையாரும் அன்ன சுற்றத் துள்ளாரும்

4065 சேரவொரு சந்திசெய்தார் திறமுடனே
சிங்கா தனத் திருந்து செங்கோல்
செலுத்தையிலே
அங்கே அமைத்தபடி வத்துதந்த ஆயிழைக்கு
பாக்குச் செறுக்கிப்பட்டென யுள்ளே போய்
வேர்த்துக் கிறுகிறுத்து வெந்நீருந்தான் குளித்து

4070 பஞ்சணை மெத்தையின்மேல் பள்ளிகொள்ளும்
பாவனையாய்

துஞ்சியே போயிருந்தாள் தூங்கு மஞ்சந்
தன்னுடனே
ஏந்திழையார் தம்மை எடுத்துச் சிவகணங்கள்
பூந்தேரி லேற்றி யவர் பொன்னுலகு சென்று
புக்கார்
தேவர் மலர் சொரிய திக்கிலுள்ளோர்
கொண்டாட

5075 பூமாரி பொன்மாரி புஷ்பமாரி பொழிய
தேவர் மனமகிழத் திக்கி லுள்ளோர் தரன்மகிழ
முத்தி வழிக ளெல்லாம்முக்காலுந்தான் திறக்க
எந்தம் பிரான் நோன்பை இப்படி நோருமென்பார்
இந்த வுரை நூலுள் எல்லோருங் கேளு மென்றூர்

4080 தார் குழலாள் தேசமெல்லாந் தட்டி அறையு
மென்றூர்
பேரிகை யால் தட்டி யறைந்தாரே பேருலகில்
காணுது கண்ட தென்ன காசினியோர்
கொண்டாட
மாளுகங் கொண்டாரும் மாளிகையினுள்
புகுந்தார்
கற்றுணர்ந் தோர் வந்து கதையுரை பாராட்ட

4085 உத்தமனுர் நோன்பு நோற்ரு ருறுதி யுடன்
சித்திரைக்குச் சித்திரையில் சேர்ந்த பவுரணையில்
அத்தைத் தலைக்கிழமை ஆதித்த வாரமதில்
பல்லு விளக்கிப் பசிபட்டினி யிருந்து
இல்ல மெழுகி இடையமுத்திக் கோலமிட்டு

4090 பந்தலிட்டுத் தூக்கமுடன் பந்தல் மேற்கட்டி கட்டி
சந்தனமுங் குங்குமமுஞ் சாய்த்துத் தரை மெழுகி
பிள்ளையார் வைத்துப் பிராமணரை அங்கழைத்து
புண்ணி யாகமம் பண்ணிப் புனலாடித் தானமிட்டு

சந்தி யனுஷ் டானந் தர்ப்பணங்கள்
தான்முகிழ்ந்து

4095 சிந்தை மகிழ்ந்து திருநீற்றுக் காப் பணிந்து
போற்றி யடிபணிந்து புண்ணியரே தஞ்சமென்று
நாற்றாணி முத்து நடுவே யளந்து வைத்து
ஏதுநினைந்தாலு மிடையூறு வாரமல்
தீபதூபங்கள் வைத்துச் செம்பொனிறை
நாழிவைத்து

4100 துன்பமணுகாமல் சுளகு மெழுகி வைத்து
பரிந்து மிகவாழும் பலவிதமுந்தான் படைத்து
நித்திய மனதில் நினைத்த தெல்லாம் கைகூட
பத்தியுடன் பொங்கலிட்டுப் பாலமுதுந்
தான்படைத்து
எப்பதமும் எப்பவுகம் எப்போது முண்டாக

4105 முப்பழமும் பாலு முறை முறையே தான்படைத்து
உண்டு முண்டலலே யென்று! மாமியார்
மாப்பிள்ளையும்
அன்பில்லாப் பத்தர் அறிவில்லாப் புத்திரர்கள்
பாலகரும் பால்பசுவும் பண்ணை கிடை மாடு கன்று
ஆளடிமை எல்லாரு மாட்சி பெரிதாயிருக்க

4110 தொட்டேதான் கூடிச் சுகமாயிருக்க வென்று
கட்டோடே கன்னல் செந்நெல் காய்கறியுந்தான்
படைத்து
சித்திரபுத்திரனர் சென்றங் கெதிர் நடந்து
எந்தனுடன் பிறந்த ஏந்திழையார் வாரவழி
பந்த தூடன்தூக்கமிட்டுப் பாலாடை போடுமென்றார்

4115 தோரணங்கள் கட்டுமென்றார் தூப நிறைகாட்டு
மென்றார்

வாரவழி யெங்கு மலகை மாலேதூக்கு மென்ருர்
திருக்கதை கேட்டுத் திருநோன்பு நோற்றவர்க்கு
தெருக்கள் தெருக்களெல்லாஞ் சிங்காரம் செய்யு
மென்ருர்
ஆடுகிற செக்கும் அம்மியுந் தள்ளு மென்ருர்
4120 கூவுகிற சாவல் குரல்வளையைப் போக்கு மென்ருர்
பாம்புக் குடங்கள் தன்னைப் பால்குடமாய்க்
காட்டு மென்ருர்
அட்டைக் குழிகளெல்லாம் ஆருய்ப் பெருக்கு
மென்ருர்
ஆறு கலேப் பாலாரு யங்கங்கே சூழு மென்ருர்
சித்திர புத்திரரை நோற்ற திருவளைக்கு
4125 தேனு மிளநீரும் தீங்கரும்பும் வைப்பாரும்
சுவாமி திருக்கதையைக் கேட்ட திருவளைக்கு
சீனியும் சர்க்கரையும் தேன்பாலும் வைப்பாரும்
பாலடிசிலோடே பரிந்த முத்தம் வைப்பாரும்
தாளியுடன் வெண்ணெய் தயிர் தூக்கி
வைப்பாரும்
4130 இன்றை முதுமிலே பிளவு சந்தனமும்
பன்னீரும் பாற்குடமும் பாலித் திருபுறமும்
வெள்ளே வசறிவர வெஞ்சாமரையிரட்ட
பல்லவங்கள் கூறிவர பலவாத்திய முழங்க
சத்தஉலகெல்லாஞ் சமுத்திரமுந் தான்முழங்க
4135 சித்திர் புத்திரரைத் தெண்டனிட்டுத் தாள்
பணிந்தாள்
எந்தனுடன் பிறந்த இன்பமே வாருமிங்கே
ஈட சூட்கமே யிருந்தீரோ வென்றழைத்து
சிங்காதனத் திருந்த தேன்மொழியே
யென்றுரைத்தார்
இங்கே இருந்ததிலிம்மை மறுமையுண்டோ

4140 கண்ணூலமுண்டோ மணமுண்டோ
காட்சியுண்டோ
அள்ளியிடப் பணமுண்டோ அய்யமுண்டோ
பிச்சையுண்டோ
பூமி தனி லுள்ள புதுத் தானியங்களுண்டோ
சீர்மை தனிலுள்ள திரவியங்கள் தானுமுண்டோ
பேரும் பெருவாழ்வும் பேராலர் சீராட்டும்

4145 சீரும் பிறந்தகமுஞ் செல்வமுந்தா னிங்குமுண்டோ
இங்கே யிருந்ததனு லேதுமில்லை யன்புடனே
அங்கே சென்றுற் பவிக்க ஆனவரந் தாருமென்ருர்
அரிய பெரிய தொரு சோமாசிக்குற்பவித்து
அதிலும் பெரிய தொரு சோமாசிக்குப் புகுந்து

4150 தலைநம்பிராட்டியாய் சந்ததமும் வாழுமென்ருர்
தப்பறவே சோமாசி தன்மனையில் வந்துதித்து
ஆயிரக் கலக் கல்லுப்பு அன்ருடகங் கரைக்கும்
சோமாசியார் வயிற்றில் சென்மித்தாள்
பொற்கொடியாள்
தானவர்க்கு மேலான தவமுடைய மாப்பிளைகள்

4155 ஆனையத்தனை காயங் கரைக்கு நின்ருடவர்க்கு
அன்று கிழை கழுநீர் ஆயிரஞ் செய்நட்டவர்க்கு
சென்று மனம் பற்று செல்பாண்டியாயிருந்தாள்
செல் பாண்டி தயனகச் சீர் பெறவே வாழ்ந்திட்டு
இன்னவகை யின்னபடி இன்னதென்று கூறிப்

4160 புண்ணியங்கள் செய்து புவியினிலே வாழ்ந்திட்டு
இந்நோன்பு நோற்றவரும் இக்கதையைக்
கேட்டவரும்
சொன்னவரும் கற்றவருஞ் சொர்க்க லோகம்
பெறுவார்

அய்யரருளாலே யதிக சம்பத் துண்டாவார்
ஈச ரருளாலே இனிதூழி வாழ்ந்திருப்பார்

4165 உற்றரும் பெற்றரு முறவின் முறையாரும்
சுற்றத் தார்கூட சொர்க்க லோகம் பெறுவார்
அய்ய ரருள் பெறுவார் அஞ்சுடையார் சீர்
பெறுவார்
அய்யரையும் போலே அனைத்துலகு
மாண்டிருப்பார்
சத்துருக்கள் முன்னே சகுனியர்கள் தங்கள்
முன்னே

4170 தண்டேறி வாழத் தருவர் பதமா மடைவர்.

